# மங்கையர் மலர்



**இது நம்ம வீட்டுக் கல்யாணம்!**

– 'திருமண ஸ்பெஷல்' இணைப்பு

MANGAYAR MALAR ஜூன் 1997 விலை ரூ. 10

## திருமண ஸ்பெஷலில்....






மலர் : 17
இதழ் : 5


# மங்கையர் மலர்


ஜூன் '97






## மற்றும்...



## ஒவ்வொரு மாதமும் விரும்பிப் படிக்கும்....



### கதைகள்...



### பெண்மை போற்றுதும்...



### தெரிந்து கொள்ள....



### மஞ்சுளா ரமேஷின்...



பண்டிகை
காலங்களில்
சார்தா சேலைகள்
அணியும் அழகே
ஓர் பரவசம்.
Sun Silk
Poly Silk Cotton
Sarees
எல்லா பிரபல ஜவுளிக் கடைகளிலும் கிடைக்கும்.
Sharda
SAREES (INDIA)
Pattu Polyester
Sarees & Pavadai.
CHARI

# இது பள்ளிகள் திறக்கும் நேரம்

## ...சில வார்த்தைகள்

மஞ்சுளா ரமேஷ்



"எங்கள் குழந்தைக்கு ஐக்யூ போதாது. மூளை வளர்ச்சி குறைச்சலாக இருக்கு. அதனால்தான் சரியாகவே மார்க் வாங்க மாட்டேன் என்கிறான்' என ஒரு டாக்டரிடம் அழைத்துச் சென்று காட்டினோம். அவர் எங்களை வெளியே உட்கார்த்தி வைத்துவிட்டு அவனிடம் அரைமணி நேரம் பேசினார்.

பிறகு வெளியே வந்து "உங்கள் பிள்ளை நன்றாகத்தான் இருக்கிறான். எட்டு வயதான அவனுக்கு பதினோரு வயது குழந்தையின் அறிவு வளர்ச்சி இருக்கு. உங்களுக்குத்தான் சிகிச்சை தேவை. முதலில் உங்களை சரி செய்து கொள்ளுங்கள்..." என்று சொன்னார். அவர் பிறகு எங்களை உட்கார வைத்துக் கொண்டு சொல்ல சொல்லதான் எங்களிடையே எத்தனை தவறுகள் இருந்திருக்கின்றன என்று தெரிந்தது.

எப்போது பார் அவனை 'படிக்காத முண்டம், உன் தம்பிய பார் அவன் பர்ஸ்ட் வர்றானே, அவன தோள்ல தூக்கிட்டு திரி, சோத்த மட்டும் கொட்டிக்கோ' இப்படி நிறைய சொல்லி அடித்து அவனைக் கொடுமைப்படுத்தி இருக்கிறோம். நாங்களும் இளம் தம்பதிகள்தானே, எங்களுக்கும் குழந்தையை வளர்க்கும் பயிற்சி இல்லையே..."

என்றார். அதுதான், அங்கதான் விஷயமே இருக்கிறது. மனிதர்கள் பள்ளியில் சரித்திரம் படிக்கிறார்கள், பி.காம் படிக்கிறார்கள் அல்லது இன்னும் ஏதேதோ படிக்கிறார்கள். அறிவுத்திசாலிகளாக மாறும் இவர்கள் திருமணம் செய்து கொள்கிறார்கள். ஆனால் குடும்பம் நடத்துவது எப்படி என எந்தப் பள்ளியும் சொல்லித் தரவில்லை. கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் எப்படி அனுசரித்து வாழ்வது என எந்த 'சிலபஸிலும்' போடவில்லை.

ஏன் அவரவர் வீட்டில் பார்த்திருக்க மாட்டார்களா என கேட்கலாம். அதற்கெல்லாம் நேரமில்லாத வாழ்க்கையாக இன்றைய சூழ்நிலை மாறிவிட்டது. குழந்தைகள் பள்ளிகளுக்குப் போகவும் படிக்கவும், மேலும் படிக்கவும் (அவன் மட்டும் ஃபர்ஸ்ட் ரேங்க் வாங்கினான்? நீயும் வாங்கு, ஓடு ஓடு எனத் துரத்தி) பட்டங்கள் வாங்கி வேலைக்குப் பார்த்து, சம்பாதித்து... மற்றவற்றிற்கு ஏது நேரம்?

சரி கணவன் மனைவி குடும்ப உறவுகள் தனி அத்தியாயம். குழந்தைகளுக்கு வருவோம். திருமணமான தம்பதிகளுக்குக் குழந்தையும் பிறந்து விடுகிறது. என்னென்ன



உணவுகள், என்ன தடுப்பூசிகள், சுத்தம் சுகாதாரமான நேப்கின்ஸ், உடைகள் இத்தியாதிகளை டிவியும் பத்திரிகைகளும், சினிமாக்களும் விளம்பரங்களின் மூலமாகவும், ஆரோக்கியக் கட்டுரைகளின் மூலமாகவும் சொல்லித் தந்து விடுகின்றன. நல்ல தரமான பள்ளிகள் 100% ரிசல்ட்டிற்குக் கியாரண்டி தருகின்றன.

ஆனால் முக்கியமான சமாசாரம், அந்தக் குழந்தைகளை மனதளவிலே வளர்க்கும் முறை? எந்தப் பள்ளி, எந்தக் குடும்பம், எந்தப் பெரியவர்கள் சொல்லித் தருகிறார்கள்? குறிப்பாக பெரியவர்களோ, மற்றவர்களோ இல்லாமல் கணவன் மனைவி குழந்தைகள் என வாழும் குடும்பங்களில் அந்தக் குழந்தைகள் படும் கொடுமை ஏன் சித்திரவதை இருக்கிறதே, சொல்லி மாளாது.

இளம் தம்பதிகளுக்குக் குழந்தைகளை எப்படி வளர்ப்பது என்று சொல்லித் தருவதற்கு, பிரச்னைகள் வரும்போது சமாளிப்பதற்கு வழிகாட்டுவதற்கு யாரும் இருப்பதில்லை. அவர்களுக்கு அடிக்கவோ, திட்டவோ ஒரு பொம்மை கையில் கிடைத்து விடுகிறது. பொம்மையான அந்தக் குழந்தையால் எதிர்க்கவோ, பெற்றவர்களின் தவறுகளை எடுத்துச் சொல்லவோ முடிவதில்லை. இதனால் மனதளவில் மிகவும் பாதிப்படைகிறார்கள்.

குழந்தைகளைச் சரியாக அன்பாக வளர்க்க வேண்டும். இல்லையென்றால் அவன் முரடனாகலாம், இவர்களை விட்டுப் பிரிந்து போகலாம், அன்பு செலுத்தாமல் இருக்கலாம், முதிய காலத்தில் இவர்களை ஏனென்று கேட்க நாதியில்லாமல் போகலாம்.

**குழந்தைகளை ஆரோக்கியமாக வளர்ப்பதோடு, அன்போடும் மனநலத்தோடும் வளர்ப்போம்.**

என்பதை ஒரு கொள்கையாகவே, சமூகத்தில் விழிப்புணர்ச்சி இயக்கமாகவே நடத்தினால் தேவலை.

இன்றைக்கு நிறைய ஃப்ளாட்ஸ் வந்திருக்கின்றன. பெற்றோர்கள் ஒருவருக்கொருவர் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளலாம்.

பள்ளிகளில் குறிப்பாக சிறு குழந்தைகளின் பெற்றோர்களான இளந் தம்பதிகளுக்குக் குழந்தைகளை மனோவளத்துடன் எப்படி வளர்க்க வேண்டும் என வகுப்புக்களை எடுக்கலாம் இதை ஒரு சமூக சேவையாகவே பள்ளிகள் செய்யலாம்.

மாதர் சங்கங்கள், அரிமா சங்கங்கள், ரோட்டரி சங்கங்கள் ஆயிரக்கணக்கில்

ஒவ்வொரு
கல்யாண வீடும்
குருக்ஷேத்திரப் போர்க்களம்தான்
வெளிப்பூச்சாய்
வெற்றிச் சங்கு.
உள்ளுக்குள்
போர் முழக்கம்.
பெண் வீட்டார்
அடி வயிற்றில்
நெருப்பு எரிமலைகள்.

'காப்பி சரியில்லை'
'மரியாதை பண்ணினது போறலை'
'ஸ்வீட்டை பூதக் கண்ணாடிலே
தேடணும்'
'பூமாலையா? நார் மாலையா?
திசையெங்கும் புகார்க் காண்டம்.

திருமணம் முடித்து –
பெண்ணின் அப்பா
வெறும் கையோடு
வெதும்பி நிற்பார்
கடன்பட்ட நெஞ்சோடு
கலங்கி நிற்பார்.

ஆடிச்சீர், வளைகாப்பு
அடுத்த லிஸ்ட் பற்றிப் பேச –

# இரண்டாயிரம் காலத்துப் பயிர்!



'இன்று போய் நாளை வா'
என்பார் சம்பந்தி.

கல்யாணம் –
வம்ச விருத்திக்கு மட்டுமா?
சந்தோஷ விருத்திக்கும்தானே....

இன்பத்தைப் பகிருதல்போல்
செலவுகளைப் பகிர்ந்திடுவோம்
பொறுப்புகளைப்
பொதுவில் வைப்போம்.

புதியதோர் பெண் செய்வோம்
மூன்று வயதில்
கல்வி முடிச்சைப்
பெற்றோர் போடட்டும்!
இருபத்தைந்தில்
வேலை முடிச்சைப்
பெண்ணே போடட்டும்!
அப்புறம் –
மூன்றாம் முடிச்சாம்
இல்லற முடிச்சைக்
கணவன் போடட்டும்!

– ஆண்டாள் பிரியதர்ஷினி

## மங்கையர் மலர் &
## ஜெய்மாஷி
## மேரேஜ் சர்விஸஸ்

நம் திருமண ஸ்பெஷலுக்காக 'மறக்க முடியாத திருமண சம்பவம்' போட்டி அறிவித்திருந்தோம். இந்த இதழிலேயே முடிவுகளைச் சொல்லி வாசகிகளை மகிழ்ச்சியில் ஆழ்த்த வேண்டும் என மின்னல் வேகத்தில் செயல்பட்டோம். உங்களிடையே போட்டி அறிவித்து விட்டு தேர்ந்தெடுப்பது அத்தனை சுலபமா? ஆழ்கடலில் முத்தெடுத்த கதைதான்.

நிறையபேர் எழுதியிருந்தது திருமண நேரத்தில் நிகழ்ந்த துக்க சம்பவங்கள்தான். அப்படி நேரும் போது அது மறக்க முடியாத திருமணமாகத்தான் ஆகிவிடுகிறது. ஆனால் அப்படி நடந்த இடத்தில் எது சிறந்தது எனத் தேர்ந்தெடுப்பது மனதிற்கு என்னவோ போலிருக்குமே! ஏதோ சிலதல்ல, எக்கச்சக்கமான கட்டுரைகள் மணமகள் அல்லது மணமகன் உயிரிழந்த சம்பவங்கள்தான். படிக்கும்போது மனதுக்கு வருத்தமாகத்தான் இருந்தது.

பலரகங்களாகப் பிரித்து, படித்து, அக்னி நட்சத்திரத்தில் வேர்த்து சிறந்த ஆறு கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்தோம். இவர்கள் ஒவ்வொருவரும் ஒரு சவரன் தங்கநாணயத்தைப் பரிசாகப் பெறுகிறார்கள்.

தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் கட்டுரை —

# மறக்கமுடியாத திருமணம்

## இப்படியும் ஒரு கல்யாணம்! (ம்ஹூம்...!)

**வீ.** அண்ணா என்று எல்லோராலும் செல்லமாகவும் மரியாதையாகவும் அழைக்கப்பட்ட வீரபாகு என்ற பெயருடைய சுதந்திர போராட்ட வீரர் என் கணவரின் சித்தப்பா ஆவார். பண வசதி படைத்தவரும் உயர்ந்த இலட்சியங்களைக் கொண்டவரும், மிகவும் ஒழுக்க சீலருமான இவர் தன் கொள்கைகளில் மிகக் கவனமாய் இருப்பவர். அது மட்டுமல்லாமல் ஆர்ப்பாட்டங்கள் எதுவுமில்லாமல் மூன்றாம் நபருக்குத் தெரியாமல் நிறைய தான தருமங்களையும் நிறைய உதவிகளையும்

(குடும்ப ஆல்பத்திலிருந்து எடுத்த புகைப்படம்)



செய்து வந்தவர். அதனால் அவருடைய வட்டாரத்தில் அவருக்குத் தெரியாமலேயே வீ. அண்ணா பெயர் பிரபலமாகி விட்டது. வெகு நாட்கள் திருமணமே வேண்டாம் என்றவர் தனது பெற்றோரின் பிடிவாதத்தால் சில நிபந்தனைகளுடன் திருமணத்தையே ஒத்துக் கொண்டார். அதாவது -

1. பெண் வீட்டிலிருந்து வரதட்சணை, நகைகள் மற்றும் சீதன வகைகள் எதுவும் வாங்கக் கூடாது.

2. ஆர்ப்பாட்டங்கள் எதுவும் இல்லாமல் மிகவும் எளிமையாக திருமணம் நடக்க வேண்டும்.

3. பெண் தனது இலட்சியங்களுக்கு ஒத்துப் போக வேண்டும்.

திருமணத்திற்கு மிகவும் வேண்டப்பட்டவர்கள் மட்டும் அழைக்கப்பட்டார்கள். பெண்ணிற்கு நகைகள் மற்றும் துணிமணிகள் மாப்பிள்ளை தன் செலவிலேயே வாங்கினார். மாப்பிள்ளையின் நிபந்தனைபடியே எல்லாம் ஒழுங்காக நடைபெற்று வந்தன.

முகூர்த்த நாளன்று தாலி கட்டும் சமயத்தில் பெண்ணை நன்கு கவனித்த மாப்பிள்ளை கையில் எடுத்த தாலியை திரும்ப தாம்பாளத்தில் வைத்து விட்டு, அருகில் நின்றிருந்த தன்

அண்ணாவின் காதில் ஏதோ முணுமுணுத்தார். அவரும் உடனே வெளியேற, இதைக் கவனித்த பெண்ணின் பெற்றோர்கள், 'மாப்பிள்ளையின் நிபந்தனைகளைத் தவற விட்டோமோ, இதனால் தன் பெண் திருமணம் நின்று விடுமோ' என்ற கலக்கத்துடன் கைகளைப் பிசைந்தவாறு நிற்க, வெளியேறிய மாப்பிள்ளையின் அண்ணா, கைகளில் சில கவர்களுடன் திரும்பியவர் மேடையிலேயே அதைப் பிரித்தார். அதில் சில நகைகள் மின்னியதைப் பார்த்த பெற்றோர் அப்போதுதான் கலக்கம் நீங்கியவர்களாய்,

"மாப்பிள்ளை, நீங்கள் தப்பாக நினைத்து விடாதீர்கள். முதலில் நீங்கள் பெண்ணிற்கு வாங்கி அனுப்பிய நகைகளில் கம்மல்களும் மூக்குத்தியும் இல்லை. நீங்கள் அதை மறந்து விட்டீர்கள். இதை பெரிதுபடுத்த வேண்டாம் என அவற்றை நாங்களே போட்டு விட்டோம். இதைப் பற்றி உங்களிடம் தெரிவிக்காதது எங்கள் தவறுதான்" என்று மன்னிப்புக் கேட்டு விட்டு மேடையிலேயே தாங்கள் போட்ட கம்மல்களையும் மூக்குத்தியையும் கழற்றிவிட்டு புதிதாக வாங்கியவற்றை அணிவித்து விட்டனர். முகூர்த்த நேரம் தவறினாலும் நல்ல நேரம் தவறாமல் தாலி கட்டினார் மாப்பிள்ளை.

அன்று மதியம் விருந்து படைக்கும் விதமும் புரட்சிகரமாகவே இருந்தது.

திருமணத்திற்கு வந்திருந்த அனைவரையும் பந்தியில் உட்கார வைத்து பெண்ணும் மாப்பிள்ளையும் ஜோடியாக தங்கள் கைகளாலேயே உணவு வகைகளைப் பரிமாறி அவர்கள் வயிறார உணவு உண்டபின், அவர்களின் ஆசிர்வாதத்தைப் பெற்று விட்டு, பின் தாங்கள் உணவருந்தினர். இந்த மாதிரி ஆசிர்வாதம் எங்கும் பெற்றதில்லை என எல்லோரும் பேசிக் கொண்டார்களாம்.

அன்று மாலை திருமண ஜோடி சுற்றத்தினருடன் கன்னியாகுமரிக்குச் சென்று அம்மனின் பூஜைகளைக் கண்டு களித்து அம்மனின் ஆசிர்வாதத்துடன் ஏற்கெனவே அமர்த்தப்பட்டிருந்த சத்திரத்தில் இரவு தங்கினார்கள். அன்று எல்லோருக்கும் பொது இரவுதானே தவிர திருமண ஜோடிகளுக்கு முதலிரவு அல்ல.

பின்னால் இந்த சுதந்திர போராட்ட வீரர் இந்திய அரசு கொடுத்த எந்தச் சலுகைகளையும் ஏற்றுக் கொண்டதில்லை.

(வீ. அண்ணா, கர்மவீரர் காமராஜருடன் ஜெயிலில் ஒரே அறையில் பல வருடங்கள் ஒன்றாக இருந்ததாக வரலாறு.)

— காந்திமதி இராமலிங்கம்,
சென்னை - 101.







# பெண்ணுக்கு கல்வி ரொம்ப முக்கியம்!

'சந்திரா டெக்ஸ்டைல்ஸ், பயனீர் எலக்ட்ரானிக்ஸ், 'ஸ்ரீரங்கவிலாஸ் ஜின்னிங் ஆயில்மில்ஸ்' போன்ற பல கம்பெனி களின் டைரக்டர், கோவைக்கே பெருமையளிக்கும் கல்வித்துறையில் மிகப் புகழ்பெற்று விளங்கும் ஜி.ஆர்.ஜி கல்லூரி மற்றும் பள்ளிகளின் பொறுப்பாளர்களில் ஒருவர்; இவர் கம்பெனிகளுக்குப் பொறுப்பேற்றுக் கொண்ட பிறகு நிறுவனங்களின் முன்னேற்றம்; எந்த நேரத்திலும் தன் நிறுவனங்களின் எந்தத் தகவலையும் 'விரல்நுனி'களில் வைத்திருப்பவர்; பணியாளர்களுக்கு ஒரு 'சிம்ம சொப்பனம்' போல் விளங்குபவர்...'

இப்படி நிறைய திருமதி நந்தினி ரங்கசுவாமியைப் பற்றிக் கேள்விப்பட்டு அவரைப் பற்றிய ஒரு உருவத்தைக் கற்பனை செய்து கொண்டு நந்தினியின் அலுவலகத்தை அடைந்தோம். 'எங்க மேடம் 'பப்ளிசிடி'யே விரும்ப மாட்டார். பள்ளி நிகழ்ச்சிகள்ல கூட ஏதாவது போட்டோன்னா ஒதுங்கிடுவார். உங்களுடையதுதான் அவருடைய முதல் பத்திரிகை பேட்டி' என்று அவருடைய பி.ஏ. கூறி அழைத்துச் சென்றார். தள்ளு கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றபோது பிரம்மாண்டமான அந்த மேஜைக்குப் பின்புறம் அமர்ந்திருந்த அந்தப் பெண்ணைப் பார்த்துக் குழம்பிப் போனோம்.

'பதினெட்டு, இருபது வயது மதிக்கத்தக்க இந்தப் பெண்ணா நாம் கேள்விப்பட்டு வந்த மிகப் பிரம்மாண்டமான தொழிலதிபர்...'

நம் முகத்தைப் பார்த்துப் புன்னகைத்தார். அவர் "நான்தான் நீங்கள் பார்க்க வந்த மிஸஸ் நந்தினி ரங்க ஸ்வாமி. நான் டீன் ஏஜ் கேர்ள் இல்லை. வயது முப்பத்திமூணு. ஒரு பையன் அமெரிக்காவில் படித்துக் கொண்டிருக்கிறான். இன்னொரு பையன் கோவையிலே உயர்நிலைப் பள்ளியில்...!"

எல்லாமே இவரைப் பொறுத்த வரையில் ஆச்சர்யமாகத்தான் இருக்குமோ. அவர் சிரித்தார்.

"ஒரு ஆச்சர்யமும் இல்லை. எனக்குக் கல்யாணம் ஆன போது வயசு பதினாலு. பத்தாவது படித்து முடித்தவுடன் என்னுடைய தந்தையார் ஜி.ஆர்.ஜி. குடும்பத்தில் திருமணம் செய்து கொடுத்து விட்டார். நான் அதிகம் படிக்கவில்லை. அதே போலத்தான் என்னுடைய மாமியார் திருமதி சந்திரகாந்தியும். அவருக்கு அந்தக் குறை எப்போதுமே உண்டு. அதைப் போக்கி அவருக்கும் திறமை



யுண்டு என நிரூபிக்கத்தான் என் மாமனார் அவருக்கென்று ஒரு கல்வி நிறுவனத்தைத் தொடங்கி வைத்தார். மிகச் சிறியதாக ஆரம்பிக்கப்பட்ட அந்த நிறுவனம் இன்று பள்ளி, உயர்நிலைப்பள்ளி, கல்லூரி என கிளைத்து விட்டது.

அதே போல எனக்கும் கூட படிக்கவில்லையே என ஆதங்கம் உண்டு. என்ன செய்ய? திருமணமாகி பல வருடங்கள் இல்லத்தரசியாக வீட்டிலேயேதான் இருந்தேன். குழந்தைகள் வளர்ப்பு, குடும்பம் என்பதில்தான் என் கவனம் எல்லாம். என் கணவர் அவருடைய குடும்பத்தவர் போலவே வேட்டைப் பிரியர். எல்லா வேட்டைக்காரர்களைப் போலவேதான் அவருக்கும் ஒருநாள் விலங்குகளின் பால் ஒரு பற்றுதல் ஏற்பட்டது. அவற்றை நல்ல முறையில் பாதுகாக்க வேண்டும் என்பதற்காகவே 'ஜுவலாஜிகல் பார்க்' ஒன்றை ஆரம்பித்தார். அதில் சிங்கம், புலி போன்ற பல விலங்குகள். அவற்றைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டேன். இப்படி வெளி உலகம் அதிகம் தெரியாதவளாகத்தான் இருந்தேன்.



மூன்று வருடங்களுக்கு முன்பு எங்கள் கூட்டுக் குடும்பம் பிரிந்து எங்களிடம் சில தொழிற்சாலைகள் வந்தன. நானும் தொழில் வளர்ச்சியில் பொறுப்பேற்கும் நிர்பந்தம் வந்தது. இந்த மூன்று வருடங்களில் நிறைய தெரிந்து கொண்டேன், நிறைய படித்தேன். ஒன்றுமே தெரியாத ஒரு பெண்ணாக இந்தப் பதவியில் அமர்ந்த நான் இன்று இந்த நிலைக்கு வந்திருக்கிறேன் என்று சொன்னால் அதற்குக் கடுமையான உழைப்பு, கற்றிருந்தவர்களின் ஆதரவும் தான் காரணம். ஆனாலும் நான் முன்பு சொன்னது போல படித்திருந்தேனானால் இவ்வளவு சிரமப்பட்டிருக்க மாட்டேன் என நினைக்கிறேன்..."

"... பட்டதாரியாக இல்லையே என ஏங்குகிறீர்களே. இந்தக்கால பட்டதாரி பெண்மணிகள் எல்லாம் நிர்வாகத் திறமை உடையவர்களா? அல்லது வாழ்க்கையைத் தெளிவாக வரையறுக்கிறார்கள் என நினைக்கிறீர்களா? ஒரு எளிய பாமரப் பெண் தன் வாழ்க்கையில் பிரச்னைகள் ஏற்படும் போது தைரியமான முடிவெடுக்கிறாள். ஆனால் படித்த பெண்கள் குழம்புவதாகத்தான் தோன்றுகிறது..." என்றோம்.

"படிக்காத பெண் தீவிரமான முடிவெடுப்பது என்பது அறியாமையினால் கூட இருக்கலாம் இல்லையா? நல்லது கெட்டது என எதையும் ஆராயாமல் துணிச்சலோடு கூட செய்யலாமே! ஆனால் நீங்கள் சொல்வது போல படித்த பெண்களின் குழப்பத்திற்குக் காரணம் பலவற்றையும் சிந்தித்து ஆராய்ச்சி செய்வதால்தான். ஆனால் இதெல்லாம் வாழ்க்கையில். நான் சொல்வது தொழிலில். பெண் படித்து ஏதேனும் ஒரு தொழிலின் நுட்பம் தெரிந்தவளாக இருக்க வேண்டும். அப்போது அவளால் தைரியமாக எதையும் சந்திக்க முடியும்.

நான் இந்த நாற்காலியில் வந்து அமர்ந்த போது எனக்கு எதுவுமே தெரியாது. நான் கேட்ட கேள்விகள், சந்தேகங்கள் குழந்தைத்தனமாகக் கூட இருந்திருக்கலாம். ஆனால் என்னோடு இருப்பவர்கள் எனக்கு மிகவும் உதவியாக இருந்திருக்கிறார்கள். அதனால்தான் சொன்னேன், ஒவ்வொரு பெண்ணும் படித்திருக்க வேண்டும் என்று..."

**"...நீங்கள் மூன்று தொழிற்சாலைகளை நிருவகிக்கிறீர்கள். புகழ்பெற்ற கல்வி நிறுவனங்களின் டைரக்டர். எப்படி இத்தனையையும் சமாளிக்க முடிகிறது. அதுவும் குடும்பம், குழந்தைகள்..."**

"நான் எல்லாவற்றையும் 'பாலன்ஸ்' செய்து கொண்டுதான் போகிறேன் என்று நினைக்கிறேன். கணவர், மகன், தொழிற்சாலை என நேரம் திட்டமிட்டுக் கொள்கிறேன். ஆபீஸ் நேரத்தில் ஃபைல் பார்ப்பது எனக்குப் பிடிக்காத விஷயம். அவற்றை வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போய் பார்த்துக் கொண்டிருக்கும் போதுதான் என் மகன் சலித்துக் கொள்வான். மற்றபடி பரவாயில்லை..." என்று புன்னகைக்கிறார்.

**"ஆயிரக் கணக்கான தொழிலாளிகள் உங்களிடம் பணியாற்றுகிறார்கள். ஒரு பெண் நிர்வாகி என எப்போதேனும் உணரும் நிலை, உணர்த்தும் நிலை வந்திருக்கிறதா?"**

"தொழிலாளிகளுடன் நேரடியான தொடர்பு என்பது பெரும்பாலும் எனக்கு இருக்காது. என்னுடைய அலுவலக மேலாளர்கள் அவற்றைக் கையாண்டு விடுவார்கள். மிகப்பெரும் பிரச்னைகள் என வரும் போது கடைசி நிலையில்தான் நான் அதில் தலையிடுகிறேன். பொதுவாகவே 'டெக்ஸ்டைல்ஸ்' தொழில் இன்றைக்குப் பிரகாசமாக இல்லை. அவ்வப்போது வருகின்ற பிரச்னைகளை சமாளித்து ஓட்டிக் கொண்டிருக்கும் நிலையில்தான் நாங்கள் இருக்கிறோம்..."

**"உங்களுடைய கல்வி நிறுவனங்களுக்கு நேரத்தை எப்படி ஒதுக்குகிறீர்கள்?"**

"அங்கேயும் அடிக்கடி செல்கிறேன். அட்மிஷன், இன்டர்வியூ நேரங்களில் நிறைய நேரம் செலவிட வேண்டியதாக இருக்கும். என்னுடைய ஆசையே என் பெரிய பிள்ளை படிப்பை முடித்துக் கொண்டு இந்தியாவிற்கு வந்தவுடன் அவனிடம் இந்தப் பொறுப்புகளை ஒப்படைத்து விட்டு நான் கல்வி நிறுவனங்களில் முழுமையாக ஈடுபட வேண்டும் என்பதுதான். பார்க்கலாம், எதிர்காலம் எப்படி இருக்கும் என்று..."

**"இத்தனை சிறு வயதில் இவ்வளவு நிறுவனங்களையும் நிர்வகிக்கிறீர்களே, எப்படி உங்களால் முடிகிறது. ஏதேனும் தியானம், மெடிடேஷன், யோகா..."**

சிரிக்கிறார். "ஸ்பெஷலாக எதுவும் இல்லை. ஆனால் வாரத்தில் மூன்று கோயில்களுக்குப் போவது என்று வைத்துக் கொண்டு இருக்கிறேன். அதே போல ஜோதிடத்தில் எங்கள் குடும்பத்திற்கு ஆழ்ந்த நம்பிக்கை உண்டு. ஜோதிடம் என்றவுடனே எதிர்காலத்தைப் பற்றிய கனவுகளில் மூழ்குவது அல்ல. நமக்கு நல்ல வழிகாட்டியாக ஜோதிடம் அமைகிறது. தெய்வ நம்பிக்கையும், நிகழ் காலத்தில் திட்டமிட்ட என்னுடைய பணிகளும்தான் என்னை செயலாற்ற வைக்கிறது எனச் சொல்லலாம்."

**"மூன்று வருடங்களில் இல்லத்தரசி எனும் பதவியில் இருந்து பெரும் தொழிலதிபர் எனும் நிலைக்கு உயர்ந்து இருக்கிறீர்கள். இதற்குக் காரணம் உங்களுடைய குடும்பமே தொழிலதிபர் குடும்பம். இதுவே சாதாரணமான நிலையில் உள்ள ஒரு பெண்ணால் மூன்று வருடங்களில் பெரும் தொழிலதிபராக உயர முடியுமா?"**

"மூன்று வருடம் என ஏன் கால நிர்ணயம் செய்கிறீர்கள். எங்கள் குடும்பத்தில் ஏற்கெனவே தொழிற்சாலைகள் நடந்து கொண்டிருந்தன. ஆனால் எந்தப் பெண்ணும் தன்னுடைய கடும் உழைப்பினாலும், எதையும் தெரிந்து கொள்ள வேண்டும் முன்னேற வேண்டும் என்ற ஆர்வத்தினாலும் கண்டிப்பாக வெற்றிகரமான தொழிலதிபராக முடியும். காலம் கொஞ்சம் கூட ஆகலாம். அவ்வளவு தான்."

**"கடைசியாக ஒரு கேள்வி. இத்தனை பெரிய போஸ்ட். ஆனால் ஒரு 'டீன் ஏஜ் கேர்ள்' போல இருக்கிறீர்களே. உங்கள் இளமையின் இரகசியம் என்ன..."** என்ற போது அவர் முகம் சிவந்து விட்டது.

"அறிவுத்திறன், மனோ தைரியம், பேச்சுத் திறன் எல்லாமே ஒரு வெற்றிகரமான பெண்ணுக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவிற்கு உடல் ஆரோக்கியமும் அழகை நன்கு பாதுகாத்துக் கொள்ளும் ஆர்வமும் தேவை. அடிப்படையிலேயே நான் அதிகம் உணவில் நாட்டம் இருப்பவள் அல்ல. காலையில் 'வாக்கிங்' போவோம். மற்றபடி எந்தப் பெண்ணையும் போல நானும் என்னைக் 'கேர்' எடுத்துக் கவனித்துக் கொள்கிறேன். அவ்வளவுதான்..." என்கிறார்.

கோவையின் புகழ்பெற்ற சந்திரா டெக்ஸ்டைல்ஸின் அலுவலகத்தில் அதன் டைரக்டர் நந்தினிரங்கசுவாமியின் அறையில் தங்கியிருந்த அந்த ஒன்றரை மணி நேரமும் அவருடைய தீர்க்கமான சிந்தனையை உணர முடிந்தது. எந்தக் கேள்விக்கும் தங்கு தடையில்லாமல் பதில் சொன்னார். திட்டமிட்டபடி ஒவ்வொரு பணியும் அங்கு நடந்து கொண்டிருக்கும் நேர்த்தியைப் புரிந்துகொள்ள முடிந்தது. அவருடைய உதவியாளர்களுக்கும், பணியாளர்களுக்கும் இடுகின்ற அலுவலக உத்திரவுகள் அவருடைய நிர்வாகத்திறன், அவருடைய வெற்றியின் இரகசியத்தைக் கூறிக் கொண்டிருந்தன. நந்தினி ரங்கஸ்வாமி- இளைய தலைமுறைக்கு ஒரு முன்னோடி என்றுதான் சொல்ல வேண்டும்.

**- மஞ்சுளா ரமேஷ்**

அட்டை வண்ணப்படம், படங்கள்:

**ஜி. சுரேஷ்**

தடால்! என சேர் நகர்ந்தது. ஜிவு ஜிவு கோபத்துடன் எழுந்து நின்றார் தனபால்.

"என் சர்வீஸ்தான் உன் வயசு, தெரியுமா? ப்ச, பொம்பளைக்குக் கீழே வேலை பார்க்கணும்னு என் தலையிலே எழுதியிருக்குப் பாரு"

கையில் வைத்திருந்த ஃபைலை காயத்ரியின் டேபிள் மேல் 'பொத்'தெனப் போட்டார்.

தன் இருக்கையில் போய் அமர்ந்தார். அந்த ஆபீஸின் ஹால் முழுதும் வேடிக்கை பார்த்தது.

கோபத்தால் நடுங்கும் கைகளால், புகையிலையை எடுத்து வாய்க்குள் அடக்கிக் கொண்டார். புகையிலையின் கரீர் ருசி கொஞ்சம் அவர் உணர்வுகளைக் கட்டுப் படுத்த முயன்றது.

அனைவரும் தன்னையே நோக்குவது புரிய, சங்கோஜமாகிவிட்டது அவருக்கு.

சட்டென எழுந்து டாய்லெட் ரூம் நோக்கி நடந்தார்.

இப்பொழுது மற்றவர்கள் பார்வை காயத்ரி மேல் விழுந்தது.

அவளின் ரியாக்ஷனை உன்னிப்பாக கவனித்தது.

காயத்ரி ஜூனியர் என்ஜினீயர். தனபால் ஹெட்கிளார்க். அவர் வேலையில் உள்ள தவறை இவள் கட்டிக்காட்ட, தனபாலின் ஈகோ சடாரென பாய்ந்துவிட்டது.





காயத்ரியின் மனசுக்குள் வெப்பக் கொப்பளிப்புகள். கூண்டில் அடைத்த மிருகமாய் உணர்ச்சிகள் அலைந்தன. கூண்டிலிருந்து விடுவித்து விட்டால் பாய்ந்து, குதறி விடும் தனபாலை.

கூடாது! தானும் திருப்பி ஊளையிடுவது தவறு.

வெள்ளைத் தாளை எடுத்தாள். பெரிய சதுரம் வரைந்தாள்! 'வெர்ட்டிகல்' கோடுகள் அதற்குள் முளைத்தன. கூடவே 'ஹரிசான்டல்' (படுக்கை) கோடுகள் இழுத்தாள். பெரிய சதுரத்திற்குள், குட்டிக் குட்டியாய் சிறிய சதுரங்கள் எழும்பின. கோடுகள் இழுக்கும் வேகத்தில் கோபம் மட்டுப்பட்டது. மனசு சமனப் பட்டது.

காயம் பட்ட மனசு அரற்றியது.

'பொம்பளைக்குக் கீழே வேலை பார்க்கறது'

தனபாலின் வார்த்தைகளில் வெளிப்பட்ட கொச்சைத்தனம் மன்னிக்கக்கூடாததாய் பட்டது.

கத்திக்குக் கத்திதான் பதில் என்பது இல்லை. ஆனால், ஏதாவது செய்தாக வேண்டும்.

## கிருஷ்ணா

மூளைக்குள் ஆயிரம் மின்னல்கள் கிளம்பின.

சக ஊழியை வனிதா அருகில் வந்தாள்.

"மேலே உயரதிகாரியிடம் சொல்லிடுங்க காயத்ரி. இல்லேன்னா, உங்க மரியாதை கெட்டுடும். நாலு பேர் நடுவிலே, நட்ட நடு ஹாலிலே இப்படி அசிங்கமாய் பேசலாமா உங்களை?"

இவள் ஆறுதல் சொல்கிறாளா? இல்லை, தன்னைத் தூண்டி விடுகிறாளா?

யோசனையுடன் வனிதாவை வெறித்தாள்.

இன்டர்காம் ஒலித்தது. சீனியர்தான் பேசினார்.

"எனி ப்ராப்ளம் மிஸ் காயத்ரி?"

அதற்குள் பற்ற வைத்து விட்டார்கள்!

"நோ ப்ராப்ளம் சார். பெரிசாய் ஒண்ணுமில்லே. நானே பார்த்துக்கறேன். தாங்க் யூ"

வனிதா ஆச்சரியமாய் பார்த்தாள்.

"என்னங்க இப்படிச் சொல்லிட்டீங்க?"

"என் காயத்துக்கு நானே மருந்து போட்டுக்க விரும்பறேன் வனிதா"

"அப்ப அந்த தனபாலை அப்படியே விட்டுடப் போறீங்களா?"

மறுப்பாய் தலையசைத்தாள்.

"பின்னே? சீனியரே வலிய வந்து கேட்டப்ப சொல்லியிருக்கலாமே இன்டர்காமில்"



**பாத்திரம் தேய்க்க வாங்கும் liquid Soap plastic container ஐ (வாய்ப் பாகம் ஸ்ட்ரா உடன் கூடியது) நன்கு சுத்தப்படுத்தி காய வைத்து எண்ணை நிரப்பி ஸ்வாமி அலமாரியில் வைத்துக் கொண்டால் விளக்குகளுக்கு எண்ணை விடும்போது கீழே சிந்தி பிசுக்காகாது.**

**— அனுராதா**

---

"சீனியரும் ஒரு ஆண் தானே வனிதா"

"புரியலே காயத்ரி"

"சம்பளமும், சலுகைகளும் மட்டும் நமக்கு சமமா வேணுமாம், ஆனால் பிரச்னைன்னா மட்டும் 'ஓ'ன்னு அழுதுக்கிட்டு நம்மிடம் ஓடி வந்துடறாங்க. ச்சே! இந்த பொம்பளைங்களை வேலைக்கு எடுத்ததே முட்டாள்தனம்"

"காயத்ரி!"

"இதை நான் சொல்லலே. நம்ம மேலே ஆண்கள் வைச்சிருக்கிற அபிப்ராயம். அதனாலே, என் பிரச்சினைக்காக நான் யாரையும் சார்ந்து நிற்க விரும்பலே"

பிரமிப்புடன் வனிதா விலகினாள். காயத்ரியிடமிருந்து பெரிய ரியாக்ஷன் எதுவுமில்லாததால், அலுவலகத்தில் மாமூல் வாழ்க்கை திரும்பியது.

தனபாலும் அரைமணி நேரம் 'உர்' என்று இருந்தார். அதற்குள் மதிய உணவு இடைவேளை வர இந்த நிகழ்ச்சியின் சுவாரஸ்யம் நமுத்துப் போனது.

எத்தனை நேரம் ஒருவரையொருவர் பார்க்காமல் தவிர்க்க முடியும்.

ஒரு 'பில்'லில் கையெழுத்து வாங்க தனபால், காயத்ரியின் இருக்கைக்குப் போக வேண்டியிருந்தது.

விறைப்பாய் சென்றார்.

"உட்காருங்க சார்"

காயத்ரியின் அமைதி அவரை மிரள வைத்தது.

"கையெழுத்து வேணும்"

வாங்கிக் கொண்டு எழ முயன்றவரைத் தடுத்தாள்.

"உங்களிடம் பேசணும்"

குறுகுறுப்புடன் பார்த்தார். தான் அப்படிக் கத்தியது உறுத்தியது. கூடவே 'ஹா, என்ன செய்ய முடியும் இவளால்' என்ற அலட்சியம்.

"என்ன?" என்றார் இறுக்கம் தளராமல்.

"நேத்து நீங்க உங்க பெண்ணைப் பற்றி ஏதோ புகழ்ந்து பேசிக்கிட்டு இருந்தீங்களே... ஹாங்... ஏதோ வீட்டுல பிரச்னை, டென்ஷனாயிடுச்சு, பொண்ணுதான் 'டக்'குன்னு ஐடியா கொடுத்தான்னும் நீங்க திருப்பித் திருப்பி தப்பாகவே செஞ்சதுனாலேதான் இந்தப் பிரச்சினைன்னும்..."

தனபால் விழித்தார். உண்மைதான். ட்யூப்லைட் ஃப்யூசாகிவிட்டது. புதுசு வாங்கி மாட்டினார். எரியவில்லை. கழற்றி, மாட்டி, கழற்றி...ம்ஹூம்...

"என்னப்பா, 'ஸ்டார்டர்' போடாமலே வேலை செய்யறீங்க"

அவர் பெண் சுட்டிக்காட்டியதும்தான் தவறு புரிந்தது.

தனியே கழற்றி வைத்திருந்த 'ஸ்டார்'ட்டரை மாட்டி, ஸ்விட்சைப் போட்டதும் பளீர். பெருமை பிடிபடவில்லை அவருக்கு.

"உங்க பொண்ணு சுட்டிக்காட்டின மாதிரிதான் நானும் செஞ்சேன். உங்க வேலையிலே குற்றம் கண்டுபிடிக்கணும்னோ, இல்லை, உங்களுக்கு வேலை பார்க்கத் தெரியலேன்னோ இதுக்கு அர்த்தம் கிடையாது. ஆனால், உங்களோட ஒரு வார்த்தையைத்தான் என்னாலே ஜீரணிக்க முடியலே"

காயத்ரியை நிமிர்ந்து பார்த்துவிட்டு தலைகுனிந்தார்.

"அதென்ன சார் பொம்பளைக்குக் கீழே வேலை பார்க்கறதுன்னு பேச்சு? நாளைக்கே உங்க பெண்ணும் வேலைக்குப் போகலாம். அவளுக்குக் கீழேயும் உங்க மாதிரி சர்வீஸ் ஆன ஆளுங்க வேலை பார்க்கலாம். உங்க பொண்ணை இதே மாதிரி யாராவது பேசினால் ஒத்துப்பீங்களா?"

பளீரென அடித்தது அவள் வார்த்தைகள்.

"ஆபீசுக்குள்ளே பதவிகளும், அதற்குள்ள பொறுப்புகளும், அதற்கேற்றார் போன்ற வேலைகளும்தான் கண்ணுல படணும். நான் உங்களை ஹெட்கிளார்க்காய்தான் பார்க்கறேன் நீங்க என்னை ஜூனியர் என்ஜினியராய்தான் பார்க்க ஆசைப்படறேன். இதுல ஆண், பெண்ணுன்ற பேதம் எங்கிருந்து வருது, சொல்லுங்க?"

அழுத்தமாய் பேசியவளுக்கு, பதில் சொல்ல முடியாமல் திணறினார் தனபால்.

"இதுக்குப்புறமும் புரிஞ்சுக்காம, உங்க ஆண் ஈகோ சண்டித்தனம் பண்ணினால், தாராளமாய் நீங்க வேற செக்ஷனுக்கு மாத்திக்கலாம். நானே ரெகமெண்ட் பண்றேன். இப்ப நீங்க போகலாம்"

அடுத்து வந்த நாட்களில், தனபாலிடமிருந்து செக்ஷன் மாறுவதைப் பற்றிய பேச்சே எழவில்லை.

# இறையருள் சுரக்கும் இசைமேதை

செட்டிநாட்டுக்கும் ராமாயணத்துக்கும் எப்போதுமே ஒருவிதமான தொடர்பு இருந்து வருகிறது. கம்பன் அடிப்பொடி பிறந்த காரைக்குடிக்காரர் பேரா. மா. கண்ணப்பன். இவருடைய ஒரே மகள்தான் இராமாயணம் சொல்கிற சிறு வயது மேதை ஆதிரை!

“எனக்குப் பிடித்த பாத்திரம் மணிமேகலையில் வருகிற ஆதிரை. அதையே என் மகளுக்கும் பெயராய்ச் சூட்டினேன்” என்கிறார் கண்ணப்பன். ஆதிரையின் தாய் அபர்ணா திருவண்ணாமலை பக்கம் எறையூர்க்காரர். ஆங்கில இலக்கியத்தில் எம்.ஏ.

ஒருநாள் சடசடவென்று மழை பொழிந்த நேரம். பேரா. கண்ணப்பனின் வாய் பாவேந்தரின் ‘தகரப் பந்தல் சடசட என்ன’ என்ற பாடல் வரியை முணுமுணுத்தது. அவர் பாடுகிற ‘ரிதம்’ அப்படியே பிடித்துப் போய்த் தானும் பாடியது குழந்தை ஆதிரை. அப்போது வயது மூன்றரை.

குழந்தையின் நினைவாற்றலில் மகிழ்ந்த பெற்றோர் அதை ஊக்கப்படுத்தினார்கள். உடனே இராமாயணத்தைச் சுருக்கமாகக் கதை வடிவில் சொல்லத் தொடங்கினார் கண்ணப்பன். ஒரு முறை சொல்ல இருபத்தைந்து நிமிடம் ஆகுமாம். திருப்பித் திருப்பிச் சாப்பிடும்போது, விளையாடும் போது, உறங்கும் முன் என்று விளையாட்டாகப் பல முறை சொல்லிக் குழந்தையின் மனசில் இராமசரிதம் பதிந்தது. சில நாட்களிலே கதையோட்டம் நன்கு பதிந்து, வேண்டுமென்றே சில பகுதிகளை விட்டு விட்டுச் சொன்னால் கூட ஆதிரை தவறைக் குறிப்பிட்டுக் காட்டிச் சரியாகச் சொல்லச் சொல்லும் அளவுக்கு வளர்ந்தாள்.

பாடல் வடிவத்தில் முதலில் ஆதிரை கற்றுக் கொண்டது அயோத்யா காண்டத்தில் குகன் சொல்லும் பகுதியில் வரும் பாடல்தான்.

ஆடு கொடிப்படை சாடி
அறத்தவரே ஆள
வேடு கொடுத்தது பார் எனும்
இப்புகழ் மே வீரோ?
நாடு கொடுத்த என் நாயகனுக்கு
இவர் நாம் ஆளும்
காடு
கொடுக்கிலர்
ஆகி
எடுத்தது காணீரோ?

இப்படிச் சந்த ஒழுங்கில் மனம் ஈடு பட்டுச் [illegible] பல முக்கியமான கம்பராமாயணப் பாடல்களையும் மனப்பாடம் செய்து கொண்டாள் ஆதிரை.



இராமாயணம் தெரியும். சில பாடல்களும் தெரியும். நன்கு புரிந்து கொள்கிற ஆற்றலும் இருக்கிறது. இதை வைத்து ஒரு நிகழ்ச்சி ஏற்பாடு செய்தால் என்ன என்று சிந்தித்தார் கண்ணப்பன். இவர் கேள்வி கேட்க, மகள் ஆதிரை பதில் சொல்ல என்று ஒரு நிகழ்ச்சி அரங்கேறியது – இங்கல்ல கல்கத்தாவில்! கா.சு. மணியன் ஏற்பாட்டில் கல்கத்தா தமிழ் மன்றத்தில் இந்த நிகழ்ச்சி



பப்பாளிக்காய் ஒன்று ஓசியாகக் கிடைத்தது. மிகப் பெரியது. ஒன்றிரண்டு தரம் சமையலுக்கு உபயோகித்த பின்னும், பாதிக்கு மேல் மீதி இருந்தது. அதன் மேல் தோலை நீக்கி விட்டு கேரட் துருவியில் துருவி, வெள்ளைப் பூசணி வடாத்துக்குப் போல் உளுத்தம் பருப்பு ஊறப் போட்டு. காரம், எல்லாம் சேர்த்து அரைத்து பப்பாளித் துருவலோடு சேர்த்து கலந்து வடாமாகக் காய வைத்து எடுத்து விட்டேன். இப்போ அதை பொரித்துக் குழம்புகளில் போட்டு சாப்பிட தனி சுவையாக இருக்கிறது. பேரன், பேத்தி 'வடை' என்று கேட்டு வாங்கிச் சாப்பிடுகிறார்கள்.

— அஞ்சலி

அரங்கேறியபோது ஆதிரைக்கு வயது நான்கு!

அடுத்த நிகழ்ச்சி காஞ்சிபுரத்தில் நடந்த கம்பர் விழாவில் இடம்பெற்றது. காஞ்சிப் பெரியவர் திருக்கரத்தால் இந்தக் குழந்தைக்கு 'இறையருட் செல்வி' என்ற விருது வழங்கப்பட்டிருக்கிறது.

தமிழ் மொழியில் மட்டுமின்றி இசையிலும் ஆதிரையின் கவனம் பதிந்தது. வீட்டுக்கு வந்த வீணைக் கலைஞர் ஒருவர் சாதகம் பண்ணிக் கொண்டிருந்தபோது ஸ்வரங்களை அப்படியே கவனித்து மனசில் வாங்கித் தான் வைத்திருந்த விளையாட்டு டெலிபோன் கருவி மூலம் ஒலியெழுப்பினாள் ஆதிரை. சீக்கிரமே அந்தக் கருவியை வைத்து 'வரவீணா' வாசிக்கப் பழகி விட்டாள்!

ஒருமுறை மயிலாப்பூர் பாரதிய வித்யா பவனில் பலதுறை அறிஞர்கள் முன்னிலையில் ஆதிரையின் இராமாயண நிகழ்ச்சி நடைபெற்றது. வீணை சிட்டிபாபு உட்பட பலர் அங்கு வந்திருந்தார்கள். அந்த நிகழ்ச்சியில் தம்முடைய டெலிபோன் கருவியில் 'வரவீணா' வாசித்தாள் ஆதிரை. வியந்து போன சிட்டிபாபு, மதுரா டிராவல்ஸ் டாக்டர் வி.கே.டி. பாலன் மூலம் இந்தக் குழந்தைக் கலைஞருக்கு நிஜமான வீணை ஒன்றையே பரிசாக அளித்தார். அத்துடன் நில்லாமல் குழந்தை ஆதிரையைத் தம்முடைய மாணவியாக ஏற்கிறேன் என்றும் சொல்லியிருக்கிறார்.

"ஆனால் நான்தான் ஆதிரையை அவர் கேட்டபடி வீணை கற்றுக் கொள்ள அனுப்பவில்லை..." என்கிறார் கண்ணப்பன். காரணம் குழந்தைக்குப் பயிற்சியளிக்கக் கூடிய வசதி அவருக்கு அப்போது இல்லை என்பதுதான்.

சிங்கப்பூர் மலேசியாவில் மட்டும் நூற்றைம்பது நிகழ்ச்சிகள் நடத்தியிருக்கிறார்கள். தவிர செகந்திராபாத் கல்கத்தா என்று நிறைய நிகழ்ச்சிகள். பேரா. கண்ணப்பன் இப்படிக் கேள்வி பதில் வடிவிலேயே நிகழ்ச்சியை ஒழுங்கு செய்திருந்தாலும், பதில் ஒவ்வொன்றிலும் சமுதாய உணர்வுகள், பண்பாடு, நாகரிகம் போன்ற பயனுள்ள சிந்தனைகள் வெளிப்படும் வகையில் உருவாக்கியிருக்கிறார். சங்கப் பாடல்கள் முதல் வாலியின் ராமாயணம் வரை ஏராளமான பாடல்களை ஆதிரை கணீர் என்ற குரலில் தேவைக் கேற்றபடி சொல்கிறாள்.

எந்தவொரு செய்தியானாலும் அதைக் குழந்தை ஒன்று சொல்கிறது என்பதால் கேட்கிறவர்கள் ஆர்வத்தோடு கேட்கிறார்கள் என்பது நிகழ்ச்சிகள் வெற்றிகரமாக அமைய உதவுகிறது என்கிறார் பேரா. கண்ணப்பன்.

படிப்பில் முதல் தர மாணவி ஆதிரை. செட்டிநாடு வித்தியாச்ரமம் பள்ளியில் ஆறாம் வகுப்புப் படிக்கிற ஆதிரைக்குப் பிடித்தமான பாடம் என்றால் சமூக அறிவியல்தானாம். "பண்டைக்கால மன்னர்கள் ஆட்சி முறை நம்முடைய பண்பாடு, நாகரிகம் இவற்றைப் பற்றியெல்லாம் தெரிந்து கொள்ள முடிகிறதே" என்று கண்கள் மின்னச் சொல்கிறாள் ஆதிரை.

"படிப்படியாக முழு நேரச் சொற்பொழிவுக்கு ஆதிரை தயாராகும் போது நான் முற்றிலுமாக ஒதுங்கிக் கொண்டு விடுவேன்" என்கிறார் கண்ணப்பன்.

இந்த ஆண்டு இளம் மேதைகளுக்கான தெலுங்கு அகாதமியின் யுகாதி புரஸ்கார் - 97 விருது ஆதிரைக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

பேட்டி : **சுப்ரபாலன்**

# ங்கள் மழலைச் செல்வம் அவனது மன்மையான மிருதுவான உலகம்.



## அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல் திட உணவும் அவனைப் போலவே மிருதுவாக இருக்கட்டும்.




இப்பொழுது உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆகிவிட்டது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.

ஆம், நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.

பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.

உங்கள் செல்வமகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம், காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச்சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.

...யில் குறிப்பிட்டுள்ள விதி முறைகளை ...னமாகப் பின்பற்றுங்கள்.

**நெஸ்டம்**

இலவசம்
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25
புது தில்லி-110016.

Nestlé

எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.

IMPORTANT NOTICE : MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY. AFTER 4 MONTHS OF AGE GIVE BABY CEREAL FOODS IN ADDITION TO MOTHER'S MILK.

महत्वपूर्ण सूचना : माँ का दूध आपके बच्चे के लिए सर्वोत्तम है। चार महीने की उम्र के बाद बच्चे को माँ के दूध के साथ-साथ अनुपूरक आहार दीजिए।

# இந்த மாதம் எப்படி?



## மேஷ ராசி :

***அசுவினி, பரணி, கிருத்திகை 1-ஆம் பாதம்.***

முதல் வார முதற்பகுதியில் உங்கள் ராசிக்கு இதுவரை விரயஸ்தானத்திலிருந்து கேது இலாபஸ்தானத்திற்கும் 6-ம் இடத்திலிருந்த ராகு 5-ம் இடத்திற்கும் வருகிறார்கள். கேதுவால் வரும் 1½ ஆண்டுகளுக்கு நன்மையே அதிகமாக நடக்கும். அத்துடன் சிம்மத்திலிருக்கும் ராகுவை குரு பார்ப்பதன் காரணமாக அவரால் தீமையில்லை. சுக்கிரன் குடும்பத்தில் அமைதியையும், மகிழ்ச்சியையும், சுப நிகழ்ச்சிகள் நடப்பதற்கான சூழ்நிலையையும் உருவாக்குவார். இது எத்துறையினர்க்கும் இம்மாதம் பூராவும் பொருந்தும். 'மண்காரகனாகிய செவ்வாய் பொன்னாபரணங்களை வாங்கி அணிந்து புன்னகை பூக்கும்படியான வாய்ப்பை அளிக்கலாம். காவல் துறையினர், கண்காணிப்பாளர்கள், சுங்கத் துறையினர், எரிபொருள் துறையினர், இரசாயன உப்பு, அமிலத் தயாரிப்பாளர்கள், மற்றும் அது சம்பந்தமான துறைகளில் பணிபுரிவோர் ஆகிய அனைவருக்கும் நன்மையைச் செய்வார். கேதுவுக்கு அதி தேவதை கணபதி என்றால் அங்காரகனுக்குப் பழனி சுப்ரமணியர் என்பர். எனவே, தமிழ்நாட்டின் இரட்டைத் தெய்வங்களான கணபதி சுப்ரமணியரின் அருள் பெற இருக்கும் உங்களுக்குக் குறையொன்றும் இல்லை. ஆயினும் புதனின் சஞ்சாரம் சிறு சிறு பிரச்னைகளை எந்த வகையிலேனும் உண்டாக்கலாம். மாதத்தின் பிற்பகுதியில் எச்சரிக்கையுடன் செயல்படுங்கள். இந்த மாதத்தில் பணம் பல வழிகளில் வரலாம். ஆனால் மனக்கட்டுப்பாடுடன் செலவு செய்யுங்கள். புதனும், சூரியனும் ஏன் குருவும் சனியும் கூட சதிசெய்யலாம். எனவே சிக்கனமாக, ஆழ்ந்த தெய்வபக்தியுடன் செயல்படுங்கள். எந்தவித பாதகமும் ஏற்படாது. எல்லாம் சாதகமாகவே முடியும். சிதம்பரத்துச் சிறை மீட்ட கணபதியையும், பழனி முருகனையும் மனதார வழிபடுங்கள்.



## ரிஷப ராசி :

***கிருத்திகை 2, 3, 4 –ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 – ஆம் பாதங்கள்.***

தேவகுருவும் அசுர குருவும் தேவையானவற்றைத் தர இருக்கிறார்கள். அதனால் குழந்தைகளின் கல்விப் பிரச்னைகள் சுமுகமாக முடியும். விரும்பும் பாடத்தில், விரும்பும் கல்வி நிலையத்தில் இடம் கிடைக்கும். இந்த ராசியில் பிறந்துள்ள மாணவ, மாணவிகளுக்கும் இது பொருந்தும். குருபலம் கூடி வந்துள்ளதாலும் 11-ம் இடத்தில் சனி அமர்ந்திருப்பதாலும் புதுத் தொழில்கள் குறிப்பாக இரும்பு மற்றும் திரைப்படத் துறையில் இருப்பவர்களுக்கும், கலைத் துறையினர்க்கும் நல்லதொரு காலம் கனிந்து வந்துள்ளது. அதற்கு சுக்கிரனும் அருள்புரிகிறார். மற்றபடி வேறு கிரகங்கள் உதவும் நிலையில் இல்லை. மாத முதல் வாரத்தில் சில எதிர்பாராத சுப நிகழ்ச்சிகளோ, தனலாபமோ கைகூடிவரும். மற்றபடி நில

**1997 JUNE 1997**

| ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 |
| 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 |
| 29 | 30 | | | | | |



இரண்டு கரண்டி அடைமாவு செலவாகாமல் ஃப்ரிட்ஜில் மிச்சம். இட்லித் தட்டில் எண்ணை தடவி மாவை விட்டு ஆவியில் வேக வைத்து, ஆறிய பின் சின்ன துண்டங்கள் ஆக்கி மிக்ஸியில் இட்டு ஒரு சுற்று சுற்ற "பொல பொல"வென உசிலி ரெடி. பீன்ஸை கறி போல் தாளித்துக் கொட்டி வதக்கி இந்த உசிலியையும் சேர்த்து பருப்பு உசிலி செய்ய பறந்து விட்டது.

— கே. அனுராதா

சம்பந்தமான தாவாவானாலும் கடன் சம்பந்தமான வழக்கானாலும் உங்களுக்குச் சாதகமாக அமையாததால் அதற்கேற்ப வாய்தா கேட்டு வழக்குகளை ஒத்தி வைப்பது நல்லது. அரசியல் துறையில் உள்ளவர்களுக்கு குருவின் அருள் உண்டு. அதனால் எதிர் பாராத பதவி ஒன்று வரலாம். சுக்கிரன் நன்கு சஞ்சரிப்பதால் வெளிநாட்டுப் பிரயாணம் ஒன்று ஏற்பட்டு அதனால் இலாபமும் கிடைக்கும். முயன்றுதான் பாருங்களேன். செவ்வாய், மற்றும் பாம்புக் கிரகங்கள் போன்றவை ஏற்படுத்துகின்ற தடைகளை, நவக்கிரக ஹோமத்தின் மூலம் நீக்கிக் கொள்ளலாம்.



## மிதுன ராசி :

*மிருகசீரிஷம் 3, 4 – ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 – ஆம் பாதங்கள்.*

இராசிநாதனாகிய புதன் சூரியனுடன் சேர்ந்து 12-ம் இடத்திலும், மாதத்தின் பிற்பகுதியில் இராசியிலும் சஞ்சரிப்பதால் செல்வாக்கு, தனலாபம், பந்துக்களுடன் கூடிய உறவு அனைத்திலும் மனம் வருந்தும்படியான சூழ்நிலை உருவானாலும், சுக்கிரன் அனைத்தையும் தாங்கும் நிலையையும், தனலாபத்தையும், மற்றும் மனோதிடத்தையும் தர இருக்கிறார். அத்துடன் 3-க்கு வரும் ராகு எடுத்த காரியத்தில் ஜெயம் உண்டாகும் நிலைமையைத் தருவார். 4-ல் உள்ள செவ்வாய் தாயாரின் உடல்நிலை பற்றிய கவலையைத் தருவதுடன் உங்கள் ஆரோக்கியத்திற்கும் சற்று தொல்லை தரலாம். எனவே இந்த நிலையில் நீங்கள் எந்தவித புது முயற்சிகளிலும் ஈடுபடாமல் இருப்பதே நல்லது எனத் தோன்றுகிறது. ஆன்மிகச் சொற்பொழிவுகள் கேட்டல் கோயில்களுக்குச் சென்று வருதல் போன்ற பக்தி மார்க்கத்தில் மனதைச் செலுத்துங்கள். ஸ்ரீ ரங்கநாதரின் படத்தை வைத்து ஏழு நாட்கள் இரு குத்து விளக்குகளை ஏற்றி, ஸ்ரீ விஷ்ணு அஷ்டோத்திரம் கூறி மலர்களால் அர்ச்சித்து, உங்கள் குறைகளைத் தீர்க்கும்படி வேண்டி, தூப தீப நிவேதனம் செய்து நீராஞ்சனம் காட்டி வரவும். சனிக்கிழமை ஆரம்பித்து, தொடர்ந்து வெள்ளிக் கிழமையில் முடிப்பது விசேஷமாகும். மற்றபடி அனுபவித்துக் கழிக்க வேண்டிய மாதமே.



## கடக ராசி :

*புனர்பூசம் 4-ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.*

மாத ஆரம்பத்தில் புதனும், சூரியனும், உங்களது அன்றாடப் பணிகளில் சிக்கல் ஏதும் வராமல் காப்பார்கள். அத்துடன் மேலதிகாரிகளின் பாராட்டுதலையும் பெறுவீர்கள். சிலர் பொன் நகைகளை வாங்கலாம். அல்லது அடகு வைத்தவைகளை மீட்பதோ, வாங்கிய கடனைத் தீர்க்கவோ வசதியைப் பெறலாம். நிலம் அல்லது வீடு ஒன்று வாங்கும் கால கட்டம் வந்துள்ளது. குருவின் பார்வையைப் பெறும் இந்த இராசியில் பிறந்துள்ள குழந்தைகளுக்கு அல்லது படிக்கும் மாணவ மாணவிகளுக்கு ஏற்றதொரு காலம். விரும்பும் இடத்தில் விரும்பிய பாடத்தில் படிக்க வாய்ப்பு வரலாம். அது தொழில் சம்பந்தமான கல்வியாகவும் அமையலாம் அல்லது மருத்துவம், சட்டம் என ஏதோ ஒன்றாகவும் இருக்கலாம். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலையும் சுபச் செலவும் ஏற்படும். அது மகளின் திருமணத்திற்காகவோ, அல்லது மக்களின் மேற்படிப்புக்காகவோ செய்ய வேண்டியிருக்கும். நவக்கிரகச் சன்னதியில் திங்கள் தோறும் சந்திரனுக்கு விளக்கு ஏற்றுங்கள். நிதிப் பொறுப்பில் உள்ளவர்களும், கைப்பையில் பணம் வைத்துக் கொண்டு பிரயாணம் செய்கிறவர்களும் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. இல்லையேல் திருடர்களுக்குத் திருப்தி அளித்தவர்களாக ஆகி விழிக்க வேண்டிய நிலை உங்களுக்கு ஏற்பட ராகு காரணமாகி விடுவார்.



## சிம்ம ராசி :

*மகம், பூரம், உத்திரம் 1 – ஆம் பாதம்.*

சுக்கிரனும், சூரியனும்



தேங்காய் (சட்னி) இல்லாத பட்சத்தில் தேங்காய் சட்னிதான் வேண்டும்னு அடம் பிடிக்காதீர்கள். இருக்கும் காய்கறிகளை வதக்கி பச்சை மிளகாய், புளி, உப்பு சேர்த்து பிரமாதமாகத் துவையலைத் தயார் செய்து விடலாம்.

- புஷ்பா நரசிம்மன்

உதவும் நிலை. அதனால் கலைஞர்களுக்கும் அரசுப் பணியாளர்களுக்கும் ஆதாயம் உண்டு. பட்டமும், பதவியும் கிடைக்கலாம். மாத இறுதியில் புதனும் உதவுகிறார். அதனால் தொழிலில் முன்னேற்றம் காணலாம். எனினும் கடன் தொல்லை, அரசாங்கத்தாரின் எச்சரிக்கைகள் என ஏதேனும் ஒரு விதத்தில் மனத்தில் சஞ்சலம் இருக்கும். ஜென்ம ராகுவால் உடல்நிலை சற்று பாதிக்கப்படலாம். திடீரென வெளிநாட்டுக்குப் போகும் வாய்ப்பு வரலாம். அது மருத்துவம் சம்பந்தமாகவும் இருக்கலாம். அல்லது தொழில் ரீதியில் ஏற்படும் பிரச்னை காரணமாகவும் அமைய லாம். சனியும், குருவும் பரிவர்த்தனை பெற்ற தால் அவர்களால் நன்மை ஏற்படாவிடினும், தீமைகள் இல்லை எனலாம். பெண் ஒருத்தியின் காரணமாக சில பிரச்னைகள் தோன்ற கேது காரணமாகலாம். அதற்கு அந்த யானை முகத்தோனைச் சரணடையுங்கள். கூட இருந்த உறவினர்கள் பிரிந்து செல்ல வேண்டி வரும். கூட்டுக் குடும்பமாயின் பிரிவினைக்கு வாய்ப்பு உண்டு. இதற்கு அமைதியான வார்த்தைகள், பொறுமையுடன் இருத்தல், சிறு சிறு சச்சரவுகளை அதிகப்படுத்தாமல் இருத்தல் ஆகியவை உதவலாம். பெரியவர்களோ, சிறியவர்களோ அல்லது அரசியல்வாதிகளோ, அதிகாரிகளோ ஒன்று கூறினால் அதற்குப் பதிலுக்குப் பதில் தந்தே ஆகவேண்டும் என்ற நிலையை உருவாக்க வேண்டாம். அதனால் பிரச்னைகள் குறையலாம். ஆலங்குடி சென்று கலக்கம் தீர்த்த விநாயகரையும், குரு பகவானையும் சேவியுங்கள். இல்லையேல் ஓமாம்புலியூர் சென்று தட்சிணாமூர்த்தி சன்னிதானத்தில் மேதா விலாச தக்ஷிணா மூர்த்தி ஹோமம் ஒன்றை நடத்துங்கள். வசதியும், வாய்ப்பும் இல்லாதவர்கள் உங்கள் ஊரில் நடக்கும் சஷ்டி பூஜைகளிலும், ஹோமங்களிலும் கலந்து கொள்ளுங்கள்.



## கன்னி ராசி :

*உத்திரம் 2, 3, 4 – ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 – ஆம் பாதங்கள்.*

சனி, ராகு, செவ்வாயைத் தவிர மற்ற கிரகங்கள் அனைத்துமே ஏறத்தாழ உதவும் நிலையில்தான் சஞ்சாரம் செய் கின்றன. எனினும் மாத ஆரம்பத்தில் சுக்கிரன் 10-ல் இருப்பதால் குடும்பத்திலோ, அல்லது பணிபுரியுமிடத்திலோ ஒரு பெண்ணால் சில அபவாதங்கள் நேரிடலாம். எனவே அத்தகைய சூழ்நிலையை உருவாக்கிக் கொண்டு விடா தீர்கள். சற்று எச்சரிக்கையுடன் எந்தப் பெண்ணிடமும் பழகுங்கள். இது ஆண்களுக்கு மட்டுமல்ல பெண்களுக்கும் பொருந்தும். குருவின் பார்வை இருப்பதால் இராசியில் பிறந்துள்ள மாணவ மாணவிகளுக்கு மனம் போல வாழ்வு என்பதற்கு ஏற்ப அவரவர்கள் இஷ்டப்படி மேற்படிப்புப் படிக்கும் வாய்ப்பு தேடி வரும். சுக்கிரன் மாத இறுதியில் சுப நிகழ்ச்சி ஒன்றுக்கு ஏற்பாடாக அருள் புரிவார். அது உங்கள் மகன் அல்லது மகளின் திருமணமாகவோ கூட இருக்கலாம். சித்திரை, உத்திரம் ஆகிய நட்சத்திரங்களில் பிறந்த ராசிக் காரர்களுக்கு சில பிரச்னைகள் இழுபறி யிலேயே இருக்கும். கொடுக்கல் வாங்கலில் கூட சில பிரச்னைகள் தோன்றலாம். குறிப் பாக மாத ஆரம்பத்தை விட பிற்பகுதியில் நன்மைகள் கூடுதலாக நடக்கும். என்னதான் குரு பார்த்தாலும் பணத்தட்டுப்பாடு இருக்கத் தான் செய்யும். உணர்ச்சிவசப்படாமல் அதை சமாளிப்பதற்கு மனம் விட்டுப் பேசி இட்ட மிட்டுச் செலவு செய்வதற்கு ஆவன செய்வது நல்லது. முடியுமானால் பாப்பாரப்பட்டி நங்கநல்லூர் மற்றும் கிருஷ்ணகிரி போன்ற இடங்களில் உள்ள மந்த்ராலய மகானின் பிருந்தாவனங்களில் நடக்கும் ஸ்ரீ சத்திய நாராயண பூஜையில் கலந்து கொண்டு பிர சாதம் பெறுவதும் ஒரு பரிகாரமாகும். அத னால், தடைபடுகின்ற எந்தச் செயலும் தடைநீங்கப் பெற்று நினைத்தபடி நிறைவேறும்.



## துலா ராசி :

*சித்திரை 3, 4 –ஆம் பாதங் கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 – ஆம் பாதங்கள்.*

# GHOST CALL என்றால் என்ன?

ஓர் அலுவலகத்தில் டெலிபோன் ஆப்பரேட்டராகப் பணி புரியும் என் தோழி ''எங்க ஆபீஸுக்கு அடிக்கடி ghost calls வரும்'' என்றாள். இதன் அர்த்தம் என்ன?

**M. சத்தியபாமா, கோயம்புத்தூர்.**

ஊர் பெயர் குறிப்பிடாமல் வரும் கடிதங்களை நாம் மொட்டைக் கடிதம் என்பதுண்டு. இதற்கு ஆங்கிலத்தில் **anonymous letters** அனானிமஸ் லெட்டர்ஸ்) என்று பெயர். இதுபோன்ற கடிதங்களை **'ghost letters'** என்று சொல்வதுண்டு. இதுபோலத் தொலை பேசியில் பேசுவது யார் என்று குறிப்பிடாமல் சிலர் பேசுவதுண்டு. சில சமயங்களில் மிரட்டுவதும், அசிங்கமாகப் பேசுவதும் உண்டு., இதுபோன்ற தொலைபேசி அழைப்புகளை **'ghost calls'** என்று சொல்லலாம். இதை **Anonymous call** என்றும் சொல்வதுண்டு.

''ஸார் கொஞ்சம் லைன்ல இருங்க அவர் இருக்காறான்னு பார்க்கறேன்'' இவ்விஷயத்தை இங்கிலீஷில் எப்படிச் சொல்வது என்று கேட்கிறார் சென்னை அயனாவரத்திலிருந்து **R. பூங்கோதை** என்பவர்.கொஞ்சம் லைன்ல இருங்க ஸார் என்பதை'**just a minute please** னு சொல்லுங்க.

அவர் இருக்கிறாரான்னு பார்க்கிறேன் என்பதை **'I will see whether he is in** என்று சொல்லலாம்.

இதே விஷயத்தை **Just hold on please, I will findout whether he is available** என்றும் சொல்லலாம்.

ஸார் உங்களுக்கு போன் வந்திருக்கு என்பதை **'Sir, there is a call for you'** என்று சுருக்கமாகவும் சொல்லலாம்.

ஸார், மிஸ்டர் குப்தா லைனில் இருக்கிறார். அவர் உங்களுடன் பேச வேண்டுமாம்'' என்பதை **'Sir, Mr Gupta is on the line he wants to talk to you'** என்று சொல்லவேண்டும்.

இதுபோன்று தொலைபேசியில்



உரையாடும்போது சூழ்நிலைக்கேற்ப எந்தெந்த வார்த்தைகளை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்பதைத் தெரிந்து கொண்டுவிட்டால் நீங்களும் சரளமாக ஆங்கிலத்தில் பேச முடியும்.

ஆர்வமும், முயற்சியும் இருந்தால் ஆங்கிலம் கற்பது மிகவும் சுலபம். அதற்கான பயிற்சியினை அளித்துவருகிறது விவேகானந்தா கல்வி நிலையம்.



ஒரு துண்டு புடலங்காய் கிடந்தது. கறி சமைக்கக் காணாது. அதைப் பொடியாக நறுக்கி வதக்கினேன். அத்துடன் 4 மிளகாய் வத்தல், 2 ஸ்பூன் உ.பருப்பு, சிறிது கடுகு வறுத்து உப்பு புளி சேர்த்து மிக்ஸியில் ஒரு சுற்று சுற்றினேன். ஆகா, துவையல் பிரமாதம். தோசைக்குத் தொட்டுக் கொள்ள ஜோராய் இருந்தது.

- புஷ்பா

ராகுவும், சனியும் உதவும் நிலை – சுக்கிரன் மற்றும் புதன் ஆகியோர் மாதத்தின் முதல் பகுதியில் சுபநிகழ்ச்சிகள் நடக்க உதவலாம். குழந்தைகளின் கல்வி சற்று பாதிப்பை தரலாம். செவ்வாய், குருவின் பார்வை பெறுவதால் கடன் கட்டுக்குள் அடங்கி இருக்கும். அதாவது மேலும் கடன் வாங்க வேண்டிய சூழ்நிலை குறையும். ஒரு கோர்ட் விவகாரத்தில் வெற்றி கிடைக்கலாம். சனியின் சஞ்சாரம் உடலில் ஏற்படும் நோய்களை உடனடியாகக் குணப்படுத்தலாம். இதுவரை பாதித்து வந்த நோயைக் குணப்படுத்தவும், தனலாபம் ஏற்படவும் வாய்ப்பு உள்ளது. சுக்கிரன் 10-ல் இருக்கும் மாதத்தின் பிற்பகுதியில் வார்த்தைகளை அவசரப்பட்டு அனாவசியமாக உபயோகப்படுத்தி அவமானப்பட வேண்டிய சூழ்நிலை ஏற்படக் காரணமாகலாம். அத்துடன் பெண் ஒருத்தியால் பிரச்னை ஒன்று உருவாகலாம். எனவே அம்மாதிரியான சமயங்களில் மௌனமே சிறந்த பரிகாரம். ஏற்றத்தாழ்வு மிக்க மாதம்தான். சுப்ரமணிய புஜங்கம், ஆதித்ய ஹிருதயம் இவைகளைப் படிக்கலாம். இரத்த அழுத்தம் மற்றும் சர்க்கரை நோய் இருப்பவர்கள் கூடியமட்டும் காலை இளம் வெயிலில் குடை ஏதுமின்றி நடை பழக வேண்டாம்.



## விருச்சிக ராசி :

*விசாகம் 4 – ஆம் பாதம், அனுஷம், கேட்டை.*

இராசிநாதனாகிய செவ்வாய் 11ல் இருப்பதால் தனலாபமும் சுகமும் உண்டாகும். ஆனால் இராகுவால் உங்களது கீர்த்திக்கு அல்லது ஏற்கெனவே இருந்த புகழுக்கு ஏதேனும் பங்கம் வரலாம். எனவே பொது வாழ்வில் இருப்பவர்கள் சற்று எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. மூன்றாமிடத்தில் உள்ள குரு கூட உதவும் நிலையில் இல்லை. எனினும் கோட்சாரத்தை விட உங்களுக்கு நடைபெற இருக்கும் தசாபுக்திகள் நன்கு அமைந்திருப்பதால் கவலைப்பட வேண்டியதில்லை. அத்துடன் ஜாதகத்தில் குரு, சனி, ஆட்சி உச்சம் பெற்றிருந்தால் கூட நல்லவையே நடக்கும். சுக்கிரனால் பலவிதத்தில் நன்மை நடக்கும். தடைப்பட்ட எந்த முயற்சியிலும் தடைநீங்கி வெற்றி உண்டாகும். அது திருமணமோ, வீடுகட்டுவதில் ஏற்பட்ட தடங்கலோ, பதவி உயர்வில் ஏற்பட்ட சிக்கலோ எதுவானாலும் நீங்கி உங்களுக்கு நினைத்தபடி வெற்றி கிடைக்கும். மாதத்தின் முற்பகுதியில் தாம்பத்ய உறவில் சிறு சச்சரவு ஏற்பட்டு நீங்கும். ஏதாவது ஒரு காரணம் பற்றி குடும்பத்திலிருந்து சில நாட்கள் பிரிந்து இருக்க வேண்டிய நிலை ஏற்படலாம். அது பணி மாற்றம் காரணமாகக் கூட இருக்கலாம். ஆழ்ந்த பக்தியும், அமைதியான தியானமும் உங்களுக்கு நல்லதொரு நிம்மதியைத் தரும்.



## தனுசு ராசி :

*மூலம், பூராடம், உத்திராடம் 1 – ஆம் பாதம்.*

இரண்டில் இராசிநாதன் பரிவர்த்தனை பெற்ற நிலையில் சஞ்சரிப்பதால் நன்மைகள் கூடுதலாக நடைபெறும். மாதத்தின் முற்பகுதியில் சுக்கிரனால் தாம்பத்திய உறவில் சிறு விரிசல் ஏற்பட்டு, மாதத்தின் பிற்பகுதியில் அதே சுக்கிரனால் சரியாகிவிடும் நிலை தெரிகிறது. எனவே, அதற்கேற்ப நடந்து கொள்வது நல்லது. கேது இனி குடும்பத்தில் இருக்கும் வரை சகல விதத்திலும் நன்மை புரிவார். ஆறில் உள்ள சூரியனும் புதனும் மாத ஆரம்பத்தில் உங்களுக்கு ஒரு பதவி உயர்வு அல்லது புதுத் தொழில் ஆரம்பிக்கத்தக்க தொரு சூழ்நிலை இவைகளை உருவாக்கலாம். வழக்கு ஒன்றில் வெற்றி உண்டாகும். சுபநிகழ்ச்சி ஒன்று நடக்கும். முருகனது அருளும் உங்களுக்குக் கிடைக்கும். எனவே நீங்கள் எடுக்கும் எந்த முயற்சியிலும், நீங்கள் எந்தத் துறையைச் சார்ந்தவராக இருப்பினும் தனலாபம் உண்டு வெற்றியும் உண்டு. இந்த நாட்களில் எடுக்கும் படங்களினால் பணவசூல் எதிர்பார்த்ததையும் விட அதிகம் கிடைக்கும். நடிப்புத் துறையினர்க்கு நல்லதொரு தருணம். அதுபோலவே படிக்கும் மாணவ மாணவிகளுக்கும் மனம் போல கல்வி அமையும். குடும்பநலனும் நன்கு

அமையும். குரு பார்ப்பதால் செவ்வாய் உங்கள் இராசியைப் பார்ப்பதால் உண்டாகும் தீமைகள் குறையும். தட்சிணாமூர்த்திக்கு அர்ச்சனை செய்யுங்கள்.



## மகர ராசி :

*உத்திராடம் 2, 3, 4 – ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 –ஆம் பாதங்கள்.*

மாதம் பூராவும் சனியும், மாதத்தின் பிற்பகுதியில் புதனும் சூரியனும் உதவும் நிலை. எனவே இரும்புத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்குக் கூடுதலான ஆதாயம் உண்டு. மாதத்தின் பிற்பகுதியில் அத்துறையில் உள்ளவர்களுக்கும் குறிப்பாக அரசியலில் ஈடுபட்டுள்ளவர்களுக்கும் ஏதேனும் ஒருவிதத்தில் ஆதாயம் உண்டு. அது தனலாபமாகவும் இருக்கலாம். அல்லது பதவி உயர்வாகக் கூட அமையலாம். ஆனால் குடும்பத்திலும் சரி, வெளிவட்டாரப் பழக்கங்களிலும் சரி. சில பிரச்னைகள் உருவாக மற்ற கிரகங்கள் காரணமாகலாம். அனுபவித்துக் கழிக்க வேண்டிய மாதம். தசாபுத்திகள், ஜாதகத்தில் அமைந்துள்ள கிரக அமைப்புகளுக்கு ஏற்ப நன்மைகள் கூடுதலாக நடக்கலாம். சகிப்புத்தன்மை விட்டுக் கொடுக்கும் தன்மை, மன்னிப்போம், மறப்போம் எனும் மனப்பான்மை இருந்தால் தொல்லைகள் குறையலாம். கடன் தொல்லைகள், தொழிலில் மந்த நிலை மேலதிகாரிகளின் கெடுபிடிகள் என ஏதேனும் ஒருவிதத்தில் மனத்தில் அமைதி குறையலாம். ஆழ்நிலை தியானமும், இறையுணர்வுடன் கூடிய எதையும் தாங்கும் இதயமும் இருப்பின் நாள் என்ன செய்யும்? கோள் என்ன செய்யும்? கவலையை விடுங்கள். கடமையைத் தொடருங்கள். எல்லாம் நல்லபடியே நடக்கும். ஏனெனில் கோட்சார ரீதியாகப் பார்க்கும் போது நீச்சனும், நீச்சன் நின்ற நாதனும் பரிவர்த்தனை பெற்றிருக்கிறார்கள் என்பதை யும் கவனத்தில் கொள்ள வேண்டும்.



## கும்ப ராசி :

*அவிட்டம் 3, 4 – ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 – ஆம் பாதங்கள்.*

மாதத்தின் முற்பகுதியில் சுக்கிரனும், புதனும் குடும்பத்திற்கும், தனலாபத்திற்கும் உதவும் நிலை உண்டு. மற்றபடி பலவிதங்களிலும் தேக்க நிலைதான் தெரிகிறது. தசாபுத்திகளுக்கு ஏற்ப பலன் மாறுபாடு அடையும். எனினும் அஷ்டமஸ்தானத்தையும், சுகஸ்தானத்தையும் குரு பார்ப்பதால் பாதகம் அதிகம் ஏற்படாது. ராசிப்பலனையே பெரிதாகக் கொள்ளாமல் விதியை மதியால் வெல்லலாம் என்பதற்கேற்ப சூழ்நிலைக்கு தக்கபடி முழுமுயற்சியுடன் சவால்களை ஏற்பதுதான் முறை. அதற்குரிய ஆற்றலைத் தரும்படி உங்கள் இஷ்டதெய்வத்தை வேண்டலாம். அல்லது ஸ்ரீ ஆஞ்சநேய ஸ்தோத்திரம் படிக்கலாம். தைரியமாகச் சோதனைகளை எதிர்த்து நின்று ஏற்றுக் கொள்பவர்கள் கட்டாயம் வெற்றியைப் பெறுவார்கள். அந்த நிலையில் அனுபவித்துக் கழிக்க வேண்டிய மாதமே. இது எத்துறையினர்க்கும், எப்பாலவர்க்கும் பொருந்தும். புது முயற்சி எதிலும் இறங்க வேண்டாம்.



## மீன ராசி :

*பூரட்டாதி 4 – ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.*

மாத ஆரம்பத்தில் புத சுக்கிர பரிவர்த்தனையும், சூரியனது சஞ்சாரமும், மாதம் பூராவும் ராகுவின் நிலையும், குரு சனி பரிவர்த்தனையும் உங்களுக்கு சாதகமாக உள்ளன. அதனால் குழந்தைகளின் கல்வி நன்கு அமையும். பதவி உயர்வு உண்டு; எதிர்பார்த்த சுபநிகழ்ச்சி எந்தவிதத் தடையுமின்றி நடக்கும். மண்காரகனாகிய செவ்வாயை குரு பார்ப்பதால் ஒரு நில சம்பந்தமான வழக்கில் வெற்றி கிடைக்கும். அல்லது இதுவரை விற்காத மனை ஒன்று விலை போகும். கேது ஒருவனே சற்றுத் தடங்கல்களை உண்டாக்கலாம். மாதத்தின் பிற்பகுதியில் சுக்கிரனால் ஒரு சுப நிகழ்ச்சிக்கு



**முடியும்போது அவ்வப்போது எல்லாப் பயறுகளையும் (100 கிராம் அல்லது 200 கிராம்) வாங்கி ஊற வைத்து பின் உலர்த்தி வெறும் வாணலியில் வறுத்து உப்பு, காரம் சேர்த்து பாட்டிலில் எடுத்து வைத்துக் கொண்டோமானால் குழந்தைகளுக்குக் கொறிப்பதற்குக் கொடுக்கலாம். இதனால் குழந்தைகளுக்கு புரோட்டீன் சத்தும் கிடைக்கும்.**

**— புஷ்பா**

# மாதம் ஒரு மந்திரம் :

## ஸௌபாக்யங்களைத் தரும் ஸ்வர்ண கௌரி :

அகில உலகத்தையும் தன் அருட்பார்வையால் காத்து வரும் அகிலாண்டேசுவரி எனும் லோகமாதாவுக்கு ஆயிரம் நாமங்கள் உண்டு. பர்வத ராஜகுமாரியாகிய அந்த அன்னையை ஸ்வர்ண கௌரி என்பர். எவர் ஒருவர் ஸ்வர்ண கௌரி விரதத்தை அனுஷ்டிக்கிறார்களோ அவர்களுக்குச் சகல காரியங்களும் கைகூடி வரும். அத்தகைய ஸ்வர்ண கௌரியை கீழ்க்காணும் ஸ்லோகத்தின் மூலம் ஆராதிப்பவர்களுக்கு ஸகல சௌபாக்யங்களும் கிடைக்கும். குணம் மிகுந்த குழந்தைகள், மனமறிந்து நடக்கும் மணவாளன் செய்யும் செயல்களில் வெற்றி, பூரண ஆயுள், ஆனந்தமயமான வாழ்க்கை என அனைத்தும் பெறலாம். நவக்கிரகங்களால் ஏற்படும் எந்தக் கஷ்டத்தையும் தாங்கி வெற்றியுடன் மீளலாம். எனவே ஒவ்வொரு நாளும் கீழ்க்காணும் ஸ்லோகத்தைக் குறைந்தது 11 முறை காலையில் நீராடி விட்டு நெற்றிக்கு இட்டுக் கொண்டு பாராயணம் செய்வோமாக.

***நமஸ்காரம் நமஸ்தே கிரிஜே தேவி***<br>
***நமஸ்தே லோக நாயகி!***<br>
***நமஸ்தே! – ஸர்வபாபக்னி ஸ்வர்ணகௌரி நமோஸ்துதே***<br>
***புத்ரான்தேஹி தனம் தேஹி ஸௌபாக்யம் தேஹி ஸுவர்தே!***<br>
***அன்யாம்ச்ச ஸர்வ காமாம்ச்ச தேஹி தேவி நமோஸ்துதே***

இந்தத் திவ்யமான மந்தரத்தை வீட்டில் உள்ள அனைவருமே ஒன்றுகூடி கோரஸாகக் கூட கூறலாம். குறிப்பாகத் தடைபடுகின்ற எந்த சுப நிகழ்ச்சியும் நிறைவேறும். திருமணம் விரைவில் கைகூடும். புத்திரப்ராப்தி ஏற்படும், ஏற்பாடு ஆகும். இந்த இராசிக் குழந்தைகளுக்கு இஷ்டம் போல் கேட்ட பள்ளியில் கேட்ட பாடத்தில் கல்வி கற்க அனுமதி கிடைக்கும். வெளிநாட்டுப் பிரயாணம் ஒன்று ஏற்பட்டு வெற்றியும் கிடைக்கும். விநாயகப் புராணத்தைப் படிப்பது நல்லது.

**- ஜெயலட்சுமி கிருஷ்ணன்**

*(நிறைய வாசகர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஜெயலட்சுமி கிருஷ்ணனின் தொலைபேசி எண் தருகிறோம் - 4430991)*

# இம்மாத இல்லத்தரசி

## சமையல் கூப்பன்

பொருள் : **உப்புமா** கடைசி தேதி :**15.6.97**

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்



# நான்

கயாம்மா?"

"உம்... ஊர்ல லட்சுமி குழந்தைகள்லாம் சௌக்யமா...?"

"நடுவுல கொஞ்ச நாள் அவளுக்கு உடம்பு சரியில்லா!! இருந்



வீட்டைப் பூட்டிக் கொண்டு படியிறங்கிய போது எதிர்பட்டான் ராகவன். வர்த்தினியின் பெரிய பிள்ளை. சுமார் இருபத்தைந்தாண்டுகளாய் டில்லியில் இருக்கிறான். ஆறு மாதங்களுக்கு முன் அப்பா இறந்த போது வந்தவன்... மீண்டும் இந்தப் பக்கம் வருகை இப்போதுதான். மாசிகம் போன்ற சாஸ்திர சம்பிரதாயங்களில் அடியோடு நம்பிக்கை இல்லாதவன். அப்பாவின் சாம்பலை நதியில் கரைத்ததுடன் தம் கடமை முடிந்தது என்றிருப்பவன். அவன் தம்பியும் அப்படியே...

இடுப்பில் செருகியிருந்த சுருக்குப் பையினின்று சாவி எடுத்து கதவைத் திறந்து சுவரோரமாய் செருப்பை விட்ட வர்த்தினி மகனை உள்ளே அழைத்தாள்.

"எப்ப வந்தே...?" அவள் பார்வை மகனின் வெற்றுக் கை மீது படிந்திருந்தது.

சுவரோரமாய் இருந்த பெஞ்ச் மீது உட்கார்ந்தான் ராகவன். "இன்னிக்கி தான். விடியறதுக்குள்ளே ரயில் வந்துட்டது..."

சமையலறைக்குச் சென்று தண்ணீருடன் வந்தாள் வர்த்தினி. தம்ளரை மகனிடம் கொடுத்துவிட்டு சற்று தள்ளியிருந்த மர ஈஸிசேரில் உட்கார்ந்தாள்.

"உடம்புக்கு ஒண்ணுமில்லாம இருக்

# நானாய்...

**தெலுங்கு மூலம் : அப்பூகி சாயாதேவி**

**தமிழாக்கம் : சாந்தா தத்**

தது. இப்ப கொஞ்சம் பரவாயில்லை..."

"என்னாச்சு...?"

"எல்லாம் மாதாந்திரத் தொல்லைதான். இப்பல்லாம் அவஸ்தை கொஞ்சம் அதிக மாகவே இருக்கு..."

"நின்னு போற சமயம். ஒரு வருஷம் ரெண்டு வருஷம் இப்படித்தான் படுத்தும். மருந்து சாப்பிடறாளா...?"

"டெஸ்ட் செய்ததில் உள்ளே சின்னதா கட்டிகள் போல இருக் குன்னார் டாக்டர். அவ அப்பா ஹோமியோபதி டாக்ட ராச்சே... ஆபரேஷன் எது வும் வேண்டாம், மாத் திரைகளிலேயே கரைச்சுடலாம்னார். அதைத்தான் தொடர்ந்து சாப்பிட்டுக்கிட்டிருக்கா..."

"பொண்ணோட படிப்பு முடிஞ்சுட்டதா, பெரியவன் வேலையிலிருக்கானா?"

"அவனுக்கு அமெரிக்கா போகணும்னு. அதுக்கு வேற பரீட்சை எழுத ணும். அதுக்கு படிச்சிகிட் டிருக்கான். சின்னவளுக்குப் படிப்பு இன்னும் ஒரு வரு ஷம் இருக்கே..."

நல விசாரிப்புகள் முடிந்த பிறகு மேற் கொண்டு என்ன பேச வதென்று தோன் றாது எழுந்து



சமையலறைக்குச் சென்றாள் வர்த்தினி. கம்பியில் தொங்கிக் கொண்டிருந்த பிரம்புக் கூடையிலிருந்து நன்கு கனிந்த கொய்யாப்பழங்கள் எடுத்து கழுவி துண்டங்கள் போட்டு தட்டில் வைத்து மகனிடம் நீட்டினாள். நாக்கைக் கடித்துக் கொண்டான் ராகவன். அம்மாவிற்கு ஏதாவது பழங்கள் வாங்கி வந்திருக்கலாம். பயணக் களைப்பில் தோன்றவில்லை. புறப்படும் போது லட்சுமியாவது ஞாபகப்படுத்தியிருக்கலாம். ரயிலிலிருந்து இறங்கியது முதல் மீட்டிங்கில் மும்முரமாக இருந்தாகி விட்டது. அது முடிந்ததும் ஆட்டோ பிடித்து நேராக இங்கு வந்தாயிற்று. ஏதோ யோசனைகளில் இருந்ததால் வழியில் பழக்கடைகள் பக்கம் பார்வை கூடச் செல்லவில்லை.

குற்றஉணர்வுடன் பழத்தட்டை பக்கமாய் நகர்த்தினான். "இந்த நேரத்தில் பழம் எதுக்கு. வரும்போதுதான் டிபன் காப்பியெல்லாம் முடிச்சுட்டு வந்தேன்... ஆமா... எங்க கிளம்பிகிட்டிருந்தே...?"

"கடைத்தெருவில் ஒரு சின்ன வேலை..."

"ஏதாவது வாங்கி வரணுமாம்மா... என்னன்னு சொல்லு. நான் வாங்கிட்டு வரேன்..."

"பரவாயில்லே. அப்படி ஒண்ணும் அவசரமில்லே..."

"ஒருத்தியா இங்க கிடந்து திண்டாடணுமான்னா கேட்க மாட்டே. எங்களோட இருக்கலாமில்லன்னா டில்லி கிளைமேட் ஒத்துக்காதுங்கறே. பாஷை புரியாதுன்னு இன்னொரு சாக்கு வேற. மாதவிகிட்டயும் இருக்க மாட்டே. பொண்ணு வீட்ல இருக்கக் கூடாதுங்கறே. சரி... கேசவன் அருகிலேயே இருக்கான். அவனை உன்னோட வச்சுக்கலாமில்லையா...? அவனுக்கும் இஷ்டம்தான். நீதான் வேணான்னுட்ட போகட்டும்... அவனிடம் போய் இருக்கலாமில்லையா... அவன் வீடு ரொம்ப சின்னது.... கஷ்டம்கறே... எல்லாத்துக்கும் இப்படி ஏதோ ஒரு காரணம் சொன்னா எப்படிம்மா....?"

"இப்ப என்ன ஆகிவிட்டதுன்னு... நான் இங்க இருக்கறதுல உங்களுக்கென்ன கஷ்டம்...?"

"எதுவும் ஆகலைதான். இன்னிக்கி வரை சரி. இனிமேல் ஏதாவது ஒண்ணு ஆச்சன்னா...? திடீர்னு உடம்பு சுகமில்லாம போனா யார் பாத்துப்பா? நீ என்ன சின்னப் பொண்ணா... எழுபது வயசன்னா சும்மாவா... அஜாக்கிரதையா இருக்கலாமா?"

"கவலைப்படாதே. அவ்வளவு சீக்கிரமா எனக்கு ஒண்ணும் ஆயிடாது. கல்லு மாதிரி இருக்கேன்..."

"உம்... உன் பிடிவாதம்தான் தெரிந்த விஷயமாச்சே...?"

வர்த்தினி பதில் சொல்லவில்லை.

"சமையல் ஆயிட்டதா?"

"இன்னிக்கி சனிக்கிழமை, சாப்பிட மாட்டேன்."

சாப்பிடச் சொல்லி ஒரு பேச்சுக்காவது சொல்லவில்லையே என்றிருந்தது ராகவனுக்கு. அம்மா ஏன் இப்படி மாறிப் போய் விட்டாள்? கொஞ்ச நாள் முன்பு அப்பா தங்கை தம்பி குழந்தைகள் என்று வீடு நிறைந்திருந்து இடம் போதாமல் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்த போது கூட டில்லியிலிருந்து வரும்போது ஹோட்டலில் இறங்கினால் அம்மாவுக்கு எவ்வளவு கோபம் வரும்...! வீடு இருக்கும்போது ஹோட்டலில் தங்கி காசை வாரி இறைக்க வேண்டுமா என்று கத்துவாள். இப்போது தனியாகத்தானே இருக்கிறாள்... இத்தனை நாள் கழித்து வந்திருக்கிறோம். ஹோட்டல் எதற்கு, இங்கு வந்திருக்கலாமே என ஒரு பேச்சு கேட்கவில்லை. இரண்டு மாதங்களாய் பணம் அனுப்பவில்லை என்ற கோபமோ...?

"ரெண்டு மாசமா பணம் அனுப்பலே. ஏதோ வேலை இருந்துகிட்டே இருக்கா... முடியலே. கொஞ்சம் சிரமமாத்தான் இருந்திருக்கும் உனக்கு. கேசவன் ஏதாவது தந்துகிட்டிருக்கானா?"

"அவனுக்கு என்ன பிரச்னையோ...?" சாதாரணமாய்ச் சொன்னாள் வர்த்தினி.

"ஐயோ... பின்ன எப்படி சமாளிக்கறே? எனக்கு நாலு வரி எழுதக் கூடாதா...?"

"என் ஒருத்திக்கு என்ன பெரிய செலவு இருக்கு? பின்பக்க போர்ஷன் வாடகை எனக்கு எதேஷ்டம். நீங்க அநாவசியமா சிரமப் பட வேணாம்..."



ஜவ்வரிசி வடாமை சாதாரணமாய் வட்ட வட்டமாக இடுவோம். ஸ்பூனால் நீளவாக்கில் இட்டு துண்டு போடுங்கள். குழந்தைகளுக்கு சிப்ஸ் போல பொரித்துத் தரலாம்.

- கி. மஞ்சுளா

# மாணிக்கக் கல்லின் பலன்கள்

'காலம் ஒருநாள் மாறும் நம் கவலைகள் யாவும் தீரும்' என்ற வானொலியில் இசைத்த பாட்டு வரிகளை ரசித்தபடி வீட்டு வேலைகளை முடித்த நான், கைகளைப் புடவைத் தலைப்பில் துடைத்தவாறே, அப்பாடா! என்று ஊஞ்சலில் வந்து அமர்ந்தேன். ஊஞ்சலில் ஆடிக் கொண்டே அருகிலிருந்த மாத இதழ்களைப் புரட்டிக் கொண்டிருந்த போது, அருணா ஜெம்ஸ் அண்டு டைமண்ட்ஸ் விளம்பரம் என் கண்ணில் பட்டது. ஏற்கனவே பலர் வாயிலாக அந்தக் கடையைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்த நான், நேரில் சென்று பார்த்த போது ஆடம்பரமில்லாத அறையில் எளிமையாக ஒருவர் அமர்ந்து ஜாதகப் பலன்கள் கூறிக் கொண்டிருந்தார். 'நவரத்தினக் கடை என்றால் ஷோ-வாக இருக்கும்' என்று எதிர்பார்த்து வந்த நான் அந்த சூழலைப் பார்த்து திரும்பிச் செல்லாமல் உள்ளே சென்று அமர்ந்தேன். ஜாதகப் பலன்கள் கூறியவர்தான் நவரத்தினக் கடை உரிமையாளர் **திரு. கந்தையா பிள்ளை** என்பதைத் தெரிந்து கொண்டேன்.

என்முறையும் வந்தது. அவர் கூறிய ஜாதக விபரங்கள் அனைத்தும் உண்மையானதாகவும், மனதிற்கு திருப்தியாகவும் இருந்தது. என் ஜாதகப்பலனுக்குரிய இரத்தினம் கெம்பு இரத்தினம் (Red Ruby) என்றும் கெம்பு இரத்தினத்திற்குரிய பயன்களையும் கூறிய போது என்னுள் தோன்றிய வியப்பிற்கு அளவே இல்லை.

**திரு. கந்தையாபிள்ளை** அவர்கள் கெம்பு ரத்தினம் பற்றி கூறியதாவது:-

நவரத்தினங்களின் மகிமையை எளிதாக மதிப்பிட முடியாது. கிரகங்களுக்கும், நவரத்தினங்களுக்கும் முக்கிய தொடர்பு உண்டு. அதாவது கிரகங்களின் ஒளியானது நவரத்தினங்களிலும் ஊடுருவுகின்றது என்பதே உண்மை. நவரத்தின வகைகளான கெம்பு, முத்து, பவளம், பச்சை, புஷ்பராகம், வைரம், நீலம், கோமேதகம், வைடூரியம் போன்றவற்றில் முதன்மையாக விளங்குவது சூரியனுக்குரிய கெம்பு இரத்தினம் தான். அனைத்து கிரகங்களுக்கும் மையநாயகனாக (மூலகாரணமாக) சூரியனை வணங்குவது போல் நவரத்தினங்களின் மையமாக மதிக்கப்படுவது சூரியனுக்குரிய கெம்பு இரத்தினம்தான். நல்ல மனிதனை 'மனிதருள் மாணிக்கம்' என்று அழைப்பது போல் நவரத்தினங்களில் கெம்பு இரத்தினத்தை **'மாணிக்கம்'** என்று அழைக்கிறார்கள். நவரத்தினங்களின் சக்திகளை அனுபவ பூர்வமாகத்தான் உணர முடியும். ஒருவருக்கு ஜாதக பலனில் சூரியன் சரியான கிரகத்தில் அமையாவிட்டால் ஜாதகக்காரர்களுக்கு பிரச்னை அதிகமிருக்கும், சரியான குடும்பம் அமையாமை, தொழில் தடை, புத்திர பாக்கியமின்மை, வியாதி, வாழ்நாள் முழுவதும் துன்பம் போன்ற இடர்களை அனுபவித்தே தீர வேண்டும்.

இதனைத் தவிர்க்க சூரியனுக்குரிய கெம்பு இரத்தினத்தை அணிவதால் அணிந்தவருக்கு முதன் முதலாக அவரது தோற்றத்திலேயே கம்பீரம் ஏற்படுவதை உணரலாம். பண்டைக் கால மன்னர்களின் கிரீடத்திலும், மற்ற ஆபரணங்களிலும் கெம்பு இரத்தினம் பதிக்கப்பட்டு இருக்கும். சூரியனுக்கு முன்னால் கிரகங்கள் அஸ்தங்கம் (பலம்) ஆவது போல் கெம்பு இரத்தினம் அணிந்த மன்னர் முன் எதிராளிகள் பய உணர்ச்சியினால் அடங்கி மன்னருக்கு மரியாதை கொடுக்கும் தன்மையை ஏற்படுத்துகிறது.



அதே போல் அந்தக் காலத்துப் பெண்கள் தாங்கள் அணியும் ராக்கொடி, ஜடைபில்லை, வளையல், மோதிரம், நெக்லெஸ் (கழுத்து ஆரம்) போன்ற நகைகளில் பெரும்பாலும் கெம்பு இரத்தினம் பதித்து அணிந்திருந்ததால் அவர்களது இல்லத்திற்கு சூரியனின் பார்வை கிடைக்கும்படியான சூழ்நிலை அடைந்து எல்லாவிதமான பலன்களையும் அடைந்தார்கள் என்பது நிதர்சனமான உண்மை.

விலையுயர்ந்த கெம்பு இரத்தினமாக கருதப்படுவது இரத்தச் சிவப்பு நிறமுள்ள பர்மா இரத்தினங்களைத்தான். இரத்த ஓட்டம் தடைபட்டால் உடலுக்கு உயிரோட்டமில்லை. அதுபோல் தரமில்லாத இரத்தினத்திலும் உயிரோட்டமிருக்காது. கெம்பு இரத்தினம் வாங்கும் போது பர்மா கெம்புதானா என்று கேட்டு வாங்குவது நல்லது. தற்போது பர்மா சுரங்கத்திலிருந்து இரத்தினம் கிடைப்பது அரிதாக இருப்பதால் பழைய இரத்தினங்கள்தான் வியாபாரத்திற்கு வந்து கொண்டிருக்கிறது.

கெம்பு இரத்தினமானது அணிபவர்களுக்கு தெம்பும், தைரியமும் கொடுப்பதால் குடும்ப ஷேமம் விருத்தியடைகிறது. தம்பதிகளுக்குள் ஒற்றுமை பெருகி உடல் ஆரோக்கியத்தையும் கொடுக்கிறது. நீரழிவு, மாரடைப்பு, இரத்த அழுத்தம் போன்ற வியாதிகளின் பிடியிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக விடுபட செய்யும். இந்த இரத்தினத்தை வெள்ளியிலோ, தங்கத்திலோ பதித்து அணியலாம். தங்கநகை போன்று தரமான நவரத்தினங்களுக்கும் மறுவிலை உண்டு.

நவரத்தினங்களை வாங்குபவர்கள் ஏமாற்றுபவர்களை கண்டு முன்னெச்சரிக்கையோடு வாங்குவது நல்லது. அதுபோல் வியாபாரிகளும், எத்தனையோ துயர்களை சுமந்து வரும் வாடிக்கையாளர்களை வியாபார நோக்கம் ஒன்றே குறியாக கருதி தரமான இரத்தினங்களைத் தராமல் ஏமாற்றுவது பாவமான செயலாகும். உணவில் விஷத்தை கலப்பவர்களுக்குக் கூட கடவுளிடம் சிறிதளவு பாவமன்னிப்பு உண்டு. ஆனால் தரமில்லாத இரத்தினங்களைக் கொடுத்து ஏமாற்றுபவர்களுக்கு மன்னிப்பே கிடையாது என்றார்.

நவரத்தினங்களின் தன்மையை புரிந்து கொள்ள அனுபவமும், திறமையும் உள்ளவர்களால் மட்டுமே முடியும். மேலும் நவரத்தினங்களை பற்றி மட்டும் முழுமையாக தெரிந்தால் போதாது. ஜாதகப் பலன்கள் பற்றியும் முழுமையாக கணிக்கத் தெரிந்திருக்கணும். இவை இரண்டும் மிகத் தெளிவாகத் தெரிந்தவரால் மட்டுமே தரமான ஜாதி இரத்தினங்களை தேர்வு செய்ய முடியும். எந்தக் கடை வியாபாரி தான் விற்ற இரத்தினங்களை மீண்டும் 60 - 70% விலைக்கு தாங்களே வாங்கிக் கொள்கிறார்களோ அந்த கடைதான் தரமான இரத்தினம் விற்கும் கடை என்பதை புரிந்து கொள்ளலாம்.

வாடிக்கையாளர்களின் மனநிறைவே எனது வியாபாரத்தின் மூலதனம் என்று கூறிய **திரு. கந்தையா பிள்ளை** அவர்களின் நல்லெண்ணத்தைக் கண்டு பாராட்டி விடை பெற்றேன்.

எருக்கை சமித்தில் ஆசையுள்ளவர், சிவந்த கிரணமுள்ளவர், லிம்மாதிபதி காச்யப கோத்ரம் - நவக்கிரக மண்டலத்தில் நடு நாயகமாக விளங்கும் சூரிய பகவான் சதா மங்களத்தைச் செய்யட்டும்.

குறிப்பு: வாடிக்கையாளர்களின் விருப்பத்திற்கிணங்க பிரதி வாரம் ஞாயிற்றுக்கிழமை தோறும் காலை 10 மணி முதல் மாலை 2 மணி வரை அலுவலகம் திறந்திருக்கும்.

## அருணா ஜெம்ஸ் அண்டு டைமண்ட்ஸ்

37, நடேசன் தெரு (சிவா விஷ்ணு கோயில் அருகில்), தி. நகர், சென்னை – 600017. போன் : 4338394

VISWAROOPA/97



**வெளியில் கிளம்பும் நேரத்தில்தான் குழந்தைகள் காது திருகை தொலைத்து விட்டு வந்து நிற்கும். தற்காலிகமாக பென்சில் அழிக்கும் ரப்பரில் சிறிது வெட்டி மாட்டினால் ஜம்மென்று பிடித்துக் கொள்ளும். தெர்மகோல் அட்டையிலும் சிறிது வெட்டி மாட்டலாம்.**

**– பி. ஜானகி**

வாடகை எவ்வளவு வருகிறது என்று கேட்க தயக்கமாக இருந்தது ராகவனுக்கு. ஆனால் அது ஒன்றும் பெரிய தொகையாக இருக்காது என்று தெரியும். வர்த்தினியும் இவ்வளவென்று சொல்லவில்லை.

“சரி... ஏதாவது அவசியம் வந்தா எழுது. உன்னால முடியலேன்னா கேசவனையாவது எழுதச் சொல்லு. இப்ப கூட ஒண்ணும் முழுகிப் போய்டலை. உன் மனசை மாத்திக்கப் பாரு. கேசவனை உன்னிடம் வச்சுக்க. எந்த பிரச்னையும் இருக்காது...'' எழுந்து கொண்டான் ராகவன்.

எதுவும் பேசாது மகனை வழியனுப்ப ஈஸிசேரிலிருந்து எழுந்தாள் வர்த்தினி. ராகவன் கை சட்டை பாக்கெட்டிலிருந்த பர்சைத் தொட்டாலும் வெளியே எடுக்கவில்லை. கொஞ்சமோ நஞ்சமோ பாங்கிலிருந்து வட்டி வருகிறது. வாடகைப் பணம் வேறு. தேவைப்பட்டால் கேட்பாள். தனக்குத்தானே சமாதானம் செய்து கொண்டபடி வெளியேறினான்.

வர்த்தினி கதவைப் பூட்டிக் கொண்டு கிளம்பினாள். வெய்யில் கொஞ்சம் குறைந்திருந்தது. இரண்டு தெருக்கள் தள்ளியிருந்த கணபதி கடைக்குச் சென்றாள்.

“வாங்க பெரியம்மா. நல்லா இருக்கீங்களா? நீங்க எதுக்கு இவ்வளவு தூரம்? சொல்லியனுப்பியிருந்தா பையனை அனுப்பி வச்சிருப்பேனே...” புருஷன் இருந்தவரை இந்தப் பக்கம் வந்தறியாதவள் இப்போது இந்த வெய்யில் நேரத்தில்... அப்படி என்ன தலைபோகிற காரியமாக இருக்கும் என அந்தத் தட்டானுக்கு ஆச்சரியமாக இருந்தது.

“இந்த மாலை அறுந்து போய்ட்டது. பத்த வச்சுத் தருவியான்னு....” சுருக்குப்பையினின்று முத்தும் பவளமும் சேர்த்துக் கோர்க்கப்பட்ட மாலையை எடுத்து கணபதியிடம் கொடுத்தாள்.

கணவர் இறந்த பத்தாவது நாள் தாலிச் சரடு, கருகுமணி மாலை, மூக்குத்தி ஆகியவை அவளை விட்டு அகன்ற பிறகு கழுத்து மூளியில்லாமல் இருப்பது இந்த மாலையால் தான். இரண்டு நாட்கள் முன்பு தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தபோது முறுக்கிக் கொண்டு அறுந்து படுக்கையில் விழுந்திருக்கிறது. காலையில் எழுந்தபோது முதலில் கண்ணில் பட்டது அதுதான். மூளிக் கழுத்தோடு திரிய எப்படியோ இருந்தது. இங்கு வரும் இந்நிமிடம் வரை தலைப்பை இழுத்துப் போர்த்தி கழுத்தை மறைத்துக் கொண்டாலும் வெற்றுக் கழுத்து நெஞ்சை உறுத்திக் கொண்டே இருந்தது.

கணபதிக்கு சொல்லியனுப்பலாமென்றால் சமயத்திற்கு யாரும் அகப்படவில்லை. அதுவுமின்றி யாரையாவது பிடித்து தகவல் தெரிவித்தாலும் இந்தச் சின்ன வேலைக்காக வருவது சந்தேகம்தான். அப்படி வராவிட்டால் அவள் தானே போயாக வேண்டும்...

அப்படியும் அடுத்த வீட்டு மீனாட்சியம்மாவின் மருமகளைக் கேட்டுப் பார்த்தாள்... கொஞ்சம் பற்றவைத்துக் கொண்டு வருகிறாயா என்று.

“அடடா.. கேட்காதவர் கேட்கறீங்க. சமயத்துக்கு என்னால உதவ முடியலையேன்னு வருத்தமா இருக்கு. இன்னிக்குப் பாத்து அம்மா வீட்டுக்குப் போக வேண்டியிருக்கு. உள்ளூராக இருந்தாலும் உங்க வேலையை முடிச்சுக் கொடுத்துட்டே போவேன். ரயிலேற வேண்டியிருக்கே... தப்பா நினைச்சுக்காதீங்க.''

மீனாட்சியம்மாவைக் கேட்பதும் சுவரைக் கேட்பதும் ஒன்றுதான். சாமானியமாய் வெளியில் கிளம்ப மாட்டாள். தங்கத்தை ரிப்பேருக்குக் கொடுத்தனுப்புமளவிற்கு வேறு யார் மீதும் நம்பிக்கை இல்லை. ஆபீஸ் வேலையாக டில்லியிலிருந்து வந்து கொஞ்ச நேரமே அவளுடன் இருந்து விட்டுச் சென்ற பிள்ளையிடம் அந்த வேலையை ஒப்புவிக்க தயக்கமாக இருந்தது. ஆனாலும் ஒரு சின்ன விஷயத்திற்குக் கூட எத்தனை நாள்தான் பிறரை எதிர் பார்க்க முடியும்...? மேலும் வெளியிடங்களுக்குச் சென்றே பழக்கமில்லாதவள் திடீரென்று இப்படிக் கிளம்பினால் பார்ப்பவர்கள் என்ன நினைப்பார்கள் என்று எத்தனை நாட்கள்தான் நத்தையாய்ச் சுருண்டிருக்க முடியும் நினைப்பவர்கள் உதவிக்கு ஓடி வரப் [illegible]றார்களா என்ன...?

இரண்டு நாட்கள் இப்படியே கழித்தவள் இப்போது பவள மாலையுடன் புறப்பட்டு விட்டாள். புருஷன் இருந்தவரை படியிறங்க வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. வீட்

டிற்கு வேண்டிய சகலமும் அவரே மொத்தமாய் வாங்கி வந்து விடுவார். படிப்பு கெட்டு விடும் என்று பிள்ளைகளைக் கூட அனுப்ப மாட்டார். அவளையும் அனுப்ப விட மாட்டார். அவர்களுக்கு வேலை கிடைத்து கல்யாணமும் ஆனபிறகு அவரவர் வழி அவரவர் களுடையதாயிற்று.

''இந்தாங்க பெரியம்மா. போட்டுப் பாருங்க...''

கணபதி காசு வாங்க மறுத்தபோது இருபது ரூபாய் நோட்டை நீட்டி பெற்றுக் கொள்ளுமாறு வற்புறுத்தினாள் வர்த்தினி.

''இருக்கட்டும்மா. இந்தச் சின்ன வேலைக்குக் காசு தரணுமா...'' ஏதோ பழைய விசுவாசம் அவருக்கு.

மறுநாள் சில மளிகைச் சாமான்கள் வாங்கிக் கொண்டு வீடு திரும்பிக் கொண்டிருந்த போது எதிர்திசையிலிருந்து வந்து கொண்டிருந்த கேசவன் அவளைப் பார்த்ததும் விடுவிடென நடந்து வந்தான்.

''என்னம்மா இது...?'' நிஷ்டூரியமும் கோபமுமாய்க் கேட்டான்.

''எதைக் கேட்கறே...'' என்றாள் வர்த்தினி புரியாதவள் போல்.

அவளிடமிருந்து பையை வாங்கிக் கொள்ள முயன்றபோது சரேலென பை இருந்த கையை பின்னுக்கு மறைத்துக் கொண்டாள்.

''பரவாயில்லே. அவ்வளவா கனம் இல்லே... வா போகலாம்...''

வீடு சென்றதும் பெஞ்சு மீது உட்கார்ந்த கேசவன் அவளையும் உட்காரச் சொன்னான்.

வாழைக்காய் பொடிசெய்வதற்கு அதை கேரட் துருவலில் துருவுவதற்கு முன், இஞ்சியையும் சிறிதளவு அதில் துருவிக் கொண்டால், இஞ்சியின் மணத்துடன் சுவையாக இருக்கும். குழந்தைகளுக்கும் வாயில் இஞ்சி அகப்படாது. உடம்பிற்கும் நல்லது.

– ராதா சுந்தரம்



''அம்மா... என்னதான் நினைச்சிண்டிருக்கே நீ?''

''நீ என்ன கேட்கறேன்னு தெரியலையே...''

''ஆமா... உனக்கு எதுவும் தெரியாது பார். ஊர்ல எங்க பேரைக் கெடுக்கணும்னே கங்கணம் கட்டிகிட்டிருக்கயா?''

''அப்படி நான் என்ன செய்துட்டேனாம்...''

''இன்னும் என்ன செய்யணும்... தடி தடியா ரெண்டு பிள்ளைங்க இருக்காங்க... யாரும் வேணாம்னு இந்த வயதில் இப்படித் தனியா இருக்க வேண்டிய அவசியம் என்ன...? எங்களைப் பத்தி நாலு பேர் நாலு விதமா பேச வச்சிட்டயே... இந்த தள்ளாத வயதில் மாங்கு மாங்குனு மளிகைச் சாமான்களைச் சுமந்து வரணுமா...?''

''என்னை விட பத்து வயது பெரியவர் உங்கப்பா. கடைசி வரை அவர் செய்யலையா இதெல்லாம். அப்ப எதுவும் நினைக்கக்காத அந்த நாலு பேர் இப்ப எதுக்கு வாயை மெல்லணுமாம். எது எதுக்கோ முடிச்சு போடாதே கேசவா. இப்ப கூட நான் தனியா இல்லே. பின் போர்ஷன்காரர்கள், அக்கம் பக்கத்து மனிதர்கள்னு எத்தனை பேர் என்னைச் சுத்தி... நீங்களும் அப்பப்ப வந்து போய்க் கொண்டிருக்கீங்க. நான் தனியா இருக்கேங்கறது உன்னோட பிரமை...'' என்று சொன்னவள் கூடவே நினைத்துக் கொண்டாள். 'அப்படிப் பார்த்தால் வாழ்க்கையில் நான் தனியாக இல்லாதது எப்போது....'

''அவ்வளவு தூரத்திலிருந்து அடிக்கடி வந்து பார்க்கறது கொஞ்சம் சிரமமாத்தான் இருக்கு...''

''எதுக்கு சிரமப்படணும்... ஏதாவது முக்கிய விஷயம்னா ஒரு கார்டு எழுதிப் போடறது...''

''நாங்க இங்க வந்துட்டா தொல்லையே இல்லே. நீயும் நிம்மதியா இருக்கலாம்...''

''இப்ப நான் நிம்மதியாத்தான் இருக்கேன்...'' இதுபற்றி இனி பேச்சு தேவையில்லை என்பது போல் எழுந்து உள்ளே சென்றாள்.

தட்டில் பிஸ்கட்டுகளுடன் திரும்பி அவனிடம் கொடுத்தாள்.

''காப்பி கலக்கட்டுமா...?''

''வேணாம். குடிச்சுட்டுதான் வந்தேன்...'' ஏகத்துக்குக் கசப்பு தெறித்தது குரலில். அவன் தற்சமயம் இருக்கும் வாடகை வீடு மிகவும் சிறியது. விவரம் தெரிந்த இரு குழந்தைகளுடன் சிரமமாக இருந்தது. அதனுடன் ஒப்பிடுகையில் இந்த வீடு விசாலமானது என்றுதான் சொல்ல வேண்டும். பெரிய பெரிய அறைகள் நான்கு... சுற்றிலும் நிறைய காலி இடம்...

மூன்றாம் மனிதர்களுக்கு வாடகைக்கு விட வேண்டிய அவசியம். என்ன... தள்ளாத வயதில் இவளுக்கு இத்தனை பேராசை ஆகாது.

என் வீட்டில் உள்ள இரு நாற்காலிகளில் சாய்ந்து கொள்ளும் பகுதியில் பின்புறம் இரண்டு ஆணிகள் நீட்டிக் கொண்டிருந்தன. பலமுறை என் புடவை, கணவர் பேண்ட் பதம் பார்த்தும் வாஷர் வாங்கக் கை வரவில்லை. ரஸ்னா பாட்டில் [பாக்கெட்டில் உள்ள சிறிய பாட்டிலின் மூடி] மூடியில் கோணி ஊசியை சூடு பண்ணி ஓட்டை போட்டு ஆணிமேல் பொருத்தி விட்டேன். இப்பொழுது பிரச்னையும் தீர்ந்தது. பார்க்கவும் அழகாக இருக்கிறது. இப்பொழுது என் வேலை பாட்டில்களின் மூடியை பத்திரமாக சேர்த்து வைப்பதுதான்.

– திருபுரா ஸ்ரீராம்



பிள்ளைகளும் பேரக் குழந்தைகளும் கூட இருக்க வேண்டும் என்கிற நியாயமான ஆதங் கம் கூட இல்லையே... இப்படிக் கூட பெற்ற வள் இருப்பாளா...? – எரிச்சலுடன் நினைத்துக் கொண்டான்.

அவன் கல்யாணம் ஆனதுதான் தாமதம். தனிக்குடித்தனம் போக வேண்டுமென ஒற் றைக்காலில் நின்றாள் மாலதி. மாமியாரின் மடி, ஆசாரம் வெகுவாய் பயமுறுத்தியது. தாக் குப்பிடிக்க முடியாமல் திணறிப் போனவன் அம்மா, பெண்டாட்டி இருவரில் யார் வேண்டுமெனத் தீர்மானித்துக் கொள்ளச் சொல்லி தேங்காய் உடைப்பது போல் பளி ரெனச் சொல்லி விட்டாள். மறு பேச்சின்றி அப்பா அம்மாவிற்குத் தூரமாய் வீடு பார்த் தான் கேசவன். எதுவும் பேசாமல் விழிநீரை விழுங்கிக் கொண்டாள் வர்த்தினி. ஏதாவது சொன்னால் மட்டும் அதன்படி நடந்து விடப் போகிறதா என்ன...? அந்த வீட்டில் அவள் குரல் என்றுமே ஓங்கியதில்லை. அதிகாரம் முழுவதும் அவள் கணவரிடம்தான்... அவர் வைத்ததுதான் சட்டம் என்றிருந்தது. கேசவன் தனிக்குடித்தனத் திட்டம் தெரிந்தபோது முத லில் தாம் தூம் என ஆர்ப்பாட்டம் செய்தார். பிறகு என்ன நினைத்தாரோ – என்னவோ, 'உன் இஷ்டம்' என்று அமைதியாகி விட்டார் அப்பா. அதன்பின் கேசவனுக்குக் குழந்தை குட்டி என குடும்பம் பெரிதாகி சுமைகள் அழுத்தியதால் அதிக வாடகை கொடுத்து பெரிய வீட்டிற்கு குடிபோக முடியாத நிர்ப் பந்தம். தனிக்குடித்தன ஆசையில் ஓடோடி வந்து வீட்டின் நெருக்கடி இப்போது பய முறுத்த... கேசவனை நச்சரிக்க ஆரம்பித்தாள் மாலதி. மாமியாரை எப்படியாவது சரிகட்டு மாறு ஓயாமல் துளைத்தெடுத்தாள். அந்த வீட் டிற்குச் சென்று விட்டால் வாடகை மிஞ்சுவது டன் பிள்ளைகளுக்குக் கல்லூரியும் காலேட் டும் தூரம்தான். மாமியார் ஓய்ந்து உட்காரும் ரகமல்ல... இதனால் தனக்கும் கொஞ்சம் ரெஸ்ட் கிடைக்கும் என்றெல்லாம் லாப நஷ்டக் கணக்கு போட்டாள்.

அங்கு வந்தது முதல் நெஞ்சு கணகண வென்று எரிந்து கொண்டிருந்தது. அம்மா மீது ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது. இவள் மனதை எந்தவிதத்தில் காயப்படுத்தலாம் என்ற கோபம் எழுந்தது. பிஸ்கட்டைத் தொடக்கூட இல்லை. 'பிஸ்கட் கூட வாங்கிச் சாப்பிடுகிறாள் பார்' என்று எரிச்சலுடன் நினைத்துக் கொண்டான். குழந்தைகளுக்குத்தான் கொடுப்பாளே தவிர அவள் பிஸ்கட் சாப்பிட்டு எப்போதும் பார்த்ததில்லை.

வர்த்தினி மௌனமாய் உட்கார்ந்திருந் தாள். அவள் மனத்திலும் ஆயிரம் எண்ணங் கள் போலும்... ராகவன் மாதம் தவறாது அனுப்பும் காசை எப்படிச் செலவு செய்ய லாம் என்று யோசித்துக் கொண்டிருக் கிறாளோ...? எரிச்சல் இன்னும் அதிகரிக்க சரே லென எழுந்து கொண்டான்.

"அப்ப நான் கிளம்பறேன்..."

தூக்கிவாரிப் போட எழுந்தாள் வர்த்தினி. "மாலதியைக் கேட்டதா சொல்லு. பாஸ்கர னையும் பாபியையும் அக்கறையுடன் படிக்கச் சொல்லு..."

"இங்க இருந்தா நீயே தினமும் சொல்ல லாமில்லையா...?" இன்னொரு முறை முயற் சித்துப் பார்க்கலாமே என்ற நப்பாசையுடன் சொன்னான்.

"தினந்தோறும் சொன்னா மட்டும் கேட்கற பசங்களா...?" சிரித்தபடி கூறினாள் வர்த்தினி.

பதில் சொல்லாது வெளியே நடந்தான் கேசவன். வீட்டைக் காலி செய்துவிட்டு மூட் டையும் முடிச்சுமாய் வந்து இறங்கி விட்டால் இவளால் என்ன செய்துவிட முடியும்...? பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தபோதும் ஆத்திரம்

மட்டுப்படவில்லை. அப்பா எழுதி வைத்த உயில் நினைவுக்கு வர முதலில் வந்த யோசனை வந்த வேகத்தில் அடங்கி விட்டது.

அந்த வீடு தன் சுய சம்பாத்தியம் என்றும் தனக்குப் பிறகு மனைவியைச் சேர வேண்டும் என்றும், தன் காலத்திற்குப் பிறகு யாருக்குச் சேர வேண்டுமென்பது அவள் விருப்பம் என்றும் அந்த உயில் சொன்னது. பிள்ளைகள்பால் தன் கடமை என்பதைத் தவிர மனைவியின் எதிர்காலம் குறித்து தன் கருத்தை என்றும் வெளியில் சொன்னவரல்ல. அப்படியொரு உயில் அவர் எழுதி வைத்த விஷயம் வர்த்தினிக்குக் கூடத் தெரியாது. பாங்கில் எவ்வளவு பணமிருக்கிறது என்ற விஷயம் கூடத் தெரியாது. உயில் விஷயம் தெரியவந்தபோது துக்கம் பீறிட்டுக் கிளம்பியது.

துக்கம் விசாரிக்க வந்திருந்த உறவுக்காரர்கள் அனைவரும் கிளம்பிச் சென்ற பிறகு அவளைத் தன்னுடன் வந்து இருக்கச் சொல்வாள் என்ற நம்பிக்கையுடனிருந்தாள் கேசவன். பதிமூன்று நாட்கள் என்ன, முப்பத்தி மூன்று நாட்கள் கடந்தும் அவன் அந்தப் பேச்சே எடுக்கவில்லை. நம்பிக்கை இழக்காது நடையாய் நடந்தும் பலனில்லை. இத்தனைக்கும் மாலதி ஒரு தடவை மெள்ள பேச்செடுத்தாள்.

"இங்க நீங்க தனியா இருக்கணுமா... எங்களிடம் வந்துடுங்க..."

"வேணாம் மாலதி. நீங்களே இடம் போறாம அவஸ்தைப்படறீங்க..."

"அப்ப இங்கேயே நாம எல்லோரும் ஒண்ணா இருக்கலாமே..."

"இல்ல மாலதி... அவரவர் இடத்தில் அவரவர் இருக்கறதுதான் நல்லது..."

**வெள்ளரிக்காய் பச்சடி செய்யும் பொழுது அதில் பச்சைக் கடலையை (நிலக்கடலை) மிக்ஸியில் பொடித்துப் போட்டால் பச்சடியும் கெட்டியாக இருக்கும். தயிரில் ஊறிய கடலைத் தூள் 'கடுக், முடுக்' என்று கடிக்கவும் சுவையாக இருக்கும்.**

**— திருபுரா ஸ்ரீராம்**



மாமியார் இவ்வளவு தீர்மானமாகச் சொல்லி விட்டபிறகு இனி வற்புறுத்தியும் பிரயோஜனமிருக்காது என அப்போதைக்கு அதோடு விட்டு விட்டாள் மாலதி. அதன் பிறகு கணவனைத் தூரத்தலானாள். வாரா வாரம் வரும் கேசவன் வரும்போதெல்லாம் ஜாடைமாடையாக விஷயத்தைத் தொடுவான். அம்மாவைப் பார்த்து விட்டுப் போவதற்காக வந்தவன் போல் இல்லாத பொல்லாத கரிசனம் காட்டி கடைசியில் விஷயத்திற்கு வருவான். அப்போதும் குடும்பத்துடன் அவர்கள் இங்கு வந்து இருப்பது அவளுக்குத்தான் எல்லா வகையிலும் நல்லது என்ற விதத்தில் தான் அவன் பேச்சு இருக்கும்.

கரண்ட் இல்லை. இருட்டிலேயே கொஞ்ச நேரம் உட்கார்ந்திருந்த வர்த்தினிக்கு சலிப்பு ஏற்பட... கதவைத் திறந்து கொண்டு வாசற்பக்கம் வந்து தெருவில் போவோர் வருவோரை வேடிக்கை பார்க்கலானாள். கால் வலித்தது. அப்பாடா என திண்ணையில் சரிந்தாள். இப்படி சும்மா உட்கார்ந்து பொழுதை வீணடிப்பது வெறுப்பூட்டியது. வேலை ஏதுமின்றி வெறுமனே இருந்ததில் நெஞ்சினுள் ஏதேதோ எண்ணங்கள் இஷ்டத்திற்குக் குதி போட்டன. முன்பெல்லாம் சேர்ந்தாற்போல் ஒரு அரை மணி நேரம் கூட ஓய்வு ஒழிவின்றி ஏதோ ஒரு வேலை இருந்து கொண்டிருக்கும்.

பதினாறாவது வயதில் குடித்தனத்திற்கு வந்தது முதல் அதே ரீதியில் இறக்கை கட்டிக் கொண்டு ஓடாத குறைதான். வேலை... வேலை... எந்நேரமும் வேலை. இருள் பிரிவதற்கு முன்பே எழுந்து சாணம் தெளித்துக் கோலம் போட வாசற் கதவைத் திறப்பதில் துவங்கும் வேலை இரவு சமையலறையைக் கழுவி அடுப்படி மேடையில் கோலம் போட்டு சமையலறைக் கதவை இழுத்து மூடும் வரை கணம்விடாது தொடரும். கணவர் மற்றும் பிள்ளைகள் விஷயங்களைக் கூட அவள்தான் பார்த்துப் பார்த்துச் செய்ய வேண்டும். கணவர்... அடுத்து பிள்ளைகள்... படுக்கையில் விழுந்த மாமியார் மாமனாரும் சேவை... இத்தனைக்குப் பின் விட்டேனா பார் என்று பேரக் குழந்தைகள் சிசுருஷை... இந்த வட்டத்திற்குள்ளேயே செக்குமாடாக சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது வாழ்க்கை.

அந்த செக்கு மாட்டு வாழ்க்கை இப்போதும் அதே பாதையில் தொடர்ந்திருக்கும்... பிள்ளைகள் அல்லது பெண்ணின் குடும்பத்துள் அவள் பிரவேசிக்க முடிவெடுத்தாள். ஆனால் கணவரின் மரணம் அவள் வாழ்க்கையிலும் சிந்தனைப்போக்கிலும் ஒரு பெரிய மாற்றத்தைக் கொண்டு வந்தது. அவள் வாழ்வின்

முதல் திருப்பம் திருமணம். இதில் அவளது முயற்சிக்கோ விருப்பங்களுக்கோ இடமிருக்க வில்லை. அவள் திருமணத்தை முடித்து அவள் புருஷனை கையில் ஒப்படைத்து இனி இது தான் உன் வழி என்று தம் கடமையை முடித் துக் கொண்டனர் பெற்றோர். அவர்கள் வகுத் துத் தந்த பாதையில் அவளை நடத்தினார் அவளைக் கைபிடித்தவர். தலைகுனிந்து அவ்வழி நடப்பது தவிர அப்போது வேறு சிந் தனை இருக்கவில்லை.

இப்போது அப்படி அல்ல. அவள் முன் நான்கு வழிகள் பிரிகின்றன. மூத்த மகன்... இளையவன்... பெண் வீடு... நான்காவதாக அவள் வழி... தனிவழி... தனிப்பாதை. தனி மைப் பயணம் சிக்கல்கள் நிறைந்தது... சிரம மானது என்கிறார்கள் பிள்ளைகள். அவர்கள் மட்டுமல்ல. அறிந்தவர் தெரிந்தவர் அனை வரின் ஒருமித்த கருத்தும் அதுவே. அவளுக்கு மட்டும் ஏனோ அவர்கள் கருத்து சரியெனப் படவில்லை. சொல்லப் போனால் அவளுக் குத் தெரிந்த பாதைதான் அது. இத்தனை காலம் கணவர் முன் வழிநடத்த அவள் பின் தொடர்ந்தாள். இப்போது அவர் மறைந்து விட் டார். பயணத்தைத் தொடர்ந்தாக வேண்டும். கணவர் இருந்தபோதும் முன்னால் இருந்தாரே தவிர அவள் பக்கத்தில் இல்லை. அவர் வழி நடந்தபோதும் ஒருவித தனிமை உணர்வுதான் அதிகமிருந்தது. ஆஸ்பத்திரி கடைவீதி உறவி னர் வீடுகள் போன்ற இடங்களுக்குச் செல்கை யில் தெருவில் தண்ணீர் தேங்கியிருந்தால் அல்லது கண்ணாடிச் சில்லுகள் கிடந்தால் 'பார்த்து வா' என்று திரும்பிப் பார்த்து சொன்னதுண்டே தவிர அவள் பக்கத்தில் வரும் வரை நின்று உடனழைத்துச் சென்ற றியாதவர். கல்யாணத்தின் போது கரம்பிடித்து ஏழு அடிகள் நடந்ததுதான். அதன் பிறகு தொடர்ந்த வாழ்க்கைப் பயணத்தில் ஜோடி யாய் பக்கத்தில் நடந்ததாய் எவ்வளவு முயன் றும் நினைவு வரவில்லை. எப்போதும் பின்னாலேயே... நிழல் போல்...

இளம்பருவத்தில் கொய்யாக்கனிக்கும் மாப்பிஞ்சுகளுக்கும் ஆசைப்பட்டு நாக்கில் நீர் சொட்ட மரம் ஏறும்போது அம்மா 'ஓ' என்று ஊருக்குக் கேட்பது போல் சத்தம் போடுவாள். 'ஐயோ... ஐயோ.. பன்னண்டு வயசுப் பொண்ணு செய்யற காரியமா இது. எசகு பிசகா விழுந்து கையோ காலோ உடைஞ்சா உன்னை எவன்டீ கட்டிப்பான்...!' அப்பா ஆமோதிப்பாய் தலையாட்டுவார். 'வயசுப் பொண்ணா லட்சணமா இரு. குரங்கு போல் மரத்தில் ஏறி ஏதாவது ஒண்ணு ஆச்சுன்னா அப்புறம் உன் அம்மா சொல்வது போல்...' என்று நீள நெடுக வசை தொடரும். அப்புறம்



எப்பப் பார்த்தாலும் சேமியா, ஜவ்வரிசி, பயத் தம் பருப்பு பாயசமா. ஒரு மாற்றம் செய்யுங் களேன்– **அரை லிட்டர் பாலை தேவையான அளவு சர்க்கரை சேர்த்து கண்டக் காய்ச்சி இறக்கி பால் சூடாக இருக்கும் போது ஒரு டேபிள் ஸ்பூன் நெய் யில் ஒரு கைப்பிடி அளவு கார்ன்ஃப்ளேக்ஸ் மிதமாக வறுத்துக் கொட்டி சிறிது ஏலப்பொடி வறுத்த முந்திரி, திராட்சை சேர்க்க சூப்பராக** இருக்கும்.

**– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்**

ஆலமரம் போல் ஒருவனைக் கொண்டு வந்து நிறுத்தி 'இவன் நிழலில் இனி உன் வாழ்க்கை' என்றார். இப்போது அந்த மரம் இல்லை. அது இருந்த அடையாளமாய் விழுதுகள் அங்கு மிங்குமாய். அவைகளும் இன்று வளர்ந்து மரங்களாகி விட்டன. இப்போது அவளை அவைகளின் நிழலில் எஞ்சியுள்ள வாழ்க்கை யைத் தொடரச் சொல்கிறார்கள். இனி தொடரப் போகும் மீதி காலத்தைக் கட்டிக் காட்டி பயமுறுத்துகிறார்கள். மாதா மாதம் பணம் அனுப்பாவிடில் அவளால் என்ன செய்ய முடியும் பார்க்கலாம் என்று பரீட்சை வைக்கிறார்கள்.

தனக்கென கொஞ்சம் ஆஸ்தி... முக்கியமாக இருக்க சாணளவாவது இடம் என்பது ஒரு பெண்ணுக்கு எவ்வளவு அத்தியாவசியம் என்பதை கணவர் எழுதி விட்டுச் சென்ற உயில் சங்கதி அறியும் வரை உணர்ந்தவ ளில்லை. அவ்வளவாய் படிப்பறிவில்லாத தன் னைப் போன்றவர்களுக்கு எவ்வித ஆதாரமு மில்லாவிடில் அது நிச்சயம் நிர்க்கதி வாழ்க்கைதான். பிள்ளைகள் இருக்கிறார்கள் தான். ஆனால் சுயதேவை காரணமாய் அம்மா தேவைப்படுகிறாளே தவிர அவள் தேவை களை மனதில் கொண்டதாய்த் தெரியவில் லையே! இவ்வளவு காலம் புருஷன், பிள்ளை கள், பேரப் பிள்ளைகள்... அனைவரும் தன்ன வர்கள்தாம்... ஆனால் தனக்கென்று எதுவுமில் லாதது இதுவரை உறைக்கவில்லை. இப்போது இந்த வீடு தன்னுடையது. தனக்கே சொந்தம் என்பதை நினைத்துப் பார்க்கும்போது மலையளவு பலம் வந்தது போல் உணர்ந்தாள்.

பெண்ணிடமிருந்து கடிதம் வந்தது. தீபாவளிக்கு வருமாறு எழுதியிருந்தாள். வர்த்தினிக்கு அங்கு செல்ல அவ்வளவாய்



கொத்தமல்லி, பூண்டு, பச்சை மிளகாய் போட்டு அரைத்த சட்னியை பூரிக்கு/சப்பாத்திக்கு மாவு பிசையும் பொழுது கலந்து ரொட்டி இட்டேன். அன்றிலிருந்து என் குடும்பத்தவர் சாதா ரொட்டி சாப்பிடுவதையே விட்டு விட்டார்கள்.

- திருப்பூர் ஸ்ரீராம்

விருப்பமில்லை. அங்கு சென்றால்தான் பண்டிகையா என நினைத்துக் கொண்டாள். பந்த பாசங்களை அறுத்துக் கொள்ள வேண்டும் என்பதை ஒரு தவமாய் மேற்கொண்டு வெற்றியும் கனிந்து வரும் சமயத்தில் பண்டிகை, பெண் வீடு என மனதை ஓட விடாமலிருப்பது நல்லது; இதனால் பெரிதாய் குடிமுழுகிப் போவது ஒன்றுமில்லை என்ற தினுசில் அவள் எண்ணங்கள் ஓடின.

தறிகெட்டோடும் நினைவுகளை அடக்கக் கற்றுக் கொண்டு விட்டால் வாழ்க்கையில் பிரச்னையே இருக்காது என்பதில் திடமான நம்பிக்கை ஏற்பட்டது. மகளின் கடிதத்தை மறந்து மனதை சற்றே திசைதிருப்பும் முயற்சியாக எங்காவது வெளியில் சென்றால் என்ன என்ற எண்ணம் எழ அப்போதைய வேலைகளை முடித்துக் கொண்டு வீட்டைப் பூட்டிக் கொண்டு தெருவில் இறங்கினாள். எங்கு போவது என்ற யோசனையின்றி இலக்கின்றி நடந்தபோது பொறிதட்டியது போல் சரேலென கணவர் ஞாபகம் வந்தது. தினந்தோறும் இந்த வேளையில் பூங்காவிற்குச் செல்வது அவர் வழக்கம். கோவிலுக்குச் செல்லும் வழியில்தான் அந்தப் பூங்கா இருக்கிறது. பெரிய பெரிய மரங்களும் செடிகளும் கொடிகளும் வண்ண வண்ணப் பூக்களும் குடும்பங்களும் குழந்தைகளும் குதூகலமாய் அது ஒரு பூலோக சொர்க்கம் என்று அவர் அடிக்கடி சொல்வாரே தவிர ஒருநாள் கூட வர்த்தினியை உடன் அழைத்துச் சென்றதில்லை. ஏதோ ஒரு உந்துதலில் அதுவரை சென்றறியாத அந்தப் பூங்காவினுள் நுழைந்தாள்.

அங்கு பரவலாய்க் காணப்பட்ட உல்லாசமும் சந்தோஷமும் புதிதாய்த் தெரிய வேடிக்கை பார்த்தபடி மெல்ல நடக்கையில் எல்லோரும் தன்னையே பார்ப்பது போல் குறுகுறுப்பு ஏற்பட்டது. 'இந்தக் காலத்திலும் இப்படி ஒரு புடவைக்கட்டா... இப்படி ஆசாரமாய் புடவை கட்டிக் கொண்டிருப்பவள் பார்க்குக்கு வந்திருக்கிறாளே, அதுவும் தனியாய்...' என்று பார்க்கிறார்கள் போலும் என்று நினைத்தவள் சட்டென சுதாரித்துக் கொண்டாள். அவளே எல்லோரையும் தீர்க்கமாய் கம்பீரமாய்ப் பார்த்தபடி கொஞ்ச தூரம் நடந்தவள் மெத்தென்ற புல்வெளியில் காலாற உட்கார்ந்தாள். பந்து விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்கள்... நெருக்கமாய் அமர்ந்து பேசிக் கொண்டிருந்த இளம் ஜோடிகள்... நான்கைந்து பேராய் குடும்பமாய் உட்கார்ந்து அரட்டை அடித்துக் கொண்டிருந்தவர்கள்... நாய்க்குட்டிகளுடன் அங்கு மிங்குமாய் நடைபயின்று கொண்டிருந்தவர்கள் என சூழல் கலகலத்துக் கொண்டிருக்க சுவாரசியமாய் பார்த்துக் கொண்டிருந்தாள் வர்த்தினி.

பலூன் பட்டாணி பஞ்சு மிட்டாய் ஐஸ் கிரீம் என்று விற்பவர்களின் ஆரவாரம் வேறு. பணமும் பண்டங்களும் சரசரவென கை மாறிக் கொண்டிருந்தன. பட்டாணியும் வேர்க் கடலையும் பார்த்தபோது இளமைப் பருவம் ஞாபகம் வந்தது. நாவில் நீர் சுரந்தது. சுற்று முற்றும் நோக்கினாள். அவளை யாரும் கவனித்துக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. அப்போதைக்கு மடி ஆசாரத்தை மறந்தாள். விடுவிடென்று கடலை விற்பவனை நோக்கி நடந்தாள்.

"எவ்வளவுப்பா...?"

"ஒண்ணரை ரூபாய் பெரியம்மா..."

அவள் வாங்கிச் சாப்பிட்ட காலத்தில் பொட்டலம் காலணா! விலை கேட்டு விட்டு வாங்காமல் போனால் நன்றாக இருக்காதென ஒரு பொட்டலம் வாங்கிக் கொண்டு சுருக்குப் பையினின்று ஒரு ரூபாய் மற்றும் எட்டணா நாணயங்களை எடுத்துக் கொடுத்தாள். பொட்டலத்தைப் பிரித்தால் கைப்பிடிக்கும் குறைவான கடலை எங்கோ மூலையிலிருந்து எட்டிப் பார்த்தது. கலிகாலம்... ஆனாலும் இவ்வளவு அநியாயமா என்றிருந்தது.

பழைய இடத்திற்கே வந்து உட்கார்ந்து பொட்டலத்திலிருந்து கொஞ்சம் கடலை எடுத்து வாயில் போடப் போனபோது பேரக் குழந்தைகள் ஞாபகம் வந்தது. சுற்றிலும் பார்த்தபோது ஏழெட்டு வயதிருக்கும் பிச்சைக் காரப் பையன் கண்களில் தாகத்துடன் தன்னையே பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்தாள். அவனை அருகிலழைத்து பொட்டலத்திலிருந்த கடலையில் பாதி அவன் கையில் வைத்தாள். சந்தோஷ முகத்துடன் சிறுவன் நகர, மீதியை அப்படியே வாயில் கொட்டிக் கொண்டாள். கர்ரென்று காரம் உறைத்தாலும் ருசியாய்த்தான் இருந்தது. அந்த அனுபவம் இன்னும் ருசியாய் இருப்பதாய்ப் பட்டது.

## புக் ஷெல்:ப்

### ராகு – கேது பெயர்ச்சி பலன்

26.6.1997 ராகு – கேது பெயர்ச்சி ஏற்படுகிறது. அது முதல் ஒன்றரை வருடங்களுக்கான 12 ராசிகளுக்குமான பலன்களைக் கூறுபவர் கோட்டையூர் என். சிவசுப்பிரமணியம்.

பக் – 44. விலை ரூ. 7.00

(ராஜா நாச்சு பப்ளிகேஷன்ஸ், பி. 3.59, டி.என்.ஹெச். பி 2 வது தளம், 80 அடி ரோடு, அண்ணாநகர், மதுரை – 20.)

### ஸ்ரீ சரபேஸ்வர பூஜாவிதானம்

தொகுப்பு – எல். சங்கரன். உதவி – கி. ராமகிருஷ்ணன். ஸ்ரீ சரபேஸ்வரர் மகிமை, நாமாவளி, ஸஹஸ்ரநாமாவளி முதலியன.

பக் – 45. விலை ரூ. 15.00

(அருள்மிகு அபிராமி அம்மன் உடனுறை அமிர்தகடேசுவரர் திருக்கோயில், 8 பி, ஈஸ்வரன் கோயில் தெரு, சேலையூர், சென்னை – 73.)

### ஆனந்த தரிசனம்

திருக்கயிலாயம் – மான சரோவர் பக்திப்பயணம் மேற் கொண்ட மணிமேகலை சிதம்பரம் தம் அனு பவங்களைக் கூறுகிறார். வண்ணப் படங்களுடன் அருமை யான நூல்.

பக் – 104. விலை ரூ. 25.00

(கமலக்கண்ணன் கல்வி மற்றும் மருத்துவ அறக் கட்டளை 29/5 ரங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை – 17)

### புஷ்பமாலிகா

கவியரசர் கண்ணதாசன் பூமாலை போல பல சிந்தனைகளின் தொகுப்பை அவருக் கேயுரிய சுவையான எளிய நடையில் எழுதியுள்ளார்.

பக். 96 விலை ரூ. 18.00

### சிந்தனை செய்வோம்

பல அறிவியல் செய்திகளை இளைய சமுதாயத்தினருக்கு ஏற்றவாறு சுவையாக எழுதியிருப்பவர் நெல்லை சு. முத்து.

பக். 124 விலை ரூ. 22.00

(இரண்டும் – வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை – 17)

### சிட்டுக்குருவியின் சின்னக் கவலை

சுற்றுச்சூழல் பற்றி மணிமேகலை குப்பு சாமி எழுதியுள்ள கவிதைகள்.

பக் – 103. விலை ரூ. 45.00

(விளாதீமிர் பதிப்பகம், 38, 4-வது குறுக்குத் தெரு, குறிஞ்சி நகர், புதுச்சேரி – 605 008)

### புதிய வெளிச்சம்

நாடகத் தொகுப்பு. ஆசிரியர் செருவை. நாகராசன். மிகச் சரளமான மொழியில் இன்றைய சமூகப் பிரச்னைகள்.

பக். 200 விலை ரூ. 30.00

(தேவகி பதிப்பகம், 1151, ராசகோபால புரம், வீட்டு வசதி வாரியம், புதுக்கோட்டை – 622 003.)

### வீடு அமையும் யோகமா?

மனையடி (வாஸ்த்து) சாஸ்திரம் பொறியியல் குறிப்புடன் ஆசிரியர் எஸ்.பி. சுப்பிரமணியன்.

பக் – 80. விலை ரூ. 15.00

### நிழல் சுடுவதுண்டு

சத்தியப்ரியன் சமூக மனித முரண்பாடுகளை வழக்கம் போல இக்குறுநாவல் தொகுப்பிலும் 'பளிச்'சென எடுத்துக் காட்டுகிறார்.

பக் – 230 விலை ரூ. 40.00

(இரண்டும் – இமயப் பதிப்பகம், 8, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் – 611 001)

> தோசை மாவு நீர்க்க இருந்தால் அதிலே இரண்டு பிடி ஜவ்வரிசியைப் போட்டு வைத்து விடுங்கள். அதிகப்படி நீரை ஜவ்வரிசி உறிஞ்சி விடும். தோசையும் மிருதுவாக, சுவையாக இருக்கும்.
>
> - உமா நாராயணசுவாமி

### ஆற்றலை வளர்த்திடும் ஆக்கப்பூர்வமான அறிவுரைகள்

வெற்றிக்கு எது தூண்களாகச் செயல் படுகிறது என்பன போல சிறு சிறு கட்டுரைகளில் அறிவுரை கூறுபவர் கே. மோகன்.

பக் - 112 விலை ரூ. 20.00

### வர்மக் கலையும், வைத்தியமும்

அரிய தமிழ் மருத்துவமுறையும், கலையுமான வர்மத்தைப் பற்றி விளக்குபவர் சீதாராம் சுப்பிரமணியம்.

பக் - 128 விலை ரூ. 22.00

*(இரண்டும் - கார்த்திகா பப்ளிகேஷன்ஸ், 18, தெற்கு பெருமாள் கோயில் முதல் தெரு, வடபழனி, சென்னை - 26.)*

### காந்தாரி

இருபத்தியோரு சரித்திரச் சிறு கதைகள் - கோவி. மணிசேகரனின் நடையில் தமிழும், வீரமும் துள்ளி விளையாடுகின்றன.

பக் - 215. விலை ரூ. 40.00

### அம்மாவின் சமையல்

ஒரு சமையல் புத்தகத்தையே சுவையாக எழுத முடியும் என தொகுத்து நிரூபித்திருப்பவர் மதிஒளி சரஸ்வதி. தன் தாயாரிடம் கற்றுக் கொண்ட சமையல் பக்குவங்களை ஆங்காங்கே சமையல் பழமொழிகளுடன் அழகுபட தந்திருக்கிறார். ஆசிரியர் - ஜெயலக்ஷ்மி ராமச்சந்திரன்.

பக். 74 விலை ரூ. 36.00

*(இரண்டும் கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 17)*

### தமிழக நாட்டுப்புறக் கதைகள்

தமிழ் மணம் கமழும் கிராமப்புறக் கதைகளின் தொகுப்பு - முல்லை முத்தையா.

பக் - 135. விலை ரூ. 27.00

### வேலியைக் காத்த பயிர்கள்

குழந்தைகளுக்கான, பரிசு பெற்ற நாடகம். ஆசிரியர்- வி. ராஜ்.

பக் - 58. விலை ரூ. 15.00

*(இரண்டும் - நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், 41 பி, சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை - 98).*

### அன்புக் குழந்தைகளுக்கு அதிர்ஷ்டப் பெயர்கள்

ஐயாயிரத்திற்கும் மேற்பட்ட பெயர்கள். தொகுப்பு - நெ. சி. தெய்வசிகாமணி. விட்டலாபுரம் ராஜனின் ஜோதிட குறிப்புகளுடன்.

பக் - 148 விலை ரூ. 20.00

*(பைலட் பப்ளிகேஷன்ஸ், த.பெ. எண் 1545, 309, லிங்கி செட்டி தெரு, சென்னை - 1).*

### ஜாதகத்தில் எதிர்காலம் அறியும் முறை

ஜோதிடத்தில் ஆர்வம் உள்ளவர்களுக்கு பல செய்திகளைத் தருபவர் மு. மாதேஸ்வரன்.

பக். 107 விலை ரூ. 20.00

### கேட்டவரம் கிடைக்கும் மந்திரங்கள்

கிரகங்களால் நன்மை அடைய, வயிற்று வலி நீங்க என பலவற்றிற்கும் மந்திரங்களை அதன் பொருளுடன் தந்திருப்பவர் வேங்கடவன்.

பக். 144 விலை ரூ. 27.00

*(இரண்டும் யமுனா பிரசுரம், 18/1 ராஜா பாதர் தெரு, தி. நகர், சென்னை - 17.)*

### இதயத்தைக் கிள்ளாதே

அன்பை அழகாகச் சொல்லும் டி. உமா மகேஸ்வரியின் குறுநாவல்கள்.

பக். 180 விலை ரூ. 25.00

### வெற்றி மீது ஆசை வைத்தேன்

வியாபார உலகில் தனி முத்திரை பதித்திருக்கும் 'சரவண பவன்' ராஜகோபால் தான் உயர்ந்த விதத்தைக் கூறுகிறார்.

பக் - 173 விலை ரூ. 33.00

*(இரண்டும் - மணிமேகலை பிரசுரம், த.பெ. எண் 1447, 4, தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 600 017.)*

### வியாபாரத்தில் வெற்றி பெறுவது எப்படி?

உதாரணங்களுடன் வெற்றி கொள்வதற்கான யோசனைகள். ஆசிரியர் - பி. எல். முத்துக்குமரன்.

பக். 96 விலை ரூ. 18.00

*(முல்லை பதிப்பகம், 323/10, கதிரவன் காலனி, அண்ணாநகர் மேற்கு, சென்னை - 40.)*

### ஆன்மீகத்தில் அடிப்படைத் தத்துவங்கள்

கேள்வி பதில் முறையில் பல ஆன்மீக விஷயங்களை விளக்கியிருப்பவர் முருகப்பிரியன்.

பக். 96 விலை ரூ. 18.00

*(ஓம் முருகா பதிப்பகம், 27, ஜெகதீவன்ராம் தெரு, திருவள்ளுவர் நகர், பம்மல், சென்னை - 600 075.)*



"சமீப காலமாக வெளி நாடுகளில் இருந்து வருபவர்கள் 'குக்கிங் ரேஞ்ச்' எடுத்துக் கொண்டு வருகிறார்கள். கடைசியில் அது இங்கு பயன்படுவதில்லை. அப்படியே ஓரம் கட்டி வைத்து விடுகிறார்கள். அப்படி என்னிடம் நிறைய பேர் வந்து 'எங்கேயாவது விலைக்குத் தள்ளி விடுங்களேன்' என்பார்கள். சமையலறையின் அடுப்பான 'கேஸ் ஸ்டவ்'வையும் 'சென்டிமென்ட்'டாக நினைப்பவர்கள்தான் நிறைய பேர்''

என்கிறார் பதினைந்து வருடங்களாக 'கேஸ் ஸ்டவ்' ரிப்பேர் செய்யும் தொழிலில் இருந்துவரும், சென்னை அடையாறில் 'ஸ்ரீவித்யா கேஸ் ஸ்டவ் சர்வீஸ்' வைத்திருப்ப வருமான செல்வம்.

**''அது என்ன சென்டிமென்ட்?'' என்கிறோம்.**

"நமக்கு மிகவும் இன்றியமையாத உணவைத் தயாரிப்பது கேஸ் ஸ்டவ்தானே? அந்தக் காலத்தில் அடுப்பில் சாணமிட்டு மெழுகி கோலமிட்டுதான் சமைக்கத் தொடங்குவார்கள். ஆனால் இன்றைய கேஸ் ஸ்டவ்வில் அப்படிச் செய்ய முடியாது என்றாலும், மகா லக்ஷ்மி வாஸம் செய்யும் இடமாகவே அதனை நினைக்கிறார்கள். அதனால்தான் சிலபேர் கேஸ் ஸ்டவ் ரிப்பேராகும்போது நாங்கள் வேறு ஸ்டவ் கொடுத்தாலும் வாங்கிக் கொள்ள மாட்டார்கள். அதில் யார்யார் சமைத்தார்களோ, என்பார்கள். பொதுவாக ஸ்டவ் ரிப்பேர் என்று எங்களுக்கு போன் செய்தால் நாங்கள் 'ஸ்பேர் ஸ்டவ்' கொடுத்து அதில் சமைக்கச் சொல்லிவிட்டு, ரிப்பேரானதை எடுத்து வருவோம். ரிப்பேர் செய்து கொடுத்துவிட்டு எங்களுடையதை வாங்கிக் கொள்வோம். அதில்தான் மேற்சொன்ன 'சென்டிமென்ட்' வரும். ஆனாலும் 'பிராக்டிகலாக' மறுப்பது சாத்தியமில்லை என்பதால் நாங்கள் தருகின்ற மாற்று ஸ்டவ்வை நிறைய பேர் வாங்கிக் கொள்ளத் தான் செய்கிறார்கள்'' என்கிறார் செல்வம்.

**''என்ன காரணங்களினால் காஸ் ஸ்டவ் ரிப்பேர் வரும்?''**

''கேஸ் தீர்ந்தவுடன் நிறையபேர் வேறு சிலிண்டர் மாற்ற மாட்டார்கள். அதை படுக்க வைத்து சாய்த்து இன்னும் பத்து நிமிடம் எரியட்டுமே என்பார்கள். இதனால் தூசுகள் போய் அடைத்துக் கொள்ளும். 'பாதுகாப்பு' வகையிலும் இது மிகவும் தவறு.

அதே போல பொங்கவிடுவது. நிறைய பேர் சீக்கிரம் சமையல் ஆக வேண்டும்

# சிலிண்டரை சாய்த்து வைக்காதீர்கள்!

என தீயை பெரிதாக எரிய விடுவார்கள். எதுவானாலும் கொதி வந்தவுடன் 'சிம்'மில் வைத்துவிட வேண்டும். பெரிதாக வைத்தாலும், சிறிதாக வைத்தாலும் கொதி வந்த பிறகு அது ஒரே நேரத்தில்தான் ஆகும். அப்படி வைக்கும் போது எல்லாமே பொங்கி பர்னருக்குள் போய் விடும். இதனால் உள்ளே நீர் தங்கி துருபிடிக்கும்.

நிறைய பேர் ஞாயிற்றுக் கிழமையானால் ஸ்டவ்வை சுத்தம் செய்கிறேன் என்று தனித்தனியாகக் கழற்றி கழுவ ஆரம்பித்து விடுவார்கள். இதுவும் தவறு. வெளிப்புறம், பர்னர் இவற்றை சுத்தமாக வைத்துக் கொள்ளுங்கள். போதும். மொத்தத்தையும் கழட்டி மாட்டும் போது தவறுகள் ஏற்படுமானால் மிகவும் ஆபத்தானது.




இந்த மாதிரி காரணங்களினால்தான் எங்களிடம் நிறைய ரிப்பேருக்கு வரும். நாங்கள் ஒவ்வொரு பொருளுக்கும் 'அடையாள அட்டை' போட்டு, ஒருவருடையது இன்னொருவருடைய ஸ்டவ்வில் கலக்காமல் ரிப்பேர் செய்து விடுவோம்."

**"வெளிப்புறம் மட்டும் சுத்தம் செய்யச் சொல்கிறீர்களே. இப்போதெல்லாம் எவர் சில்வர்தானே? அது பளபளப்பாகத்தானே இருக்கு?"**

"எவர் சில்வர் பாத்திரமே சுத்தம் செய்யாமல் இருந்தால் மங்கித்தானே போகிறது? எவர்சில்வர் ஸ்டவ் என்கிறீர்களே, உண்மையில் முன்பெல்லாம் வந்து கொண்டிருந்ததே இரும்பு ஸ்டவ் வர்ணம்பூசி, அதுதான் சிறந்தது. எத்தனை நாளானாலும் உழைக்கும். எவர்சில்வர் விரைவில் சூடாகிவிடும். அந்த சூட்டினால் உள்ளே மெழுகு 'ஜாம்' ஆகிறது. பழைய பொருளின் திடம் இப்போது இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்."

**"ஏன் இப்போது பித்தளை பார்னர் வந்திருக்கிறதே, அது இரும்பைவிட சீக்கிரம் சூடாகும் என்கிறார்களே. தவிரவும் அதைக் கழற்றி சுத்தம் செய்வதும் எளிதல்லவா?"**

"இரும்பையும் கழற்றி சுத்தம் செய்யலாம். இரண்டிற்கும் பெரிய வித்தியாசம் எதுவும் இல்லை. அதே போல பர்னருக்குள் அடைப்பு இருந்தால் நிறையபேர் 'பின்' போட்டு குத்துவார்கள். அதனால் ஓட்டை பெரிதாக, அதிகம் காஸ் வரும். அணைக்கும் போது 'பக்'கென்று சத்தம் வரும். எனவே இதையும் தவிர்ப்பது நல்லது" என்கிறார்.

**"நீண்ட நாள் காஸ் வர என்ன செய்ய வேண்டும்?"**

"காலை பெரியதாக எரிய விடக் கூடாது. கொதி நிலைக்கு வந்தவுடனே சிறிது பண்ணிவிட வேண்டும். சமையலை திட்டமிட்டு செய்ய வேண்டும். நினைத்து நினைத்து காலை எரிய விடுவதால்தான் தீர்ந்து போகிறது. பருப்பு போன்றவற்றை பொங்கவிடுவதால் உள்ளே துருபிடித்து தீ சிவப்பு நிறத்தில் வரும். இதனாலும் கேஸ் வேஸ்டாகும். இவற்றையெல்லாம் தவிர்த்தாலே கேஸ் நீண்ட நாட்கள் வரும். கேஸ், பெட்ரோல் போன்றவற்றை வீணாகச் செலவழிக்காமல் சேமிப்பது நம் நாட்டிற்கு நல்ல வகை சேமிப்பாயிற்றே"

என்கிறார் இத்துறையில் பல்லாண்டு அனுபவம் பெற்ற செல்வம்.

**"திருமணங்களில் கூட கேஸ் ஸ்டவ் சீதனமாகக் கொடுக்கிறார்கள். எந்த மாதிரி ஸ்டவ்கள் கொடுத்தால் பாதுகாப்பானது என நினைக்கிறீர்கள்?"**

"திருமணத்திற்கு என்று இல்லை சாதாரணமாகவே கேஸ் ஸ்டவ்வைப் பொறுத்த வரை முழு ஸ்டவ்வோ, அல்லது பாகங்களையோ தரமானதாக மட்டுமே வாங்க வேண்டும். ஏனென்றால் பாதுகாப்பு எச்சரிக்கை மிகவும் தேவை. ட்யூபில் டெல்லி தயாரிப்புகள் வருகின்றன. இவை சூடு தாங்காமல் விரிந்து அது வழியே கேஸ் லீக்காகும். எனவே எதுவானாலும் தரமானதா ISI முத்திரை பெற்றிருக்கிறதா என பார்த்து வாங்குங்கள். அதே போல ரெகுலேட்டர். வெளியில் ரெகுலேட்டர் கிடைக்கிறது என மலிவாக வாங்காதீர்கள். ஒருமுறை ரிப்பேரானால் தூக்கிப்போட வேண்டும்; மிகுந்த ஆபத்தானதும் கூட. ரிப்பேர் என வந்துவிட்டால் நீங்களே செய்ய வேண்டும் என நினைக்காதீர்கள். தகுந்த மெகானிக்கிடம் கொடுத்து நன்கு சரிசெய்து உபயோகியுங்கள். பாதுகாப்போடும், மிகுந்த எச்சரிக்கை உணர்வோடும் கையாள வேண்டியது இந்த கேஸ் ஸ்டவ். ஏனெனில் அக்னியுடன் சம்பந்தப்பட்டதல்லவா"

என முடிக்கிறார் செல்வம்.

பேட்டி: **பாலா**


லும் மன்னன்
SUPREMO
எப்போதுமே உங்களுக்கு ஒப்பற்ற கம்பீரமும், சக்தியும், செயல் திறனும் தந்துவரும் எல்எம்எல் லிமிட்டெட் இப்போது வழங்குகிறது ஒரு ராஜகம்பீரமான ஸ்கூட்டர்... புதிய சுப்ரீமோ. இந்தியாவிலேயே மிகமிக அழகான, சக்தி வாய்ந்த, விரைவான மற்றும் உலகிலேயே மிக அதிக பெட்ரோல் சிக்கனமுள்ள 150 சிசி, 2-ஸ்ட்ரோக் ஸ்கூட்டர். எனவே இது எல்லா வழிகளிலும் மன்னன்.
FROM LML
ULKA 20858 TAM-1

# வித்தியாசமான திருமண தம்பதிகள்

சுற்றுச் சூழல் பாதுகாப்பு இயக்கத் தலைவர் பாபா ஆம்தே செல்வச் செழிப்பான ஜாகீர்தார் குடும்பத்தில் பிறந்தாலும் சிறு பிராயத்திலிருந்தே ஏழைகளான கூலிகள், துப்புரவுப் பணியாளர்கள் போன்றோர் மீது அனுதாபம் கொண்டு அவர்கள் முன்னேற்றத்துக்காகப் போராடி, குடும்பத்தினர், உறவினரின் வெறுப்புக்குள்ளானார். பல செல்வந்தர்கள் பெண் கொடுக்க முன்வந்த போது மறுத்து விட்டார். ஒரு சமயம், ஒரு ஜமீந்தார் வீட்டு விருந்துக்குப் போனபோது அவருடைய ஒரே செல்வ மகள் சாதனா லேஷா பணியாட்களுடன் இணைந்து எச்சில் இலைகளை எடுத்தும், பாத்திரங்களைக் கழுவியும் பணியாற்றுவதைக் கண்டு மற்றவர்கள் முகம் சுளித்தார்கள். ஆனால் ஆம்தே ஒத்த மனோபாவம் கண்டு காதல் வயப்பட்டு எதிர்ப்புகளுக்கிடையே அவளையே மணந்தார். இருவரும் ஆசிரமம் நிறுவி சமூகத்தால் வெறுத்து ஒதுக்கப்பட்ட தொழுநோயாளிகளுக்குச் சிகிச்சை, மறுவாழ்வுப் பணியில் ஈடுபட்டனர். ஆம்தே காந்திஜியின் ஆணைப்படி தானே சர்க்காவில் நூல் நூற்று சொந்தத் தறியில் தன் ஆடைகளைத் தயாரித்துக் கொள்வார். சாதனாவும் அதைக் கற்று முதன் முதலில் நெய்த புடவையை இருவரும் வினோபாவின் திருக்கரங்களால் ஆசீர்வதித்து தரச் சொன்னார்கள். "இதன் ஊடும் பாவும் போல் நீங்கள் இணைபிரியாது வாழ்வீர்களாக!" என்று அம் மகான் வாழ்த்தி அருளினார்.

- அ. ஷண்முகசுந்தரம்



# ஆத்ரேயா

## ரெடிமேட் ரவிக்கைகள்



**அனிதா :** ஹலோ! ஸார்! நீங்க சொன்ன மாதிரியே நம்ம ஆபீஸ்ல வேலை செய்ற 300 லேடீஸுக்கும் 1200 ரெடிமேட் ரவிக்கைகள் "ஆத்ரேயா கார்மென்ட்ஸ்"ல ஆர்டர் கொடுத்திட்டேன்.

**பிச்சுமணி :** என்னம்மா! அளவெல்லாம் தெரிய வேண்டாமா?!

**அனிதா :** ஸார்! இது ஆத்ரேயா கார்மென்ட்ஸ் ரெடிமேட் ரவிக்கைகள்! எல்லோருக்கும் எல்லா அளவும் கிடைக்கும். குவாலிட்டி - பிட்டிங், ஸ்டிச்சிங் எல்லாம் 'அவுட் ஆப் த வோர்ல்டு' அவங்க மாதிரி ரவிக்கைகள் செய்யறது அவ்வளவு சுலபமில்லை... ஸார்! ஒரு சந்தோஷமான சமாசாரம்... நான் கல்யாணம் செய்துக்கப் போறேன்!!

**பிச்சுமணி :** என்னம்மா!! குண்ட தூக்கி போடற?!

**அனிதா :** ஆமாம் ஸார் அழகான ஆத்ரேயா ரெடிமேட் ரவிக்கை அதுக்கு ஏத்த அழகான புடவையை கட்டிக்கிட்டு 'அவரோட' வெளியில போகனும் போல் ஒரு ஆசை.

**பிச்சுமணி :** அப்படி போடு!! சரி யாரு மாப்பிள்ளை.

**அனிதா :** நீங்கதான் ஸார்!!!.... ஹலோ! ஹலோ!! ஹலோ!!! என்ன ஆச்சு அவருக்கு?! வேலையை விட்டு ஓடிப் போய்ட்டாரா? (முனகல்)

(தொடரும்)

**மலேசிய பெண்கள் விரும்பி அணியும் "ஆத்ரேயா ரெடிமேட் ரவிக்கைகள்."**

**ஆமாம்! இப்பொழுது மலேசியாவில் கிடைக்குமிடம்**

**"நல்லீஸ் சில்க்ஸ் சாரீஸ் டிரேடர்ஸ்"**

**41, லெபோ அம்பாங், 50100 - கோலாலம்பூர் மலேசியா : போன் : 2385468**

**இந்தியாவில் எங்களது ஆத்ரேயா ரெடிமேட் ரவிக்கைகள் கிடைக்கும் மற்ற இடங்கள் :**

| | |
|---|---|
| **கணேச லக்ஷ்மி டெக்ஸ்டைல்ஸ்,**<br>146, லாங் பஸார்,<br>வேலூர் - 632 004 | **ஸ்ரீ லக்ஷ்மி டெக்ஸ்டைல்ஸ்,**<br>62, நாகேஸ்வரன் வடக்கு வீதி,<br>கும்பகோணம் - 612 001. |

**கல்பனா டெக்ஸ்டோரியம்**
(ஆஞ்சநேயர் கோவில் பஸ் நிலையம் அருகில்)
நங்கநல்லூர், சென்னை - 600 061.
போன் : 2331311

# ATHREYA GARMENTS A/c

வள்ளுவர் கோட்டம் நெடுஞ்சாலை (ஹோட்டல் சுப்ரபாத் எதிரில்)
நுங்கம்பாக்கம், சென்னை - 600 034 Ph: 8226586 Fax : 8276031, 560076

**வேலை நேரம் : 10.00 முதல் இரவு 8.00 வரை. ஞாயிறு விடுமுறை**



வட அமெரிக்காவில் சில மாதங்கள் தங்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. அப்பொழுது கிட்டத்தட்ட பத்து அமெரிக்க மாநிலங்களைச் சுற்றிப் பார்க்கும் அநுபவமும் ஏற்பட்டது. பல இந்திய குடும்பங்களை சந்தித்து சில சுவையான நிகழ்ச்சிகளைக் கண்டு அவர்களுடைய கலாசார கண்ணோட்டத்தைத் தெரிந்து கொண்டேன்.

படிப்பு மற்றும் வேலை நிமித்தம் பல இந்தியர்கள் அமெரிக்காவுக்கு வந்துள்ளார்கள். ஒரு குடும்பத்தில் ஒருவர் இங்கு வந்து சௌகரியமாக வாழும் நிலையை தனக்கு அமைத்துக் கொண்டு விட்டால் அவர் தமது உறவினர்களையும் நண்பர்களையும் இங்கே வரவழைத் துக் கொள்வது சகஜமான விஷயமே. ஆனால் அவ்விதம் செய்வது எளிதல்ல. இங்கு வருவதற்கு ஒவ்வொருவருக்கும்



தகுதி இருக்க வேண்டும்.

நான் அமெரிக்காவில் இறங்கிய பொழுது என் உறவுக்கார பெண்ணும் அவளுடைய மைத்துனரும் என்னை அழைத்துக் கொண்டு போக விமான நிலையத்திற்கு வந்திருந்தார்கள். நல்ல வேளை, என் மூதாதையர் செய்த புண்ணியம்! கஸ்டம்ஸில் என்னை ஒரு கேள்வி கூட கேட்காமல் விட்டு விட்டார்கள்.

பிரயாண அசதி தீர்ந்து அங்குள்ள நவீன வீட்டு வசதிகளை நான் ஓரளவு தெரிந்து கொள்வதற்கு இரண்டு நாட்கள் பிடித்தன. அந்தப் பெண்ணோ காலையில் ஆறரை மணிக்கு வீட்டிலிருந்து கிளம்பி வேலைக்குச் சென்றால் மாலை நாலரை அல்லது ஐந்து மணிக்குத்தான் திரும்பி வருவாள். அவளுடைய கணவர் அரைமணி நேரம் தாமதமாகக் கிளம்பி அவள் வந்த பிறகே வருவார். அவளுடைய மைத்துனர் ஏதோ பயிற்சிக்காக அங்கே



# எங்கிருந்தாலும் (இந்தியப் பெண்கள்) வாழ்க!

தங்கி இருந்ததால் நான் வீட்டு நடைமுறையை அவரிடமிருந்து விரைவில் கற்றுக் கொள்ள வசதியாக இருந்தது.

அன்று அவள் வீட்டுக்கு வர தாமதமாகி விட்டது.

"அப்பப்பா! என்ன டிராஃபிக் ஜாம்! வண்டியை இஞ்ச் இஞ்சாக நகர்த்திக் கொண்டு வருவதற்குள் பெரும்பாடாகி விட்டது!" என்று அலுத்துக் கொண்டாள்.

ஆமாம், அமெரிக்காவில் மெட்ரிக் முறைகள் நடைமுறையில் இல்லை. இஞ்ச், மைல், காலன் என்றே எல்லோரும் குறிப்பிடுகிறார்கள்.

டெலிபோன் அடித்தது.

அவள்தான் எடுத்துப் பேசினாள்.

"ஏன்?.... அப்படியா? ... சரி.... என் வீட்டில் வைத்துக் கொள்ளலாம்... ஓ.... யெஸ்.... எனக்குக் கஷ்டமில்லை" என்றாள்.

"என்ன சமாசாரம்?" என்று கேட்டேன்.

"சஹஸ்ரநாம பாராயணம்" என்றாளே பார்க்கலாம்!

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது!

நம் நாட்டில் நாம் இதையெல்லாம் மறந்து எத்தனை ஆண்டுகளாகி விட்டது.

"அப்படியென்றால்...?"

"இங்கே பத்து தென்னிந்திய குடும்பங்கள் .... தமிழ், தெலுங்கு, கன்னடம் பேசுபவர்கள் வாரம் ஒரு முறை ஞாயிற்றுக்கிழமை காலையில் யார் வீட்டிலாவது கூடி விஷ்ணு சஹஸ்ர நாமம் கோஷ்டியாக பாராயணம் செய்வோம்."

"அப்புறம்?"

"எல்லோருக்கும் அந்த வீட்டில் சாப்பாடு போடுவோம்."

"அப்பொழுது நாளன்றைக்கு நம் முறையா?"

"என்னுடைய முறையல்ல... ஆனால் ஏற்பாடாகியிருந்த வீட்டில் அந்தப் பெண்ணுக்கு தவிர்க்க முடியாத நிர்பந்தத்தால் நான் ஒப்புக் கொண்டேன்."

"ஒரு நாள்தானே டைம் இருக்கு... எப்படி இத்தனை பேருக்கு சமைப்பது?"

எனக்குத்தான் தலையில் ஐஸ் வைத்தது போல் நடுங்க ஆரம்பித்தது.

"பரவாயில்லை. நான் சமாளித்து விடுவேன். பதினைந்து பேருக்கு சமைத்தால் போதும்" என்று சர்வ சகஜமாக சொல்லிக் கொண்டே அவள் டெலிபோன் நம்பர்களை அமுக்க ஆரம்பித்து விட்டாள்.

பத்து குடும்பங்களுக்கும் சஹஸ்ரநாம பாராயணம் செய்யும் இடமாற்றம் தெரிவிக்கப்பட வேண்டுமே!

மறுநாள் மாலை அவள் வீட்டுக் காரியங்களை முடித்து விட்டு காரை எடுத்துக் கொண்டு கடையிலிருந்து அதிகப்படி பால், பூங் கொத்து, பழம் எல்லாம் வாங்கிக் கொண்டு வந்தாள். பாலைக் காய்ச்சி உறையச் செய்து கண்டலுக்கும் ஊறப் போட்டாள். முன்னிரவில் அவளுடைய கணவர் வாக்குவம் கிளீனரால் வீடு முழுவதும் குறிப்பாக பூஜை நடக்கும் இடமெல்லாம் சுத்தம் செய்தார். 'டுர்'... 'புக்' என்று ஒரே சப்தம்.

மறுநாள் காலை அவள் தலைக்கு ஸ்நானம் செய்துவிட்டு மின்சார குக்கிங் ரேஞ்ஜில் நாலு அடுப்புகளையும் பற்ற விட்டு சமைக்கத் தொடங்கினாள்.

நான் அப்படியே அசந்து போய் விட்டேன்.

இவ்வளவு சிறிய பெண் எவ்வளவு பேருக்கு அனாயாசமாக சமைக்கிறாள்!

---

**சாதாரணமாய் தேங்காய் சாதம் செய்யும் போது தேங்காயைத் துருவி, வதக்கி சேர்ப்பீர்கள். அதற்குப் பதில் தேங்காய்த் துருவலை மிக்ஸியில் போட்டு, தண்ணீர் விட்டு பர பரவென அரைத்து எடுத்து சாதம் செய்யும் போது ஊற்றிச் செய்து எடுங்கள். அதன் பின் தாளிதம் செய்து, அத்துடன் சாதத்தையும் புரட்டி எடுத்து வைக்க, சாதம் தேங்காய்ப் பால் மணத்துடன் தனி டேஸ்டாக இருக்கும்.**

**— பூர்ணிமா பாலன்**



அதுவும் பூஜைக்கு மடியாக. என்னால் நம்பவே முடிய வில்லை.

என்னால் முடிந்தது சில காய்கறிகளை வெட்டிக் கொடுத்ததுதான்.

இரண்டு மணி நேரத்தில் கட்லெவுஜிடபின் பீன்ஸ் கறி, ஃபுட் ப்ரோஸஸர் மூலம் துருவிய காரட் கோசுமறி, பாகற்காய் பிட்லை, பச்சடி, ரசம், எலுமிச்சை சாதம் எல்லாவற்றையும் ஒரு மேஜை மீது புதிய விரிப்பைப் போட்டு வரிசையாக எடுத்து வைத்து விட்டாள்.

அதற்குள் அவளுடைய கணவர் ஹாலில் விரிப்புகளை போட்டார். ஒரு குட்டையான மேஜையில் கடவுள் படங்கள், இரண்டு சிறிய வெள்ளி குத்து விளக்குகள், ஊதுபத்தி, பழம், பூ, சுண்டல் எல்லாவற்றையும் எடுத்து வைத்து விட்டார்.

அவர்கள் ஒரு பூனை வளர்க்கிறார்கள். அது புலிக்குட்டி போல் இருபது பவுண்டு எடை இருக்கிறது. அதை வீட்டை விட்டு வெளியே விடக்கூடாது. அதை வளர்க்க லைசன்ஸ் வாங்கியிருக்கிறார்கள். கழுத்தில் அதன் பெயர், வீட்டு முகவரி பொரித்த பித்தளை தகட்டில் தொங்குகிறது. வருபவர் களுக்கு இடைஞ்சலாக இருக்குமேயென்று அதை மாடியில் ஒரு அறையில் வைத்து பூட்டி விட்டார்கள். அதனுடைய சாப்பாட்டு பாத்திரம், தண்ணீர் பாத்திரம், அது மலம் கழிக்கும் லிட்டர் பாக்ஸ் - அந்த ஸ்பெஷல் மண்ணுடன் ஏக கனம், தூக்க முடியாமல் மாடிக்கு எடுத்துச் சென்றார்கள்.

சமையல் அறையும், ஹாலும் இணைந்திருந்ததால் சமையல் ஆன கையுடன் அடுப்படி, மேடை எல்லாவற்றையும் துப்புரவாக்க வேண்டியிருந்தது. வருபவர்கள் சாப்பிட, நீர் குடிக்க டம்ளர்கள், ஸ்பூன்கள் அவற்றை விட் டெறிய குட்டி யானை சைஸில் ஒரு பிளாஸ்டிக் ட்ரம் எல்லாம் ரெடியாக வைத்து விட்டார்கள்.

சரியாக பத்தரை மணிக்கு ஒருவர் பின் ஒருவராக தனியாக, ஜோடியாக, குழந்தை களுடன் காரில் வந்து இறங்கினார்கள். தாமதமாக வருபவர்களுக்காக பத்து நிமிடங்கள்தான் காத்திருந்தார்கள்.

தலைக்குக் குளித்து விட்டு புடைவை, சல் வார் கமீஸில் பெண்கள் பழம், பூ எடுத்து வந்திருந்தனர். விளக்கை ஏற்றிய பிறகு எல்லோரும் விரிப்பில் குழந்தைகளுடன் அமர்ந்தார்கள்.

ஒவ்வொருவர் கையிலும் ஒரு விஷ்ணு சஹஸ்ரநாம புத்தகம்.



டாப்லெட்டை க்ளீன் செய்ய வாஷிங் பவுடரை சிறிது தண்ணீரில் கரைத்துப் பயன்படுத்தினாலே பளிச்சென்றிருக்கும். சுத்தம் செய்த பிறகு ¼ கப் தண்ணீரில் துளி ஷாம்பூவைக் கலந்து தெளித்து விட்டால் கமகமவென்று இருக்கும்.

— ஹேமலதா

முதலில் குரு வந்தனம். பிறகு சஹஸ்ரநாமம். சிலர் புத்தகத்தை பார்க்காமலே கண்ணை மூடிக் கொண்டு மனப்பாடமாக சொன்னார்கள். கொஞ்சம் தடுமாறுபவர்களின் வசதிக்காக திருமதி எம்.எஸ்ஸின் விஷ்ணு சஹஸ்ரநாம காஸெட்டை பின்னணியாகப் போட்டிருந் தார்கள். கடைசியாக மங்கள ஆரத்தி ஸ்லோகத்துடன் பாராயணம் முடிவடைந்தது. பெற்றோர்கள் பொறுமையுடன் குழந்தைகளையும் இதில் ஈடுபட வைத்தது வியப்பிற்குரியதாக இருந்தது.

நைவேத்யம் செய்த பிறகு கற்பூர ஆரத்தி சுருக்கமாக நடந்தது. ஏனென்றால் புகை அதிக மாகப் போனால் ஸ்மோக் அலாரம் அடிக்கத் தொடங்கி விடும். பிறகு ஆரத்தி எடுத்து நிறைவு செய்தார்கள். இதற்குக் கிட்டத்தட்ட 1½ மணி நேரம் ஆயிற்று.

பிறகு ஒருவர் ஒரு பிளாஸ்டிக் டப்பாவை மேடையில் வைக்க சிலர் அதில் டாலர் நோட்டுகள், சென்ட் நாணயங்களையெல்லாம் போட்டனர். ஒவ்வொரு ஆண்டும் இவ்விதம் சேரும் பணத்தை தர்ம காரியங்களுக்குக் கொடுத்து விடுகிறார்களாம்.

பிறகு சாப்பாடு ஆரம்பிக்கிறது. எல்லோரும் தங்களுக்கு வேண்டியவற்றை மேஜையிலிருந்து தாங்களே பஃபே முறையில் எடுத்துச் சாப்பிடுகிறார்கள். சாப்பிடும் பொழுது பேசி, சிரித்து தமாஷாக பழகுகிறார்கள். குழந்தைகள் ஐஸ்கிரீமை கேட்டு வாங்கி சாப்பிடுகிறார்கள். வீட் டுக்குப் போகும் பொழுது பெண்களுக்கு மஞ்சள், குங்குமம், பழம் எல்லாம்

என் மகன் திருமணத்திற்கு வீட்டின் இருபுறமும் பெரிய வாழைத்தாருடன் கூடிய வாழை மரம் கட்டியிருந்தோம். திருமணம் முடிந்ததும் அந்த திரண்ட வாழைக்காய்களை வீட்டு உபயோகத்திற்கும், வாழைப் பழமாகவும், அண்டை வீடுகளுக்குக் கொடுத்தும் தீர்ந்தபாடில்லை. 50, 60 காய்களுக்கு மேல் மிஞ்சி விட்டது. சட்டென ஒரு யோசனை செய்தேன். திரண்ட காய்களை வேகவைத்து, பச்சை மிளகாய், இஞ்சி, தேவையானளவு உப்பு சேர்த்து கிரைண்டரில் ஆட்டி வடாம் பிழியும் அச்சில் பிழிந்து காய்ந்ததும் பொரித்தால், சுவையோ அருமை. எந்த சாதத்திற்கும் தொட்டுக் கொள்ள வெகு ஜோர்!

— ஜெ. மகாலட்சுமி



கொடுக்கப் படுகிறது.

வந்தவர்களெல்லாம் ஒவ்வொருவராக சென்ற பிறகு சாமான்களை ஒழித்து, பூனையை மாடியிலிருந்து இறக்கிய பிறகு வீட்டுக்காரர்கள் ஓய்வெடுக்கும் பொழுது மணி மூன்று.

இந்த சஹஸ்ரநாம பாராயணம் கடந்த மூன்று ஆண்டுகளாக ஒரு வாரம் கூட தவறாமல் நடந்து வருகிறதாம். ஒரு தடவை ஆண்டு விடுமுறையில் பலர் இந்தியாவுக்கும் வெளி ஊர்களுக்கும் போய் விட்டபடியால் பூஜைக்கு ஒருவரும் வரமுடியவில்லையாம்.

செட்டியார் பொம்மை உள்பட இந்தியாவிலிருந்து ஏரோப்ளேனில் மிக ஜாக்கிரதையாக பொதிந்து எடுத்துக் கொண்டு வந்து சிரத்தையுடன் கொலு வைத்து நவராத்திரி விழா கொண்டாடுகிறார்கள்.

இங்கு வரும் இரண்டாவது தலைமுறை இந்தியர்கள் நமது மதத்தையும் கலாசாரத்தையும் தொடர்பில்லாமல் மறந்து விடக் கூடாது என்று பெற்றோர்கள் நினைக்கிறார்கள். இதற்குத் துணையாக இருப்பது

# வாஸ்து எனும் புதையல்



நாம் கடந்த பல இதழ்களில் எந்த அறைகள் எங்கு அமையலாம் என்பதனைப் பார்த்தோம். இப்பொழுது ஒவ்வொரு அறையின் உள் வடிவமைப்புகள் எப்படி அமைக்கப்பட வேண்டும் என்பதனை தெரிந்து கொள்வோம். முதலில் சமையல் அறை.




சமையல் அறை எப்பொழுதும் வீட்டின் தென்கிழக்கு மூலையாகிய அக்னி மூலையிலேயே அமைய வேண்டும். தெற்கு பார்த்த வீட்டிற்கு மாத்திரம் வடமேற்கு மூலையில் அமைக்கலாம். மலை பிரதேசங்களிலும், வட துருவ தேசங்களிலும் சமையல் அறை வீட்டின் மையப் பகுதியில் அமைக்கப்பட்டுள்ளது. வெளிப்புற குளுமையினால் பாதிக்கப்படாமல் இருக்க மையப் பகுதியில் நெருப்பு மூட்டப்படுகின்றது. இம்மாதிரி அமைக்கப்பட்ட வீட்டில் வசிப்பவர்களும், எல்லாவிதமான சுகங்களையும் பெற்று வாழ்வதை நான் நன்கு அறிந்திருக்கின்றேன். இதன் காரணங்களை ஆராய்கின்ற பொழுது, நாம் வீட்டில் ஹோமங்களைச் செய்கின்றபோது வீட்டின் மையப் பகுதியிலேயே செய்கின்றோம். இது நம் வழிபாட்டு முறைகளில் ஒன்று. இவைகளால் நமக்கு நன்மைகளே விளைகின்றது. குளிர்ப்பிரதேசங்களில் மையப் பகுதி சமையல் சரியாக இருக்கலாம். நம்மைப் போன்று வெப்ப நாடுகளில் வசிக்கின்றவர்களுக்கு இவை பொருந்தாது. மையப் பகுதி வெப்பம் வீடு முழுவதும் பரவிவிட வாய்ப்பு உள்ளதால், இது நமக்கு சாத்தியப்படாது என்றே கூறலாம். துருவ தேசங்களில் வெப்பத்தை இழக்காமல் இருப்பதற்கு மையப் பகுதி சிறந்ததாக இருக்கலாம். சீனாவில் தோன்றிய Feng Shui - யும் இதை ஏற்றுக் கொண்டுள்ளது..

இப்பொழுது நம்முடைய சமையல் அறை எப்படி அமைய வேண்டும் என்பதனைப் பார்ப்போம்.

1. சமையல் அறை தென்கிழக்கு மூலையிலேயே அமைய வேண்டும்.

2. சமையல் அறை மேடை தென்கிழக்கு மூலையில் தெற்கு சுவரை தொட்டுக் கொண்டும், கிழக்குச் சுவரை தொடாமலும் இருக்க வேண்டும். கிழக்குச் சுவற்றிலிருந்து 1 அல்லது 2 அடி இடைவெளியுடன் இருப்பது சிறந்ததாகும்.

3. சமைப்பவர் கிழக்கை நோக்கியே சமையல் செய்ய வேண்டும்.

4. சமையல் அறையில் நீர் இல்லாமல் சமையல் அமையாது. ஆகவே தண்ணீருக்கு உரிய இடமாகிய வடகிழக்கு மூலையிலேயே 'சிங்க்' அமைத்துக் கொள்ள

பி.ஜே. ரவிராஜ்

வேண்டும்.

5. சமையல் அறையில் நீரையும் நெருப்பையும் இணைத்துச் சமையலை உருவாக்குகின்ற பாத்திரங்களை தெற்கிலும், மேற்கிலும் மட்டுமே வைக்க வேண்டும்.

6. சமையல் பொருட்களை வடமேற்கு மூலையிலேயே வைப்பது மிகவும் சிறந்ததாகும்.

7. சமையல் அறையின் கதவிற்கு நேராக சமையல் நெருப்பு தெரியக் கூடாது.

8. சமையல் அறையில் வடகிழக்கு மூலையிலும், தெற்கிலும் சன்னல்கள் இருக்க வேண்டும். தெற்கில் தென்கிழக்கு மூலையில் புகைபோக்கி அமைக்க வேண்டும்.

9. ஒருவேளை சமையல் அறையிலேயே உணவு அருந்தும் மேஜைகளை அமைக்க நேரிட்டால், வட மேற்கிலேயே வைத்துக் கொள்ள வேண்டும்.

10. கிழக்குப் பகுதியில் அமைகின்ற சமையல் மேடை எக்காரணம் கொண்டும் அந்த அறையின் வடக்குச் சுவரைத் தொடக்




கூடாது.

11. சமையல் அறையின் தரை மற்றும் சுற்றுச் சுவர்களில் பதிக்கும் (Tiles) கற்கள், மஞ்சள், ஆரஞ்சு, நீலம், வெள்ளை நிறங்களில் மட்டுமே அமைய வேண்டும். மற்ற நிறங்களில் பாதிப்புகள் ஏற்படும்.

12. வடமேற்கில் அமைகின்ற சமையல் அறைகளை சரியான முறையில் அமைக்காவிடில் தீ விபத்துக்கள் ஏற்பட வாய்ப்புகள் ஏற்படும். மற்ற திசைகளின் பாதிப்புகள் பற்றியும் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றைத் தவிர்க்கலாம். அல்லது கவனமாக இருக்கலாம். எப்போதும் சமையல் அறையில் கவனமாக இருப்பது நல்லதுதானே!

13. சமையல் அறை பக்கத்தில் கழிவு அறை, குளியல் அறை இருக்கக் கூடாது என்று சாத்திரங்கள் கூறுகின்றன.

14. சமையல் அறைகளுக்கு மேலேயும், கீழேயும் குளியல் அறை மற்றும் கழிவு அறை அமைக்கக் கூடாது.

15. சமையல் அறை பக்கத்தில் படுக்கை அறை அல்லது வேறு அறைகளை அமைக்கின்ற பொழுது, அதன் இடையில் வருகின்ற நேர் எதிர் சுவர் சற்று கனம் அதிகமுள்ளதாகச் செய்ய வேண்டும்.

16. சமையல் அறையின் மையப் பகுதியிலேயே அமர்ந்து உணவு அருந்தக் கூடாது.

சமையல் அறை எப்படி அமைய வேண்டும் என்பதனை கீழ்வரும் படத்தின் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

சீன ஓட்டல்களிலோ அல்லது அவர்களின் வீடுகளிலோ அவர்களின் சமையல் அறையில் அவர்களின் அக்னி காவல் தெய்வமாகிய டிசாவோ வாங் (TSAO WANG)கின் படத்தை அவசியமாக வைப்பார்கள். உணவு தயாரிப்பில் வரும் தவறுகளை தடுத்து உணவிற்கு தனிச்சுவையையும், போஷாக்கையும் கொடுப்பதாக நம்புகின்றனர். இதைப் போன்று நமது நாட்டிலும் சமையல் அறையில் அக்னி பகவானின் படங்களை வைத்து உணவு அறையில் அன்னத்தைப் பூரணமாக நமக்கு வழங்குகின்ற அன்னபூரணியின் படங்களை வைத்து வழி படுகின்ற அநேக வீடுகளை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் உணவிற்குப் பஞ்சமில்லாத வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்.

வீடு என்பது மனிதனுக்கு முழுமையான வாழ்க்கையையும் வளர்ச்சியையும் நிரந்தரமாக கொடுத்துக் கொண்டே இருப்பதாகும். சொத்து சுகங்கள் மற்றும் மன அமைதியையும் அதில் வசிப்பவர்களுக்குக் கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். வாஸ்து பற்றி என்னிடம் பேச விரும்புவர்கள் மாதத்தில் முதல் தேதி முதல் 5-ந் தேதி வரை சென்னையில் 8540084லும் மற்ற நாட்களில் கோவையில் 577907-லும் தொடர்பு கொண்டு ஆலோசனைகள் பெறலாம்.

(தொடரும்)

# இலக்கிய சம்பந்தி

அவரை, சம்பந்தி என்று நான் நினைப்பதில்லை. சகோதரராகவே கருதுவேன். அப்படி ஓர் அன்னியோன்னியம். மன சார அந்தரங்கம் பகிர்ந்து கொள்ளக்கூடிய, விகல்பம் துளிர்விடாத, இலக்கிய நெருக்கம்.

மானாமதுரைக்கும் மதுராந்தகத்துக்கும் வெகு தொலைவு இருந்தாலும் உள்ளத்தைக் கவரும் அவரது கடிதங்களைப் படிக்கும் போதெல்லாம், எட்டம் குறைந்து கிட்டத்தில் இருப்பதுபோல அவ்வப்போது தோன்றும். கவிதை, கதை, எல்லாம்கூட எழுதுவார்; அத னாலேயே அவர் 'இலக்கியச் சம்பந்தி'! மனிதர்களின் மன ஓட்டத்தைக் கண்டுபிடித்து விடு வதில் மிகவும் கெட்டிக்காரர். அப்படிப் பட்டவர் இப்படியும் ஆக முடியுமா? என் னால் சிறிதும் நம்ப முடியவில்லை.

என்னைப் போலவே அவரும் இப்போது ஓய்வு பெற்று விட்டார். பணி நிறைவுற்ற பின் எப்படிப் பொழுதைக் கழிப்பார் என்று பெரிதும் கவலைப்பட்டேன். முன்போலவே ஏக 'பிசி'யோடு இருப்பதாகக் கேள்வி. ஆனால் மகளிடமிருந்து வந்த செய்தி வேறாக இருந்தது. அவருக்கு ஒரே மகன்தான்: எனது மகளே மருமகள்.

"நாங்கள் தனிக்குடித்தனம் வந்து விட் டோம்...!" - என மகள் எழுதியிருந்த கடிதத் தைப் படித்ததும் மனம் சங்கடப்பட்டது.

"உங்கள் மாப்பிள்ளைக்கு வயிற்றில் ஆபரேஷன் நடந்ததால் ஆபீஸ் பக்கத்தில் வீடு பார்த்து இங்கு வந்து விட்டோம். ஆறு மாதம் வரை சைக்கிள்கூட மிதிக்கக் கூடாது என்று டாக்டர் கண்டிப்புடன் கூறியுள்ளார். கன மான பொருளைத் தூக்கக் கூடாது. தையல் போட்ட இடத்தில் புண் சீக்கிரம் ஆற வேண் டுமானால் ஜாக்கிரதையாக இருக்க வேண் டும்; பேரனுக்குப் பள்ளிக்கூடம் நாங்கள் இருக்கும் 'சிப்காட்' வளாகத்தில் வீட்டுக்குப் பக்கத்திலேயே உள்ளது. நானே கொண்டு போய்விட்டுக் கூட்டி வந்து விடுவேன். எல்லா வற்றுக்கும் வசதியான ஆனால் சிறிய வீடு... எங்கள் குடும்பத்துக்குப் போதும்."

மகளின் கடிதத்துக்குள் எந்த உண்மையோ ஒளிந்திருப்பதாகத் தென்பட்டது; விளங்கிக் கொள்ள முடியவில்லை.

திருப்பத்தூரிலும் திருமயத்திலும் நெருங் கிய உறவினர் வீட்டுத் திருமணங்களுக்குப் போக வேண்டி வந்தது. சம்பந்தி ஓய்வு பெற்ற பின்னர் அவரைப் பார்த்துவிட்டு வர இது ஒரு வாய்ப்பு. புறப்பட்டு வருவதாக மகளுக்குக் கடிதம் எழுதினேன். ரயில் நிலையத்துக்கு மரு மகன் வந்திருந்தார். வழக்கமான குதூகலம் இல்லாவிட்டாலும் சுறுசுறுப்பாகவே வர வேற்றார். நலம் விசாரித்துக் கொண்டோம். அப்பாவும் அம்மாவும் தங்கை வீட்டுக்குப் போயிருப்பதாகச் சொன்னார். வேறு யாரும் அங்கே இல்லாததால் வீடு பூட்டியிருக்கும் என்றார்.

"நாம் நேராக 'சிப்காட்' பஸ்ஸில் நம் வீட் டுக்குப் போய்விடுவோம்" என்றார்.

சம்பந்தியைப் போய்ப் பார்க்காமல், நேராக மகள் வீட்டுக்குப் போவது எனக்குச் சற்று நெருடியது.

"அங்கு என்றைக்குப் போனீர்கள்? அப்பா அம்மா இருவருமே இன்னும் ஊரிலிருந்து வர வில்லையா...? காலை இங்கு வரும்போது போய்ப் பார்த்தீர்களா...? ஆவலுடன் கேட் டேன்.

"ஃபோன் பண்ணினேன்... மணி அடித்துக் கொண்டே இருந்தது.... அதனால் வீட்டில் யாரும் இல்லை என்று தெரிந்தது..."- சுருக்க மாக அவர் பதில் இருந்தது.

மானாமதுரை வரும்போதெல்லாம் சம்பந்திக்குக் கடிதம் எழுதிப் போடுவது என்து வழக்கம்தான். ஆனால் இந்த முறை மகளுக்கு மட்டும் எழுதினேன்; அவருக்கும் அடுத்து எழுத நினைத்துக் கொண்டு இருந்தேன்; ஏனோ தவறிவிட்டது; அவருக்கும் ஒரு கடிதம் போட்டிருக்க வேண்டும்; போடாமல் விட்டது



சரியில்லையோ என்று மனம் லேசாகக் குத்தி யது. நிகழ்வுகளை அசை போட்டுக் கொண் டிருக்கும்போதே எதிரில் ஆட்டோ வந்து நின்றது. ஏறி நேராக மகள் வீடு வந்து விட் டோம். அவசர வேலை இருப்பதாகக் கூறி மருமகன் அலுவலகம் போய்விட்டார்.

"ரயிலில் வந்த களைப்புத் தீர குளித்து விட்டு சாப்பிட்டுப் பின் நன்றாகத் தூங்குங்கள் அப்பா...!" என்றாள் மகள்.

பேரன், பேத்தி, மகள், மருமகன் எல்லா ருமே வழக்கம்போல் இல்லாமல் வாடிப் போயிருந்தார்கள். ஓர் இலக்கியப் பூங்கா வாகவே ஒளி விடும் சம்பந்தி வீட்டில், செல்லப் பூக்களாய்த் துள்ளித் திரிந்த பேரக் குழந்தைகளிடம்கூட அத்தனை ஆர்ப்பாட் டத்தைக் காணோம். வந்து இரண்டு நாள் ஓடி விட்டது; இன்றும் பேரன் ஸ்கூலுக்குப் போய் விட்டான்; பேத்தி தூங்கத் தொடங்கி விட்டாள்; நானும் வெந்நீரில் சுக மாகக் குளித்துவிட்டு சாப்பாடு முடித்து உடலைச் சாய்த்தேன். சுகமான தூக்கம்.

மருமகனின் பேச்சு சத்தம் ஒலித்தது. மகனின் கோபக் குரல் அதைவிட உச்ச தொனியில் இருந்தது.

"இவ்வளவு தூரம் வந்தவர்கள் ஒரு எட்டு நம்ம வீடு வந்து அப்பாவைப் பார்த்துட்டுப் போயிருக்கக் கூடாதோ...?"

"இன்னும் நம்ம மேலே உள்ள கோபம் தீர வில்லை என்றுதானே அர்த்தம்...?" யாரும் பார்த்தா என்ன நினைப்பாங்க...?"

"வராமலே இருந்திருந்தாக்கூட ஒண்ணும்





**குழந்தைகள் பழைய பென்சில் பாக்ஸ் வேண்டாம் என ஒதுக்கியதை, தலை வாரும் சீப்புகள் போட்டு வைக்க உபயோகிக்கலாமே!**

**— ஆர். சீதா**

---

தெரியாது; 'சிப்காட்' வளாகம்வரை வந்த மாமா... அதுதான் உங்க அப்பா... இங்கு வந்து எட்டிப் பார்த்தா என்ன...? அது நம்மள மன்னிச்சதா ஆகிவிடுமோ...?"

"சரி... சரி...விடு... போனாப் போகட்டும்..."

"என்னை... உங்களை... பேரக் குழந்தைகளைக்கூடத் தள்ளட்டும்... எங்க அப்பாவை.... தனக்கு நெருக்கமான சம்பந்தி ஊரிலிருந்து வந்திருக்கிற சேதி தெரிஞ்சும் பார்க்காமப் போயிருக்காங்களே...?"

"சிப்காட் நிறுத்தத்திலிருந்து ஐந்து நிமிட நடை இருக்குமா...?"

"அதுகூட இருக்காதே...?"

உறங்கும் பாவனையில் இருந்தேன்; கொஞ்சம் கொஞ்சம் உண்மை விளங்கிக் கொண்டு வருவது போலத் தெரிந்தது. 'சிப்காட்' பஸ் நிறுத்தம் என்பது இங்கு மகள் வீட்டிலிருந்து சாதாரணமாக நூறு நூற்றைம்பது அடி தூரம் தான் இருக்கும். நாலைந்து வீடுகள் தள்ளி திரும்பினால் மெயின்ரோடு வந்துவிடும். அங்கேதான் பஸ் ஸ்டாப். இவ்வளவு தூரம் மிக அருகில் வந்த சம்பந்தி இங்கு வராமல் திரும்பிப் போய் விட்டார் என்பது எனக்கே சற்று மனச் சங்கடத்தைத் தந்தது. நேற்று வீட்டில் இல்லாமல் வெளியூர் போயிருந்ததால் தானே அவர் வீட்டுக்குப் போகாமல் நேராக இங்கு வர நேர்ந்தது.

அவர்களுக்குள் ஏதோ மனக்கசப்பு ஏற்பட்டு மகள் தனிக்குடித்தனம் போகிற அளவுக்குச் சிக்கல் வளர்ந்திருக்கிறது. சந்தர்ப்ப சூழ்நிலையால் நேராக இங்கு வந்துவிட்டேன். அதனால் என்னையும் இவர்கள் பக்கம் சேர்த்து விட்டார் போலும். அப்படியெல்லாம் கருதக்கூடிய அற்பத்தனத்துக்கு இவரும் இப்போது அடிமையாகிவிட்டாரோ? என்னால் நம்ப முடியவில்லை.

உண்மையாகவே அப்படியொரு நெருடலில் அகப்பட்டு, மகளா - சம்பந்தியா என்ற கேள்வி வந்தால், அது நியாயமோ அநியாயமோ - மகள் பக்கம்தானே சேர முடியும்...? மகளும் மகனும் இருக்கிற இடத்தில் சேராமல் சம்பந்திகூடப் போய் சங்கடப்படவா முடியும்...?!

மகள் வந்து காபி கொடுத்தாள். நான் ஆவலோடு சந்திக்க விரும்பிய சம்பந்தி சற்றுமுன் இங்கு 'சிப்காட்' வளாகத்துக்கு வந்துவிட்டு, எட்டி உதைத்தாற்போல் வெறுப்போடு போய் விட்ட செய்தியை விலாவாரியாக எடுத்துரைத்தாள்; மகள் சொல்லும்போதே கண்கள் கலங்கின... முகம் வீங்கிக் கொண்டு வந்தது. தனிக்குடித்தனத்துக்கான தனிக்காரணம் ஏதும் உண்டா என்பதை மட்டும் விளக்கவில்லை.

"அழையாத விருந்தாளியாக நீங்கள் ஒன்றும் அங்கு போக வேண்டாம்..." - ஆத்திரமாகக் கூறினாள்.

"அப்படி போய்த்தான் ஆகணும்னு ஆசைப்பட்டால், இந்தத் தடவை நேரே ஊருக்குத் திரும்பிப் போய்விட்டு, அடுத்த முறை வரும்போது உங்க சம்பந்தி வீட்டுக்கே நேராப் போய் இறங்கிக் கொள்ளுங்க..." என்று வெடித்தாள்.

அதிகாலை புறப்பட்டு, திருப்பத்தூர், திருமயம் கல்யாணங்களுக்குப் போய்விட்டு, பின் வந்து ஊருக்குக் கிளம்பத்தான் நேரம் சரியாக இருக்கும்; மருமகனும் அவசரமாக வெளியூர் முகாம் போயிருப்பதால், இரவுதான் வருவார்கள் என்றும் சொன்னாள்.

மகள் வீட்டில் இரண்டு மூன்று நாட்[illegible] அலுப்பு ஆறினாலும், திருப்பத்தூர், திருமயம், பொன்னமராவதி என்று கல்யாணங்களுக்குப் போய், கூட்ட நெரிசலில் 'பஸ்' ஏறி இறங்கி கடு வெய்யிலில் அலைந்து திரிந்து, பின் ர[illegible] பிடித்து, மதுராந்தகம் வந்து, வீடு சேர்ந்ததில் இமயமலையே ஏறி இறங்கியதுபோல மலைப்புத் தட்டியது. நானும் 'ரிட்டையர்' ஆகி நாலு வருடம் ஓடி விட்டதே! பழைய உறவுக[illegible] புதுப்பிப்பது போலத்தான் கல்யாண வீட்டுச் சந்திப்புகள் எல்லாம்!

ஆனாலும் இந்தமுறை சம்பந்தியைப் பார்க்காமல் திரும்பியது மனசுக்குள் வாட்டியது. என்ன இருந்தாலும் அவரும் ஓய்வு பெற்று விட்டாரல்லவா? தப்பு சொல்லவோ சரி சொல்லவோ வேண்டாம்; நலம் விசாரிக்கவாவது ஒரு எட்டுப் போய்ப் பார்க்காமல் வந்து விட்டோமே? 'அதிகார ஜ்வாலை காதல் மலரை எரித்து விடுகிறது' - என்று காண்டேகர் கதையில் படித்த ஞாபகம்; அப்படி, கவுரவம், அந்தஸ்து, தப்பு அபிப்பிராயம் என்ற போலித்தனங்கள் வந்து எங்களின் தூய்மையான நட்பை உதாசீனப் படுத்திவிட்டனவோ என்று உள்ளம் மறுகியது. முன்னூறு மைல்கள் போனது பெரிதல்ல; அந்த மூன்று கிலோ மீட்டர் தூரம் போகாமல் வந்தது எவ்வளவு பெரிய இழப்பு; இன்சல்ட்...; இப்போது நினைத்து வருந்தி என்ன பயன்? சம்பந்தியின் மற்றொரு பக்கமும் எப்படித்தான் இருக்கிறது என்று பார்க்காமல் சின்னஞ்சிறுசுகள் போலல்லவோ நானும் நடந்து கொண்டு விட்டேன்.

போஸ்ட்மேன் தபாலை வீசிவிட்டுப் போனார். கடிதத்தை எடுத்தேன், பிரித்தபோது கை லேசாகப் படபடத்தது; கடிதம், மாண

# ரிமம்பர்,
# பிராமியுடன் கூடிய ஒரு ஞாபக சக்தி டானிக்.
## மறந்துவிடாதீர்கள்



ரிமம்பர் ஒரு ஞாபக சக்தி டானிக். அது மனஒருமைப்பாடு, கிரகிக்கும் தன்மை மற்றும் அறிவுத்திறன்களை அதிகரிக்கச் செய்து சிந்தனையை கூர்மையாகவும், சுறுசுறுப்பாகவும் செயல்பட உதவுகிறது. சிறந்த ஞாபக சக்திக்கு தேவையான பிராமி மற்றும் சங்கபுஷ்பி மூலிகைகளால் தயாரிக்கப் பட்டதால் மேற்கூறியவை சாத்தியமாகிறது. எளிதாக உட்கொள்வதற்கு ஏற்றவாறு சுவையுடன் கூடிய திரவ வடிவில் கலந்து தயாரித்துள்ளோம்.

ரிமம்பர் உங்கள் செல்லக் குழந்தைகளுக்காக. மறந்து விடாதீர்கள்.




BIONA

A Division of **Biological E. Limited**

18/1 & 3, Azamabad, Hyderabad - 500 020.

Mudra : BE : 97081 Tam



எங்கள் வீட்டு வாண்டுகள் செய்த வேலையால் சோபா கவரை கிழித்து விட்டார்கள். அதை அப்படியே விட்டால் அதிகம் கிழிந்து விடும் என்று என் கணவர் சைக்கிள் டியூபை கட் செய்து (கிழிந்த பகுதிக்கு அளவாக) பெவிகுமிக் போட்டு ஒட்டி விட்டார். இன்னும் கொஞ்ச காலத்திற்கு பிரச்னையே இல்லைதான்.

– யசோதா பழனிச்சாமி

மதுரை இலக்கியச் சம்பந்தியிடமிருந்துதான் வந்துள்ளது. தயக்கமும் ஆவலும் ஒரு சேரக் கலக்க, கடிதத்தைப் படித்தேன்.

“.............. நீங்கள் வந்த சமயம் நானும் உங்கள் சகோதரியும் (அவரது துணைவியை எனது தங்கையாகவே எப்போதும் விளிப்பது அவர் வழக்கம்) இராமநாதபுரம் போயிருந்தோம்; மறுநாள் இரவுதான் திரும்பினோம்; நீங்கள் வந்திருக்கிற செய்தி தெரிந்ததும் பக்கத்து வீட்டுக்கு, தொலைபேசி மூலம் பேசி, உங்களை இங்கு நம் வீட்டுக்கு வரச் சொல்லிக் கூறும்படி சொன்னேன்; அங்கு படுக்க வைக்க சற்று வசதிக்குறைவாகவும் இருக்கும்; அது மட்டுமல்ல, நாம் சந்தித்து வெகுநாட்கள் ஆகி விட்டன... மனம் விட்டு நிறையப் பேசலாம் என்ற ஆசை அதிகமாக இருந்தது; ‘மானா மதுரை வந்தால் கிடைக்கிற நிம்மதி, வேறு எங்கு போனாலும் எனக்கு வருவ தில்லை’ - என்று முன்பு இங்கு வரும்போதெல்லாம் சொல்வீர்கள்.

“இருட்டி விட்டது... அப்பாவுக்கு அலுப்பாக இருப்பதால் இன்று அங்கு வரவில்லை.... நாளைப்பின் வருவார்களாம்....”-என்று மருமகள் சொன்னதாகப் பக்கத்து வீட்டிலிருந்து மறுபடியும் தொலைபேசிச் செய்தி வந்தது. சமாதானம் அடைந்தேன். மறுநாளும் ஆவலுடன் உங்கள் வருகையை எதிர்பார்த்தேன்... ஏனோ நீங்கள் வரவில்லை; மேலும், அன்று காலை மதுரையிலிருந்து எனது நெருங்கிய நண்பர் எதிர்பாராதவிதமாக வந்து விட்டார்; ‘சிப்காட்’ போகிற வழியில் ‘தயாபுரம்’ பகுதியில் தொழுநோய் மருத்துவமனை இருக்கிறது. தோல் வியாதிகளுக்கு அங்கு நல்லபடியாகப் பார்க்கிறார்கள். ‘தொழுநோய் மருத்துவமனை’ - என்ற பெயர்ப்பலகையைப் பார்த்துவிட்டுப் பலரும் அங்கே வரக் கூசுவார்கள். நண்பருக்குத் தொழுநோய் எதுவும் இல்லை. நல்ல பண்பாளர். அளவான குடும்பம்; இறைப்பற்று அதிகம்; கைவிரல்களிலும் கால் பாதங்களிலும் கறுப்பாக தழும்பு மாதிரி தடிப்புத் தடிப்பாக வந்துவிட்டது. அவர் அச்சாபீஸ் வைத்து நடத்துகிறார்; அச்சுக் கோர்ப்பவராக இருந்து படிப்படியாக முன்னேறி முதலாளி ஆனவர்.

தயாபுரம் சென்று காண்பிக்க வேண்டுமென்ற ஆர்வத்தில் காலை ஆறுமணிக்கே புறப்பட்டு இங்கு எட்டரைக்கெல்லாம் வந்து விட்டார். ஒன்பது மணிக்கெல்லாம் தயாபுரம் போய்விட்டோம். டாக்டரைப் பார்த்துக் காட்டியதில் மனதுக்கு நிம்மதி. “இது சாதாரணமான தோல் சம்பந்தப்பட்ட தொந்தரவுதான்” என்று கூறி விட்டார்கள்.

நண்பர் அதிகாலை புறப்பட்டுவிட்டதால், காலை டிபன்கூட சாப்பிடாமல் வந்து விட்டார். மருத்துவமனையில் பெருங் கூட்டத்துக் இடையே டாக்டர் பார்த்து, காத்திருந்து, காண்பித்து விட்டு, வெளியேறியபோது பத்தரை மணிக்கு மேல் ஆகிவிட்டது. மெயின் ரோடுக்கு வரவே ஒருகிலோ மீட்டர் நடக்க வேண்டும். சாலைக்கு வந்தவுடன், ‘சிப்காட்’ வளாகத்திலிருந்து ‘பஸ்’ வந்ததால், அதில் ஏறி மானாமதுரை வந்து, அவருக்குச் சிற்றுண்டி அளித்து மதுரை வண்டியில் ஏற்றி அனுப்ப பகல் பதினோரு மணி ஆனது.

நீங்கள் வந்து வீட்டில் காத்திருப்பீர்களே என்ற ஆர்வத்துடனும் எதிர்பார்ப்புடனும் வேக மாக வீட்டுக்கு விரைந்தேன்; ஆனால் நீங்கள் வந்திருக்கவில்லை.

தயாபுரம் தொழுநோய் மருத்துவமனையிலிருந்து நீங்கள் தங்கியிருக்கும் வீட்டுக்கும், ‘சிப்காட்’ வர மேலும் ஒரு கிலோமீட்டர் வரை நடக்க வேண்டும்; நல்ல வெயில் வேறு; நீங்கள் எப்படி நினைக்கிறீர்களோ தெரியவில்லை; தொழுநோய் மருத்துவமனைக்குப் போய் விட்டு, நோயாளி ஒருவருடன், அப்படியே மாமா நம் வீட்டுக்கும் வந்திருக்கிறார் என்ற செய்தியை மருமகளாலும், ஏன் என் மகனாலும்கூட, அவ்வளவு சுலபமாய் செரிக்க முடியாது; ஆகவேதான் தயாபுரம் ஆஸ்பத்திரி வரை வந்த நான் அப்படியே ‘சிப்காட்’ வரத் தோதில்லாமல் திரும்பிவிட்டேன்.

இம்முறை நீங்கள்கூட ஏனோ என் வீட்டுக்கு வராமல், மகள் மருமகனைப் பார்த்ததோடு திரும்பிப் போய் விட்டீர்கள்; ஒரு வேளை, நானே தொழுநோயால் பீடிக்கப்பட்டு, தயாபுரம் போனதாக வதந்தி ஏதும் கிளம்பியதை நம்பி விட்டீர்களோ என்னவோ..!?

உடலில் ஏற்படுகிற ‘தொழுநோய்’கூட தொடர் சிகிச்சைக்குப் பின் சுத்தமாக நீங்கி விடும்; ஆனால் மனத்தில் ஏற்படுகிற நோய், கொடூரமானது; எந்தப் புனித கங்கையில் எத்தனை தடவை முங்கினாலும் போக்க முடியாதது.

ஓய்வு பெற்றதால் நமக்கெல்லாம் ‘டென்ஷன்’ சிறிதுமிலா ‘பென்ஷன்’ வாழ்க்கை வாழ்கிறோம். மறுமுறை வரும்போது மறவாமல் எங்கள் வீட்டுக்கு வாருங்கள்.

என்றும் அன்புடன்;

- இலக்கிய சம்பந்தி

நீண்ட கடிதத்தைப் படித்து வெகுநேரம் அமர்ந்திருந்தேன்.



# பெண் என்பதால் நம்பிக்கை வருவதில்லை

"ஆண் என்ன? பெண் என்ன? எல்லாம் ஓர் இனம்தான்" என்று நாம் பூரித்துப் போனாலும் சமுதாயத்தில் சரியான அங்கீகாரம் கிடைப்பதில் மட்டுமல்ல, பெருமையாகக் கல்வியை முடித்துக் களத்தில் இறங்கியதும்தான் அதிலுள்ள கஷ்ட, நஷ்டங்கள் புரிகின்றது என்கின்றனர் 'Field work' செய்ய விரும்பி "சிவில் இன்ஜினியரிங்" முடித்த பெண்ணும், 'மெடிக்கல் ரெப்' பணியில் இருக்கும் பெண்ணும் நம்மிடம் மனம் விட்டுப் பேசிய போது. (ஆனால் பெண் இன்ஜினியர் ஃபோட்டோ தர மறுத்துவிட்டார்)

"நான் பிளஸ் டூ முடித்துவிட்டு நல்ல மதிப்பெண்கள் எடுத்தவுடன், பி.எஸ்சி கணிதம் சேர்ந்தேன். இரண்டு மாதங்கள் கழித்து இன்ஜினியரிங் ரிசல்ட் வந்ததும் அதில் தேர்ச்சியடைந்தபோது சிவில் தந்தனர். கணிசமான எதிர்காலம் அதற்கு இருக்காது என்றும் பெண் என்பதால் சரிப்பட்டு வராது என்றும் பெற்றோர், உறவினர் எடுத்துச் சொல்லி வேறு குரூப் மாற்றிக் கொள்ளும்படி அறிவுரை சொன்னார்கள். எனக்குக் களப்பணி செய்ய ஆசையாக இருந்ததால் பிடிவாதமாக சேர்ந்து படிப்பையும் முடித்தேன். '90ல் பட்டம் வாங்கிய கையோடு வேலைக்கு விண்ணப்பம் செய்தால், அரசு பணியும் கிடைக்கவில்லை. தனியார் வேலையும் தரப்படவில்லை. எங்கு இண்டர்வியூ சென்றாலும் சிவில் படித்த காரணம் கேட்டுத் துளைத்தெடுத்தார்கள்.

வீட்டில் சும்மா இருந்த என்னை என் தந்தையின் நண்பர் வீடு கட்டியபோது அவருக்கு உதவுமாறு கேட்டுக் கொண்டதில் யோசனைகள் வழங்கி உடனிருந்து முடித்தேன். வீடு, கடை, அடுக்குமாடி எதுவாக இருந்தாலும் நம்பிக்கை தேவை. இந்தப் பணியில் பொதுவாக நம்பிக்கை குறைவுதான் என்பதுடன், பெண் அதிலும் சிறு பெண் என்பதால் என்னிடம் நம்பிக்கை வரவில்லை. வந்தவர்களும் இலவச ஆலோசனைகளைப் பெற்றும், உடனிருந்து சில வேலைகளை முடித்ததும் அன்பளிப்பாக பொருள்களைத் தந்தும் என் படிப்புக்கு மரியாதையைத் தந்தனர்!

ஒரு இடத்தில் வேலை செய்வதைவிட, தனியாகக் கட்டிட வேலை எடுத்துச் செய்யலாம் என்றால் மிகுந்த பிரயாசைப்பட வேண்டியுள்ளது. பெற்றோர் உறவினர் சொன்னபடி நாம் இந்தக் கோர்ஸை எடுக்காமல் கணிதத்தையே எடுத்துப் படித்திருந்ததால் எவ்வளவு நல்ல வேலையும், வருமானமும் கிடைத்திருக்கும் என்ற உணர்வு என்னை வருந்தச் செய்தது"





இப்போது மரிக்கொழுந்து சீசன். பூக்களைவிட அதிகமான, ரம்யமான வாசனை உள்ளது. இதை வாங்கி நம் புடவை அடுக்குகளில் ஒவ்வொரு புடவையின் நடுவிலும் சிறிது வைத்துவிட்டு, 2,3 நாட்கள் கழித்து வாடியபிறகு எடுத்துவிட வேண்டும். பிறகு புடவையை எடுத்துக் கட்டும்போது மரிக் கொழுந்து 'சென்ட்' மணம் தான்.

— ஆர். ஹேமலதா

என்கிறார் செல்வி. ராவ்.

"ஆணைப் போல் நிற்கவேண்டிய சரீர உழைப்பு அதிகமான, பிரச்சனைகள் நிறைந்த, டென்ஷனான வேலை இது என்பதை நான் என் மகளுக்கு எடுத்துச் சொல்லி வந்தேன். மேலும் திருமணம் என்று வரும்போது கடந்த நான்கு வருடங்களாக சரியான வரனே அமைய வில்லை. காரணம் இன்ஜினியரிங் படித்தும் வேலையில்லை. வெளிநாடு வரன்கள் வந்து ஜாதகப் பொருத்தம், மற்றவை சரியாக இருந் தாலும் கம்ப்யூட்டர் சயின்ஸ் இன்ஜினியரிங் படித்தால்தான் அங்கு வேலை என்றும் நிறைய வரன்கள் தட்டிப் போனது. பெருமையான 'புரொபஷனல்' கோர்ஸ் முடித்திருந்தாலும், கனவேலை (சிவில்) எடுத்துப் படிப்பது எதிர் கால பணி நிச்சயமற்ற படிப்பாக (பெண் களுக்கு) வீணாகிறது" என்று அடித்துச் சொல் கிறார் அவரது தந்தை. பெண்ணை படிக்க வைத்து வேலையும் இல்லாமல், திருமணமும் ஆகாமல் (நல்லவேளை, நாம் சென்ற சமயம் திருமணம் நிச்சயமாகியிருந்தது) தவித்த ஒரு சராசரி மத்திய தர தந்தையின் தவிப்பும், ஆதங் கமும் அவர் சொல்லில் வெளிப்பட்டது.

அதைச் சட்டென்று மறுக்கிறார் செல்வி. ராவ். "அப்படியில்லை, முதலில் தன்னம் பிக்கையும் தொடர்ந்து பொறுமையும் தேவை. நமக்கு ஒரு ரெகக்னிஷன் என்பது கஷ்டப் பட்டுதானே பலருக்கும் கிடைக்கிறது. நம்பிக் கையைப் பெற முதலில் தெரிந்தவர்களுக்காகத் தான் வீடு கட்ட வேண்டியுள்ளது. அதில் வெற்றி பெற்றால் ஏற்படும் சந்தோஷத்தை எடுத்துச் சொல்ல வார்த்தைகளே இல்லை. ஒரு நண்பரது ஃபிளாட்டை முடித்தபோது அவரும் மிகவும் சந்தோஷப்பட்டார். பலரிடமும் என்னை அறிமுகப்படுத்தினார். தெரிந்தவர் களிடம் அதிக ஊதியத்துக்கு பதில் அனுபவம் தான் கட்டணமாகக் கிடைக்கும் என்பதுடன் ஆத்ம திருப்தியுடன் கூடிய ஒரு 'டீம் வொர்க்' இது. பூமியாக தரைமட்டமாக இருந்த இடம் நம் உழைப்பால் வீடாகி அதில் குடி வருபவர் இது யார் கட்டிய வீடு? என்று கேட்பதே பெருமைதானே!

மேஸ்திரி என்பவர் நடுத்தர வயதினராக இருப்பதால் அவரது அனுபவத்தை நம்புகின் றனர். சீலிங் போடும்போதும், வெளிப்பூச்சு, வேலைகள் நடக்கும்போதும் வேலையாட்கள் சாரத்திலிருந்து விழுந்து விடாமல் பாதுகாப் பாக ஒவ்வொரு நாளும் கீழே இறங்கினால் தான், நம் மனபாரம் இறங்கும். அதுவரை நம் பொறுப்பில் உள்ளது அவர்கள் உயிர். பெண் சொல்லி வேலை செய்வதா? எனும் மனப் பான்மை ஆணாதிக்க சமுதாயத்தில் முற்றிலும் மாறவில்லை என்பதைக் காட்டுகின்றது. கட்டிட வேலையில் சிறு குறையும் வெளிப் படையாக சட்டென்று தெரிவதால் குறையைச் சுட்டிக்காட்டி சத்தம் போடும் உரிமையாளர் களை பெருமையாகப் பேசும்படி வைப்பது இத்தொழிலில் கடினமான முயற்சிதான். வேலை செய்பவர்களும் மனிதர்கள்தானே, அவர்களுக்கும் உடல்நிலை, குழந்தை குட்டி கள், நோய் நொடி இருக்கும் என்பதைப் புரிந்து கொள்ளாமல் வேலை தாமதமானால், வீட்டுச் சொந்தக்காரர்கள் இன்ஜினியர்களிடம் கருத்து வேறுபாடு கொள்வது வருந்தத்தக்கது.

திருமணம் ஆனாலும் கூட குறிப்பிட்ட நேரம் சென்றுவிட்டு, வீட்டையும் கவனிக்க லாம். இந்த வேலைக்கு வயது வரம்போ, ஓய்வு பெறுவதோ கிடையாது. மனதில், உடலில் தெம்பு உள்ளமட்டும் சுதந்திரமாக செயல்பட லாம். இதில் பிரச்சனைகள் மட்டுமல்ல, சந்தோஷங்களும் உள்ளன. அடுக்குமாடிக் கட்டிடங்களை, வியாபார ரீதியான கட்டிடங் களைக் கட்டுவதைவிட சிறிய வீடுகள் கட்டு வதை தனியொரு நபராக எடுத்துச் செய்கை யில் விரைவாக மூன்றே மாதத்தில் முடிக்க முடியும். பணம் மட்டும் தந்தால் போதும். எங்கள் முழு ஈடுபாடும், உடல் உழைப்பும் தந்து வீட்டை முடிப்பது ஒரு திரில்லிங்கான அனுபவம்.

மேஸ்திரி, கார்பென்டர், பிளம்பர், எலெக்டிரீஷியன் அனைவரும் (கடைசி கட்டத்தில்) ஒருங்கிணைந்து செயல்பட வேண்டியிருப்பதால் உயர்ந்தபட்ச டென்ஷனு டன் வேலை செய்யும் சமயம் அது. சரியான அணுகுமுறையும், மனித நேயத்துடன் எடுத்துக் காட்டி அவர்களை ஒரு பெண்ணால் வெற்றி கரமாக செயல்பட வைக்க முடியும்.

இன்று காலம் முன்னேறி வருவதால், ஆண், பெண் எனும் சில இடங்களில், தொழில்களில் உள்ள ஈகோ குறைந்து, எதிர்காலத்தில் பெண்

# +2, டிகிரி முடித்தவர்களுக்கு

# நல்ல வேலை.

**+2 வுடன் PENTAGON'S EXECUTIVE SECRETARY COURSE மட்டுமே போதும்!**

**உங்களுக்கு தெரியுமா?** EXECUTIVE SECRETARY வேலைக்கு சிறந்த மதிப்பு கிடைக்கிறது. இந்த வேலைக்கு நாளுக்கு நாள் தேவை அதிகரித்துக் கொண்டு வருகிறது. இந்த வேலைக்கு மற்ற ஆ ஃபீஸ் வேலைகளை விட அதிகமான சம்பளம் கொடுக்கப்படுகிறது. ஆம், நீங்கள் +2 அல்லது டிகிரி முடித்து இருந்தாலே போதும். நாங்கள் ஆறே மாதங்களில் உங்களை ஒரு திறமை வாய்ந்த EXECUTIVE SECRETARY - யாக உருவாக்குவோம்!

**சிறப்பு அம்சங்கள்:**

வேலைவாய்ப்புப் பிரிவின் உதவியுடன் கோர்ஸ் முடிந்து வெற்றிப் பெற்ற உடனேயே வேலையில் சேருவது நிச்சயம்.

ஆரம்ப சம்பளம் மாதம் ரூ.2000/- எதிர்பார்க்கலாம். ஒன்றிரண்டு வருடங்கள் அனுபவத்திற்குப் பிறகு ரூ.4000/- வரை கிடைக்க வாய்ப்பு.

ஒவ்வொரு வருடமும் இத்துறைக்கு கிட்டத்தட்ட 85,000 வேலைவாய்ப்புகள் அறிவிக்கப்படுகின்றன. ஆனால் மிகக் குறைவானவர்களே இதில் பயிற்சி பெறுகிறார்கள்.

இன்றே இப்பொழுதே பதிவு செய்யுங்கள். சிறந்த எதிர்காலத்தை உருவாக்கிக் கொள்ளுங்கள்.

**எங்களிடம் பயிற்சி பெற்ற மாணவர்கள் பணிபுரியும் சில நிறுவனங்கள்**

*American Express Bank * Britannia *Hotel Chola * ANZ Grindlays Bank *ICIM *ICICI *ITC * Johnson & Johnson * Kotak Mahindra Finance * Park Sheraton Hotel * Quality Inn Aruna * SRF Ltd * Square-D Software *Synergy Finance * Taj Coromandal Hotel * Nestle India * BPL India * Singapore Airlines * Titan * Godrej & Boyce * Citi Bank * Pentafour.*

**Bring this cutting and avail 10% FEE WAIVER**

**PENTAGON ACADEMY**

(Formerly SABHARI)

**Chennai :** ☐ **Mount Road :** 1B, Velders St., Near LIC, Ph : 8549069 / 8540733/ 8540920. ☐ **Adyar:** 41, L.B. Road, Ph : 4917396 ☐ **Ambattur OT :** 216, M.T.H. Road, Next to SBI, Ph : 6350719. ☐ **Anna Nagar :** 388B, Poonamallee High Road, Opp. Anna Arch, Ph : 4837919, 4810521. ☐ **Kodambakkam:** 16, Puliyur 2nd Main Road, Trustpuram, Ph : 4842647 ☐ **Tambaram West :** 20, Ayyasamy Street, Ph : 2366747. ☐ **Thiruvotriyur :** 975, T.H. Road, Near Police Station, Kaladipet, Ph: 5964279 ☐**T.Nagar :** 49, Motilal Street, Ph : 4342890. ☐ **Coimbatore :** Singapore Plaza, 5th Floor, 333, Cross Cut Road, Gandhipuram, Ph : 234450. ☐ **Tirunelveli :** Nellai Plaza, 3rd Floor, 64B, Madurai Road, Ph : 334833. ☐ **Trichy :** Crystl Plaza, 3rd Floor, 22B, Nandhi Koil Street, Theppakulam. Ph : 706721. ☐ **Madurai :** No 3, 80 ft Road, (Opp. Ambika Theatre) Anna Nagar, Ph : 533777. ☐ **Chidambaram:** O.S.Deen Building, 3rd Floor, 176, West Car Street.. **Now at Madurai.**

EFFICIENT



ரஸனா கலக்கும்போதோ, சர்பத் கலக்கும்போதோ, இரண்டு ஸ்பூன் தேன் விட்டு கலந்தால் சுவையும் கூடும். உடம்பிற்கும் நல்லது.

– ஆர். சீதா

சிவில் இன்ஜினியர்கள் நிறைய பேர் வருவார்கள். திறமையை நிரூபிப்பார்கள் என்பது என் எண்ணம் மட்டுமல்ல ஆசையும் கூட. என் வருங்கால கணவர் அனுமதியுடன், ஆதரவுடன் களவேலையில் இறங்கும் ஆசையும் உள்ளது" என்று புதுப் பெண்ணுக்கே உரிய வெட்கத்துடன் முடித்தார் செல்வி. ராவ்.

"**ப**ள்ளியிறுதிக்குப் பிறகு பி.ஃபார்ம், அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் நான்கு வருட கோர்ஸ் முடித்தேன். பேப்பர் பார்த்து வேலைக்கு விண்ணப்பம் செய்தபோது, 'பேட்லிபாய்' கம்பெனியில் 'மெடிகல் ரெப்' வேலை கிடைத்தது. 'மெடிகல் ரெப்' வேலையில் முன்னைவிட பெண்கள் திருமண மான பெண்கள்கூட அதிகம் பேர் இருக்கிறார் கள். எட்டு மாதங்கள் அங்கு வேலை செய் தேன். கடந்த ஒன்றரை வருடங்களாக 'கிளாக்ஸோ' நிறுவனத்தின் 'ரெப்'பாகப் பணி செய்கிறேன்.

ஆண், பெண் பாகுபாடு இந்தத் தொழிலைப் பொறுத்தவரை கண்டிப்பாக இல்லை. அலைச்சல் காரணமாக பெண் தயங்கியிருக்கலாம். இப்போது பெண்களுக்கு வண்டி ஓட்டத் தெரியும். ஒரு நாளைக்குப் பத்து டாக்டர்களையும், ஐந்து மெடிகல் கடைகளையும் விசிட் செய்ய வேண்டும் நாங்கள். வண்டி ஓட்டத் தெரியாத ஒரு சிலருக்கு நேரம் அதிகமாகும். ஆட்டோ மூலம் செலவும் அதிகமாகும் என்பதுதான் குறை. மேலும் அவரவர்களுக்கு குறிப்பிட்ட ஏரியாக்கள் என்று குறித்துக் கொடுத்து விடுவதால் கஷ்டமாக இருக்காது. ஒரே ஏரியாவில் இரண்டு, மூன்று டாக்டர்கள், கடைகள் இருந்தாலும் நடப்பது சிரமமாக இருக்கும் என்பதால் வண்டி இருப்பது உபயோகமாக உள்ளது. அதனால் படிப்பில் மட்டுமல்ல; வண்டி ஓட்டுவதிலும் பெண்கள் திறமை காட்டுவதால் 'மெடிகல் ரெப்' வேலை மரியாதைக்குரிய நல்ல சம்பளம் கிடைக்கக் கூடிய வேலையாகவே இருக்கின்றது என்பதே உண்மை.

டாக்டர்களை குறிப்பிட்ட நேரத்துக்குச் சென்று நாங்கள் சந்திக்க வேண்டும். சில டாக்டர்கள் இரவு, நேரம் கழித்து அழைத்தால் பேசி முடித்துவிட்டு வீடு திரும்ப நேரமாகும். ஒருமுறை இரவு நேரம் என் வண்டி கோடம்பாக்கம் மேம்பாலத்தில் பழுதாகி விட்டது. அங்கிருந்து சாலிகிராமத்திலுள்ள என் வீடு வரை தள்ளிக் கொண்டே வந்தேன். படு வெறுப்பாக இருந்தது. இதுபோன்ற தொல்லைகள் எந்த வேலையில்தான் இல்லை? ஒரு அலுவலகத்தில் மணிக்கணக்காக வேலை செய்வதைவிட சுதந்திரமாக, குறிப்பிட்ட நேரத்தில் வேலையையும் முடித்துவிட்டு வீட்டிலும் சொந்த வேலைகளை கவனிக்க முடியும். கம்பெனியிலும் அட்ஜஸ்ட் செய்து கொண்டு இரவு நேரம் வேறு யாரையாவதுகூட அனுப்புவதால் இந்த வேலைக்குத் திருமணம், குழந்தைகள், குடும்பம் நிச்சயமாகத் தடையாக இருப்பதில்லை.

டென்ஷன் இல்லாத அமைதியான வேலை என்பதுடன் நாமும் நாம் படித்த கல்வி மூலம் சமூகத்தில் சேவை செய்யும் டாக்டருடன் "ராமருக்கு உதவிய அணிலாக" சேவை செய்வதில் சந்தோஷம் உள்ளது. டாக்டர்கள் மூலம் 'சாம்பிள்' மருந்துகளை ஏழைகளுக்குக் கொடுத்து உதவுகின்றேன். மருந்து நிறுவனத்தில் வேலை செய்பவர் என்ற முறையில் சலுகையில் மருந்துகளை உறவினருக்கு வாங்கித் தரவும், விலையுயர்ந்த, விரைவில் கிடைக்காத மருந்துகளைத் தேடி உடனுக்குடன் தர முடிவதும் எனக்கு மகிழ்ச்சி தருகின்றது.

ஒருமுறை டாக்டரிடம் நான் பேசிக் கொண்டிருந்தபோது குழந்தை எதையோ விழுங்கி விட்டது, மயக்கமாக இருக்கிறது என்று அழகான ஒரு வயதுக் குழந்தையை அலறிப் புடைத்துக் கொண்டு தூக்கி வந்தனர். குழந்தையை சோதித்த டாக்டர், "பெரிய ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போங்கள். இங்கு சரியான உபகரணம் இல்லை" என்று அனுப்பி விட்டார். பிறகு என்னிடம் அந்தக் குழந்தை ஏற்கனவே இறந்து விட்டது என்பதால் அப்படிச் சொல்லி அனுப்பினேன் என்றார். இப்போதும் அந்தப் பிஞ்சு முகம் என் நெஞ்சில் வந்து பாரமாய் சில நொடிகள் தங்கி மறையும்.

இன்றைய ஆண்களும், பெண்ணை வேலைக்குப் போக ஊக்குவிக்கின்றார்கள். சந்தோஷமான வாழ்க்கைக்குத் தேவையான பணத்தை மனைவி சம்பாதிப்பதால் அட்ஜஸ்ட் செய்து கொள்கிறார்கள்" என்கிறார் செல்வி சவிதா.

**பேட்டி: பானுமதி ராமச்சந்திரன்**

## பொருள் : விருந்து ஸ்பெஷல்

**முதல் பரிசு ரூ. 300/-**



ராஜலட்சுமி



சித்ரா



வள்ளி விஸ்வநாதன்



பட்டம்மாள் ஆனந்தா,

# பன்னீர் புலாவ்

**தேவையான பொருட்கள்:**

பன்னீர் பாலாடை கட்டிகள் - 1½ கப் (சிறு துண்டுகள்)
அரிசி - 1 கப்
மஞ்சள் பொடி – ¼ ஸ்பூன்
தக்காளி - 2
பொடியாக நறுக்கிய வெங்காயம் - ½ கப்
பச்சைப் பட்டாணி - 50 கிராம்
காலிபிளவர் - 100 கிராம்
காரட் - 100 கிராம்
உருளைக்கிழங்கு - 100 கிராம்
பீன்ஸ் - 100 கிராம்
அரைத்த பூண்டு, இஞ்சி - ¼ ஸ்பூன்
சோம்பு - ¼ ஸ்பூன்
பட்டை - 1 துண்டு
லவங்கம் - 4
தக்காளி சாஸ் - 5 ஸ்பூன்
புதினா கொத்தமல்லி இலை – சிறிது
தண்ணீர் - 2 கப்
டால்டா (அ) நெய் - ¼ கப்



**செய்முறை**

வாணலியில் டால்டா (அ) நெய் ஊற்றி பாலாடை கட்டிகளை பொன் னிறமாக வறுத்துக் கொள்ள வேண்டும். பிறகு தக்காளி சாஸ் மேலே ஊற்றி தனி யாக பாத்திரத்தில் பாலாடை கட்டிகளை வைத்துக் கொள்ளவும். அரைத்த இஞ்சி, பூண்டு, பட்டை, லவங்கம், சோம்பு ஆகியவற்றை வதக்க வேண்டும். வெங்காயம், ப.மிளகாய், ப.பட்டாணி, காரட், காலி பிளவர், உருளைக் கிழங்கு, தக்காளி வதக்க வேண்டும். களைந்து வைத்துள்ள அரிசியையும் போட்டுக் கிளற வேண்டும். இக் கலவைகளை 2 கப் தண்ணீர் ஊற்றி மஞ்சள் பொடியைப் போட்டு குக்கரில் வைக்க வேண்டும். மூன்று விசில் வந்தவுடன் இறக்கி, புதினா, கொத்தமல்லி தழைகளை தூவி சாஸில் ஊறவைத்த பாலாடை கட்டி களைப் போட்டு கிளறி மிதமான தீயில் மறுபடியும் 2 நிமிடம் வைத்து இறக்கினால் 'பொல பொல'வென மணக்கும் பன்னீர் புலாவ் ரெடி.

- ராஜலட்சுமி சுதர்சன், குஜராத்.

# இம்மாத இல்லத்தரசி

**இரண்டாம் பரிசு ரூ. 200/-**

# சொதி

திருநெல்வேலி பக்கம் என் றாலே விருந்து சமையலுக்கு சொதி, இஞ்சித் துவையல், வாழைக்காய் வறுவல், உருளைக் கிழங்கு பொடிமாஸ்,

சேமியா பாயஸம்.

***தேவையான பொருட்கள்:***

தேங்காய் - 2
பா. பருப்பு 150 கி
கேரட் - 100 கி
உ. கிழங்கு - 100 கி
முருங்கைக்காய் - 3
பீன்ஸ் - 100 கி
மிளகாய் - 15
எலுமிச்சை சாறு - சிறிதளவு ( 1 பழம்)
இஞ்சிச் சாறு - சிறிதளவு
பூண்டு - 2,
சிறிய வெங்காயம் - 150 கி

***செய்முறை:-***

முதலில் தேங்காயைத் துருவி வெந்நீர் விட்டு நன்றாகப் பிசைந்து முதல் பால் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும். பின் மிக்ஸி யிலோ, ஆட்டுரலிலோ நன்றாக அரைத்து இரண்டாம் பால், மூன்றாம் பால் என்று இருதடவை எடுத்துக் கொள்ள வேண்டும். உ. கிழங்கை வேகவைத்துக் கொள்ள வேண் டும். பா. பருப்பையும் வேக வைத்துத் தனியே எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

கேரட்டை வட்ட வட்டமாகவும், மு.காய், பீன்ஸ் போன்றவற்றை சாம்பாருக்கு நறுக் குவது போலவும் நறுக்கிக் கொள்ள வேண்டும். பூண்டையும் வெங்காயத்தைத் தோல் நீக்கி வைத்துக் கொள்ள வேண்டும். மிளகாயை அரைத்து வைக்கவும்.

பின் மூன்றாம் பாலில் கேரட், மு.காய், பீன்ஸ் போன்ற காய்களையும் வதக்கிய பூண்டு, வெங்காயத்தையும் போட்டு வேக விட வும். காய்கறிகள் வெந்தவுடன், இரண்டாம் பாலில் அரைத்த மிளகாய் விழுது, ப.பயிறு வெந்தது, உப்பு கலந்து காய்கறிகளுடன் வெந்து கொண் டிருக்கும் மூன்றாம் பாலுடன் கலக்க வேண் டும். பின் கொதி வந்து மிளகாய் வாசனை நின்றவுடன் முதல் பாலை ஊற்றி ஒரு கொதி வந்தவுடன் இறக்கி விடவும். சிறிது நேரம் கழித்து (5 நிமிடம்) இஞ்சிச் சாறையும், எலு மிச்சை சாறையும் விட்டு கறிவேப்பிலை, கொத்துமல்லி தூவி கடுகும் தாளிக்கலாம். இல்லையெனில் சீரகத்தை நெய்யில் வறுத்து சேர்க்கலாம். இக் குழம்பு 4, 5 பேருக்கு தாரான மாக வரும். ஆனால் தேங்காய் நல்ல விளைந்த காயாக இருக்க வேண்டும்.

### இஞ்சித் துவையல் :

இஞ்சியை கழுவி தோல் சீவி, துண்டு துண் டாக நறுக்கி, எண்ணெயில் வறுத்துக் கொள் ளவும். பின் 2 மிளகாய் வற்றல், சிறிதளவு தனியா வறுத்துக் கொண்டு உப்பு, புளி சேர்த்து அரைத்து சிறிதளவு வெல்லம் சேர்த்து, தாளித்து எடுக்கவும்.

### வாழைக்காய் வறுவல் :

வாழைக்காயை வட்டமாக வெட்டி உலர விடவும். பின் எண்ணெயில் பொரித்து உப்புப் பொடி, வத்தல் பொடி தூவினால் வறுவல் ரெடி.

### உ. கிழங்கு பொடிமாஸ் :

வெந்த உருளைக்கிழங்கை நறுக்கி உப்பும், மி. வத்தல் பொடியும் கலந்து வைத்துக் கொண்டு, மிக்ஸியில் இரண்டு வெங்காயம் 10 பல் பூண்டு, சேர்த்து அரைத்து உ. கிழங்கில் பிசறி கொஞ்சம் அதிகமாக எண்ணெய் விட்டு வதக்கி எடுக்கவும். சாதத்தில் சொதியை நிறைய விட்டுப் பிசைந்து (ரசம் அதிகமாக விடுவோமல்லவா! அதுபோல) இஞ்சித் துவை யல், உகிழங்கு, வறுவலுடன் சாப்பிட்டால்



மல்லிகை, ஜாதி, முல்லை வகையறாக்களை மாலையில் வாங்கி, இரவில் ஈரமான துணியில் சுற்றி வைத்துவிட்டு பிறகு மறுநாள் காலையில் வைத்துக் கொள்வோம். அப்போது நாம் தினமும் பயன்படுத்தும் கைக்குட்டையில் சுற்றி வைத்தால் மறுநாள் உப யோகிக்கும்போது நல்ல வாசனையாக இருக்கும். (எங் கள் வீட்டில் 'வாசனை கைக்குட்டை யாருக்கு?' என்று மூவருக்கும் சண்டை வர இப்போதெல்லாம் மூன்று கைக்குட்டைகளை நனைத்து ஒவ்வொன்றிலும் கொஞ்சம் பூவை வைத்து விடுவது வாடிக்கையாகி விட்டது!)

– ஆர். ஹேமலதா

எண்ணங்களைப் பற்றி கவனமாயிருங்கள்
அவை வார்த்தைகளாக வெளியேறுகின்றன!
வார்த்தைகளில் கவனமாக இருங்கள்
அவை செயலாக உருப் பெறுகின்றன!
செயல்களில் கவனமாக இருங்கள்
அவை பழக்கமாக மாறுகின்றன!
பழக்கங்களில் கவனமாக இருங்கள்
அவை ஒழுக்கமாக உயர்வு பெறுகின்றன!
ஒழுக்கத்தில் கவனமாக இருங்கள்
அதுதான் உங்கள் வாழ்க்கையை உருவாக்குகிறது!

(யாரோ)

தகவல் - ஆர். ஹேமலதா



சூப்பராக இருக்கும்.

சேமியா பாயசம் செய்யும் முறை அனை வரும் அறிந்ததே.

இதனைச் செய்வதால், விருந்துக்கு வழக்க மான சாம்பார், ரசம், அவியல், பருப்பு, பச்சடி, பொரியல் என்று செய்யாமல் வித்தியாசமாக இருக்கும்.

வி. வள்ளி விஸ்வநாதன்,
வள்ளியூர்.

## மூன்றாம் பரிசு ரூ. 100/-

## சாக்லேட் ரசகுல்லா

***தேவையான பொருட்கள்:***

சாக்லேட் பார் - 4
பால் - 2 லிட்டர்
எலுமிச்சம் பழம் - 1 மூடி
சர்க்கரை - ½ கிலோ,
டைமண்ட் கல்கண்டு - 5 கிராம்,
ஏலத்தூள் - சிறிது,
ஐசிங் பவுடர் - 2 டேபிள் ஸ்பூன்

***செய்முறை:-***

பாலை நன்கு காய்ச்ச வேண்டும். கொதிக் கும் பாலில் ஒரு மூடி எலுமிச்சம் பழம் பிழிய வேண்டும். உடனே பால் திரிந்து பிரியும். அப் போது பெரிய மெ வடிகட்டியில் இந்தப் பாலை ஊற்றி வடிய வைக்கவும். சிறிதும் தண்ணீர் இல்லாமல் இறுக வடிய வைக்கவும்.

இந்த கட்டிப் பாலில் நன்கு பொடி செய்த சாக்லேட் தூளைப் போட்டுப் பின்பு இத் துடன் ஐசிங் சுகர் ஏலத்தூள் கலந்து நன்கு பிசைய வேண்டும். சிறிதுகூட கட்டியாக இருத் தல் கூடாது. நன்கு ஒன்றாகக் கலந்ததும் சிறு சீடை அளவு, அழுத்தாமல் உருண்டைகளாக செய்து வைக்கவும்.

அடுப்பில் வாயகன்ற பாத்திரத்தை வைத்து பாலை வடிகட்டிய எலுமிச்சை நீர் எடுத்து ஊற்றி பின்பு சர்க்கரையைப் போட்டு நன்கு கொதிக்க விடவும். இந்தக் கலவையில் கொதிக் கும்போது, மேற்கூறிய பால் உருண்டைகளை எடுத்து நடுவில் ஒரு கல்கண்டை வைத்து நன்கு மூடி மறுபடியும் உருண்டையாக செய்து ஒவ்வொன்றாக போடவும். ஒன்றாக போட்டால் சேர்ந்து கொள்ளும். ஆகையால் ஒவ்வொரு உருண்டையும் மேலே எழும்பி வரும்போது இன்னொரு உருண்டையைப் போடவும். இதுபோல எல்லாவற்றையும் ரச குல்லாவாக செய்தபிறகு எடுத்து ஆற வைத்து ஒரு தட்டில் பாகுடன் ரசகுல்லாவை வைத்து சாப்பிட தர ஆஹா!

பி. ராஜேஸ்வரி, சேலம் - 7

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## காய்கறி கீர்

'**கா**ய்கறி கீர்' பல காய்கறிகள் சேர்த்து காய்கறிகளின் மணம் சிறிதுமின்றி இந்தப் பாயஸம் எதனால் செய்யப்பட்டிருக்கிறது என்று சிந்திக்க வைக்கும். நிறமும் பாதாம்கீரை ஒத்திருக்கும். இது ஒரு புதுமையான சுவைமிக்க பாயஸம்.

***தேவையான பொருட்கள் :***

பூசணிக்காய் - 100 கிராம்



**தேங்காய்ப் பொடி நீண்ட நாள் கெடாமல் இருக்க, தேங்காய்த் துருவலை ஒருநாள் வெயிலில் காய வைத்துப் பிறகு எண்ணெய் ஊற்றிச் சிவக்க வறுக்க வேண்டும்.**

**– ஆர் பார்வதி**

பரங்கிக்காய் - 100 கிராம்
உருளைக்கிழங்கு - 100 கிராம்
கேரட் – 100 கிராம்
கசகசா – 2 மேசைக்கரண்டி
பால் – 250 மிலி லிட்டர்
சர்க்கரை – 200 கிராம்
ஏலக்காய் – 6
முந்திரி பருப்பு – 6
நெய் – 1 மேசைக்கரண்டி

**செய்முறை :**

பூசணி, பரங்கி, உருளை, கேரட் எல்லாவற்றையும் தோல் சீவி சிறு துண்டுகளாக நறுக்கி, அலம்பி, குக்கரில் தண்ணீர் விடாமல் வேகவைக்கவும். காய் வெந்ததும், கசகசாவையும் சேர்த்து நன்கு மசிய மிக்ஸியில் அரைக்கவும். அரைத்த விழுதுடன் சர்க்கரை சேர்த்துக் கொதிக்க வைக்கவும். ஆறியதும், நெய்யில் முந்திரியை வறுத்துப் போட்டு, பால், ஏலப் பொடி சேர்க்கவும்.

**– பட்டம்மாள் ஆனந்தா,**
**சென்னை - 83.**

ஆறுதல் பரிசு ரூ. 50/-

## திடீர் ஃபலூதா

**தேவையான பொருட்கள்:**

1 பாக்கெட் நூடுல்ஸ்
½ டின் மில்க் மெய்ட்
¼ கிலோ சர்க்கரை, ரோஸ் எஸன்ஸ்
ரோஸ் கலர், பொடித்த ஐஸ் கட்டிகள்
துண்டுகளாக்கிய பாதாம் பருப்பு.

**செய்முறை :**

கொதி நீரில் நூடுல்ஸைக் கொட்டி ஒரு நிமிடம் கொதிக்க வைத்து வடித்துக் கொள்ளவும். ஒரு பாத்திரத்தில் சர்க்கரையுடன் ஒரு கப் நீர் சேர்த்துக் கொதிக்க வைக்கவும். சிறிது பாலை ஊற்றினால் அழுக்கு மேலாக வந்து விடும். அதன் பிறகு நூடுல்ஸைப் போட்டு ரோஸ் கலரை சேர்த்து ஒரு நிமிடம் கொதிக்க வைத்து ஆற விடவும்.

**செட்டிங் செய்யும் முறை:**

குழியான பிளேட்டில் கொஞ்சம் பாகுடன் நூடுல்ஸைப் போட்டு அதன் மேல் ஒரு ஸ்பூன் மில்க் மெய்டைப் பரவலாக ஊற்றி சிறிது ரோஸ் எஸன்ஸ் சேர்த்து க்ரஷ் செய்த ஐஸ் கட்டிகளைப் போட்டு பாதாம்பருப்பு கட்டிங்ஸை தூவிப் பரிமாறவும். விருந்துக்கு பிறகு பரிமாற இது ஏற்ற ஒரு டெசர்ட் ஆகும். செய்யும் முறையும் எளிது. செலவும் குறைவு. புதுமையானதும் கூட.

**கீதா,**
**சென்னை-8.**



உளுந்து அப்பளம் வைக்கும் டப்பாவில் பெருங்காயத்தை வைத்தால், அப்பளம் வாசனையாக, பழைய வாடை வராமல் இருக்கும்.

– ஆர். பார்வதி

# கோடைக்குக் கூல்: பேஷியல்!

**1 2 3 4**

இப்போது கோடைக்காலம். எல்லோரும் வெய்யிலின் கொடுமையினால் தவிக்கும் இந்த காலத்தில், பெண்களுக்கு ஒரு வரப் ப்ரசாதம் உண்டு. அதுதான் பார்லர்களில் செய்யப்படும் கோடைக் கால சிகிச்சைகள்.

முதலில் முடியின் பராமரிப்பைப் பற்றிப் பார்ப்போம். இந்த நாட்களில் உஷ்ணத்தினால் முடி உதிர்தலும், பிளவு படுதலும் சாதாரணம். அதனால் முகத்திற்கு ஏற்ற, பொருத்தமான styleஇல் முடியை லேசாக trim செய்து கொள்ளலாம்.

இதனால் முடி நீளமாக வளரும். அடர்த்தியாகக் காட்சியளிக்கும்.

இப்பொழுதெல்லாம் இளம் வயதினர் விரும்புவது 'fringe' என்று சொல்லப்படும் ஸ்டைல். (நான் செய்து கொண்டிருப்பதுபோல, முன் நெற்றியில் கூந்தல் விழுவது போன்ற ஹேர் கட்) இது முகத்தை மேலும் அழகாகவும், இளமையாகவும் தோற்றமளிக்கச் செய்கிறது. முடியில் பேன், பொடுகு தொல்லை ஏற்படாமல் நன்கு கவனித்து அதற்குத் தேவையான சிகிச்சைகளை அதாவது Oil massage, ஹென்னா போன்ற சிகிச்சைகளை எடுத்துக் கொள்ளலாம்.

**5, 6** – அடுத்து பேஷியல்களில் இந்த வெயிலின் கொடுமையிலிருந்து தப்பிக்க நாம் செய்து கொள்ளக்கூடிய "கூல்" பேஷியல்.

1



2



3



1) வெஜிடபிள் பேஷியல் – காய்களிகளில் காரெட், வெள்ளரிக்காய், தக்காளி, உருளை போன்றவை முகத்திற்குத் தேவையான குளிர்ச்சியையும் ஊட்டத்தையும் அளிக்க வல்லது. இந்தக் காய்கறிகளைக் கொண்டே பேஷியல் செய்து, அவைகளை 'பேக்' ஆகவும் வைக்கிறோம். வெள்ளரியையும் தக்காளியையும் உள்ளே சாப்பிடும்போது சிறிதளவு முகத்திற்காகவும் ஒதுக்கினால் நல்ல பயன் அடையலாம்.



6

இதை நீங்களே வீடுகளில்கூட செய்யலாம். இருக்கும் காய்கறிகளை (வெள்ளரிக்காய், கலீப், கோஸ் போன்றவற்றை) அரைத்து, முகத்தில் பூசிக்கொண்டு சிறிது நேரம் ஊற வைத்துக் குளிக்கலாம்)

அடுத்த பேஷியிலின் பெயர் 'Flower Delight' (ப்ளவர் டிலைட்): இதன் பெயருக்கு ஏற்ப இது மிகவும் உல்லாச உணர்வை அளிக்கக் கூடியது.



5





4

மல்லி, ரோஜா, தாமரை போன்ற பூக்களின் சாறினால் பேஷியில் செய்யப்பட்டு, அதன் இதழ்களை சூடு தணிக்கும் 'பேக்' ஆகவும் உபயோகிக்கிறோம். உண்மையிலேயே இது ஒரு 'delight' தான்.

9,10- காய்களையும், பூக்களையும் பற்றிக் கூறிய நாம் பழங்களின் நலனை மறக்க முடியுமா? "Fruit Salad" என்ற இந்த பேஷியலை விரும்பாதோர் கிடையாது. இப்பொழுது எளிதில் கிடைக்கும் பழங்களான ஆப்பிள். ஆரஞ்சு, தர்பூஸ், பப்பாளி இவைகளுடன் இளநீரையும் சேர்த்து அளிக்கும் இந்த 'ஸ்பெஷல்' பேஷியல் முகத்தை மட்டுமின்றி உள்ளத்தையும் குளிர வைக்கும்படி இருக்கும்.

நீங்கள் இதனை வீட்டிலேயே செய்து கொள்ளலாம்'' என்கிறார் தி விஸிபிள் டிஃப்ரன்ஸ்' என்ற பெயரில் தி.நகர் வித்யோதயா எதிரில் ப்யூட்டிபார்லர் (தொ.பே. 8254079) நடத்தி வரும் திருமதி வசுந்தரா.

படங்கள்: **ஜி. சுரேஷ்**

# நாடாண்ட நாடோடிப் பெண்

விஜய நகர சாம்ராஜ்யத்தை உருவாக்கிய கிருஷ்ண தேவராயர் மன்னராக முடி சூடுமுன்; சதிகாரர்களிடமிருந்து உயிர் தப்ப ஓடி ஒளிந்து வாழ்ந்த நாட்களில், ஆண்டவனின் ஆலயத்தில் நாட்டியமாடிய ஒரு நங்கையைக் கண்டார். அவள் எழிலிலே மயங்கினார். மன்னராகி முடிசூடியபோது, அந்த நாட்டியக்காரியையே மணப்பேன் என்று உறுதியாக இருந்து, தேவதாசியான சின்னா தேவியையே தன் மனைவியாக்கிக் கொண்டார் மகாராயர். பட்டமகிஷியான திருமலாம்பாளுக்கு இரண்டாம் இடம்தான்!

சிற்பியின் மகளான நர்த்தகியைத் தமிழகத்துப் பேரரசர் காதலித்ததை 'சிவகாமியின் சபதம்' என்ற காவியமாக்கிய பேராசிரியர் - பேனா மன்னர் 'கல்கி' அவர்களின் கற்பனைக் களஞ்சியத்தில் திளைத்திருக்கிறீர்கள்.

இவற்றைப் போலவே 1500 ஆண்டுகளுக்கு முன்...

**கி**.பி. 515... கொளுத்தும் மேடையில் ஒரு பிற்பகல்... கான்ஸ்டாண்டிநோபிளின் ஹிப்போட்ரோம் என்னும் திறந்தவெளி அரங்கின் சுடுமணலில் நடந்து கொண்டிருந்தார்கள் மூன்று சிறுமிகள். சிரியா நாட்டைச் சேர்ந்த சிறுமிகள் அவர்கள். அந்த மாபெரும் திறந்தவெளி அரங்கில்தான் தேரோட்டப் போட்டிகளும் (சாரியட் ரேஸ்) மற்றும் பல கேளிக்கைகளும் நிகழும். பெருங்குடி மக்களின் பொழுதுபோக்குக்காகவும், அவர்களைக் களிப்புறச் செய்யவுமே இந் நிகழ்ச்சிகள்.

அந்த மூன்று சிறுமிகளில் வயதில் சிறியவளான கடைக்குட்டியின் பெயர் தியோடோரா. அவளுக்கு மூன்று வயதுதான். தன் இரு சகோதரிகளுக்கும் நடுவே குஞ்சுக்கால்கள் மணலில் பதிய, தத்தித் தத்தி நடந்து கொண்டிருந்தாள். அத்தனை பெரிய பரந்த அரங்கை அவள் அப்போதுதான் முதன் முதலில் பார்க்கிறாள். அவளுக்கு ஒரே பிரமிப்பு - வியப்பு.

விளையாட்டுப் போட்டிகளுக்கு இடையே பார்வையாளர்களுக்கு அலுப்பு ஏற்படாதபடி நாட்டியம் போன்ற பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் நடைபெறும். நம் ஊரில் தெருவில் கழைக்கூத்தாடிகள் வேடிக்கை காட்டுவார்களே அது போல. சர்க்கஸில் கோமாளிகள் கூத்தடிப்பார்களே அது போலவும்.

தேரோட்டப் போட்டிகளில் ஈடுபடுபவர்களை இனங்காண இந்தக்



## சாந்தா மூர்த்தி

காலத்தைப் போல அவர்களுக்கு எண்கள் கொடுக்கப்பட்டிருக்காது. அவர்கள் அணிந்துள்ள வண்ண உடைகளே, அவர்களை இனங் காட்டும். குட்டிப் பெண் தியோடோரா சட்டென்று வேடிக்கை பார்ப்பதை நிறுத்தி விட்டு, தான் அங்கு அழைத்து வரப்பட்டிருப்பதற்கான காரியத்தில் கவனம் செலுத்தலானாள். அந்த மைதானத்துச் சுடுமணலில் தளர் நடை நடந்து, நீலநிற ஆடை அணிந்த தேரோட்டிகளை வெற்றிகொள்ளுமாறு பச்சை நிற ஆடை அணிந்துள்ள தேரோட்டிகளை உற்சாகப்படுத்த ஆரவாரமிட்டுக் கொண்டிருந்த குழுவின் முன்னால் போய் நின்றாள்.

மூன்று சிறுமிகளும் தங்கள் தலையில் பச்சை நிற ரிப்பன் அணிந்திருந்தார்கள். வெற்றி பெறுபவர்களுக்குத் தலையில் சூட, அவர்கள் கையில் பச்சை நிற மாலைகள் இருந் தன. வட்டரங்கின் ஒரு கோடிக்கு அவர்கள் சென்றதும் ஓர் அறிவிப்பாளர் முன்வந்து பேசலானார். பச்சை நிற ஆடை அணிந்து போட்டியிடுபட்டுள்ளவர்களின் கூட்டத்தைச் சேர்ந்தவர்களைப் பார்த்து –

"பச்சை நிறக் கட்சியாளர்களே! உங்கள் கட்சி வீரனின் குழந்தைகள் இவர்கள். அவர் இறந்து விட்டார். இவர்களின் தாய் வேறொருவனை மணந்து கொண்டிருக்கிறாள். அவளது புதிய கணவனுக்கு அவளது முதல் கணவன் பார்த்து வந்த பணியை அளிக்க மறுப்புத் தெரிவிக்கப்பட்டுள்ளது. இக்குழந்தைகள் உங்களிடம் நீதி கேட்டு வந்திருக்கிறார்கள்."

வேண்டுகோள் விடுக்கப்பட்டதும் அவர்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை அறிவிப்பாளர் குழந்தைகளுக்கு முன்னதாகவே தெரிவித்திருந்தார். அதன்படி பச்சை நிற ஆடைப் பிரிவாளர்களின் முன்னால் மண்டியிட்டு, கையிலுள்ள பச்சை நிற மலர் வளையத்தை – வட்டரங்கில் அடுக்கடுக்காக வரிசை கட்டி நிற்கும் இருக்கைகளில் அமர்ந்திருப்போர் முன்னே நீட்ட வேண்டும். தியோடோராவின் இரு சகோதரிகளும் மண்டியிட்டு மலர்களை பச்சை நிறக் கூட்டத்தினர் முன் நீட்டினார்கள். ஆனால் குட்டிப் பெண் தியோடோரா தன் குஞ்சுக் கால்களை மடக்கி மண்டியிட முயற்சித்தபோது நிதானமிழந்து பொத்தென்று தரையில் அமர்ந்து விட்டாள். குழந்தைக்கு மேலாக காலரிகளில் அமர்ந்திருந்தவர்கள் இதைக் கண்டு 'ஹோ' என்று சிரித்து விட்டு, அரங்கில் நடக்கும் நிகழ்ச்சிகளில் பந்தயங் கட்டுவதில் கவனம் செலுத்தலானார்கள். சிறுமிகளிடம் அவர்கள் அக்கறை காட்டவில்லை. சிறுமிகள் வேதனையுடன் கையில் மலர் வளையம் ஊசலாட அடுத்து என்ன செய்வது என்று புரியாமல் குழம்பினார்கள்.

அப்போது வட்டரங்கின் மறுபக்கத்திலிருந்த நீல நிற ஆடை கோஷ்டியினரிடமிருந்து கேலிச் சிரிப்பும் கூச்சலும் கிளம்பியது. "ஹ... ஹா! பச்சை நிற கோஷ்டி தங்கள் குழந்தைகளையும் புறக்கணிக்கிறார்கள். தங்கள் சொந்தத் தாய்மார்களைக் கைவிடுவதற்கு வெட்கமாயில்லை? குட்டிப் பெண்களே! எங்கள்



அணிக்கு வாருங்கள். உங்கள் தந்தைக்கு நாங்கள் வேலை தருகிறோம்."

ஆகவே, தியோடோரா அதன் பிறகு நீலநிற ரிப்பனை அணியலானாள். அவளுக்கு இந்த வண்ண வேறுபாடுகளைப் பற்றி எவ்வித அக்கறையும் இல்லை. சில வருஷங்கள் கழித்து அவள் மாற்றாந் தந்தை வட்டரங்கில் பணியாற்றுவதில் ஆர்வமற்று வெளியேறினார். தன் மூத்த சகோதரிகள் தாய்க்கு உதவ சம்பாதிப்பது போல அவளும் சம்பாதிக்கலானாள். நாட்டிய மாடுவாள், குட்டிக்கரணம் போடுவாள், ஆனால் அவள் வயதுக்கு பிறர் ரசிக்கும்படியாக அவை இல்லை. அவள் அக்காமார்களின் நளினமான ஆட்டங்களுக்கும் உடல் அமைப்புக்கும் கூட்டத்தினரின் கைதட்டலும் பாராட்டும் கிடைக்கும். குட்டிப் பெண் தியோடோராவை யாரும் லட்சியமே செய்ய மாட்டார்கள். இதை நினைத்து முதலில் அவள் அழுதாள். எட்டு வருஷங்களுக்கு முன்பு முழங்காலிட்டு மண்டியிடத் தெரியாமல் 'பொத்' தென்று தான் தரையில் அமர்ந்ததைக் கண்டு கூட்டத்தினர் சிரித்தது நினைவுக்கு வரவே ஒரு முடிவுக்கு வந்தாள்.

நாட்டிய உடையில் குறும்புகள் செய்து குப்புற விழுந்தாள். அம்மானை ஆடிப் பந்துகளைப் பிடிக்காமல் வேண்டுமென்றே தவற விட்டு தடுமாறுவது போல நடித்தாள். அக்காக்களைப் போல கைகளை உயர்த்தி விரித்து கால்களைத் தூக்கி லாகவமாக நடனமாடியபடி தூக்கிப் போடும் பந்துகளைக் கீழே விழாமல் பிடிக்கும் நிகழ்ச்சிகள் கூட்டத்தினருக்கும் அலுப்பு ஏற்படுத்தி

...வதைக் கேட்டனர்.

"எங்களுக்கு வேறோர் சக்கரவர்த்தியைக் கொடுங்கள்! நிஜமான ரோமானிய சக்கரவர்த்தி வேண்டும் எங்களுக்கு!"

சகோதரிகள் ஒருவரை ஒருவர் வியப்போடு பார்த்துக் கொண்டார்கள். விளையாட்டு அரங்கில் மட்டும் பச்சை, நீலநிற ஆடை கோஷ்டிகள் போட்டி போடும் என்பதல்ல. அரசியலிலும் அவர்களுக்குப் பங்குண்டு. தேரோட்டத்தைத் தவிர வேறு எதற்காவது அவர்கள் கூச்சலிட்டால் அது ஆபத்தின் அறிகுறி. சகோதரிகளைக் கடந்து சென்ற ஒரு கழைக்கூத்தாடி அவர்களுக்கு விளக்கமளித்தார்.

"கிழட்டு சக்கரவர்த்தி அனஸ்டாசியஸை நோக்கித்தான் கூப்பாடு போடுகிறார்கள். அவர்களின் கூச்சலினால் பயந்து போன அவர், தனது ஊதா நிற ஆடையை அகற்றி விட்டு 'இனி இதை அணிய மாட்டேன்' என்று வாக்களித்திருக்கிறார். அதைக் கேட்டு அவர்கள் கேலியும் கிண்டலுமாக 'ஊதா ஆடையையே அணியுங்கள்' என்று உத்தரவிடுகிறார்கள். உன்னைப் போல சக்கரவர்த்தியும் கோமாளியாகி விட்டார் தியோடோரா!" என்றார் கழைக்கூத்தாடி.

முதலில் தியோடோராவுக்கு வியப்பாக இருந்தது. சக்கரவர்த்தி- பயந்து போனார் - இந்த இரண்டும் ஒத்துப் போகாதே! இப்படி நினைத்தபடியே அரங்கில், ராஜாங்க மேடையில் கூம்பிய முகத்துடன் அமர்ந்திருக்கும் கிழட்டுச் சக்கரவர்த்தியைப் பார்த்தாள். "அசட்டுத்தனமான காரியங்களினால் கூட்

# ஆந்திர மாநிலத்திற்கு சுற்றுலா

**கோடைநாட்களை குதூகலிக்க தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் வெள்ளிக்கிழமையில் இருந்து மறு வெள்ளிக்கிழமை முடிய ஆந்திராவில் சுற்றுலா செல்ல கீழ்க்கண்ட இடங்களைத் தெரிந்தெடுத்திருக்கிறது.**





**முதல் நாள்:** நாகலாபுரம்-கோனை நீர்வீழ்ச்சி-நாராயணவனம் -ஸ்ரீகாளஹஸ்தி இரவு-நெல்லூர்

**இரண்டாம் நாள்:** குகைக்கோயில், கிருஷ்ணா ஆற்றில் குளித்தல், மல்லீஸ்வரசுவாமி கோயில், கனகதுர்கா கோயில்-இரவு-விஜயவாடா.

**மூன்றாம் நாள்:** மங்களகிரி, அமராவதி, நாகார்ஜுன சாகர் அணை, அருங்காட்சியகம், இரவு-நாகார்ஜுன சாகர் அணை.

**நான்காம் நாள்:** பிர்லா மந்திர், சார்மினார், மெக்கா மஸ்ஜித், செகந்திராபாத் வளையல் கடைகள், இரவு-செகந்திராபாத்.





**ஐந்தாம் நாள்:** புத்தபூர்ணிமா (ஹூசைன் சாகர் ஏரி), கோல் கொண்டா கோட்டை, உயிரியல் பூங்கா, இரவு-கர்னூல்.

**ஆறாம்நாள்:** பிரசாந்தி நிலையம் புட்டப்பர்த்தி மற்றும் கடைகள், இரவு-புட்டப்பர்த்தி

**ஏழாம் நாள்:** லேபாக்சி, பெரியநந்தி, இரவு-ஹார்ஸ்லி ஹில்ஸ்.

**எட்டாம் நாள்:** வன இலாகாத் துறையின் தோட்டம், திருத்தணி, சென்னை வருதல்.

---

**கட்டண விகிதம்**

| அறை மற்றும் நபர் | குளிர்சாதன வசதியற்ற தங்குமிடம் மற்றும் பேருந்து | குளிர்சாதன வசதியுடன் தங்குமிடம் குளிர்சாதன பேருந்து | குளிர்சாதன பேருந்து குளிர்சாதன வசதியற்ற தங்குமிடம் |
|---|---|---|---|
| தனி அறை - தனி நபருக்கு | ரூ. 2800/- | ரூ. 5000/- | ரூ. 4000/- |
| இருவர் தங்க நபர் ஒன்றுக்கு | ரூ. 2300/- | ரூ. 4000/- | ரூ. 3400/- |
| குழந்தைகள் (5 முதல் 12 வரை) | ரூ. 2000/- | ரூ. 3500/- | ரூ. 2800/- |

---

## சென்னை-திருப்பதி (விடியற்காலை தரிசனம்):



திருப்பதி-திருமலை-திருச்சானூர்

இரவு 10.30 மணிக்குப் புறப்படுதல், டிக்கெட் விலை ரூ. 300/-
(சிற்றுண்டி, குளியல் வசதி, மதிய உணவு மற்றும் சிறப்பு வழிபாடு உட்பட)

---

மேலும் விபரங்களுக்கு :

**தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்,**
விற்பனை பிரிவு: 4, ஈ.வெ.ரா. சாலை,
(சென்ட்ரல் ஸ்டேஷன் கணிப்பொறி முன்பதிவுக்கு எதிரில்)
பூங்காநகர், சென்னை-600 003.
தொலைபேசி : 560294. 582916. தொலைநகல்: 044-561385.

DIPR. CHI. 97

டதையும், தெரிந்து கொண்டாள். இத்தாலியில் காட்டுமிராண்டிகள் வெள்ளமெனப் புகுந்து ஆக்ரமித்துக் கொண்டதையும் ஆகவே ரோமாபுரி இப்போது கோத்ஸ் எனப்படும் பார்பேரியர்களின் கட்டுப்பாட்டில் உள்ளதையும் மீதமுள்ள அனைத்து ரோமசாம்ராஜ்யத்துக்கும் இப்போது கான்ஸ்டாண்டி நோபிளே தலைநகராக உள்ளதையும் தெரிந்து கொண்டாள்.

தொடர்ந்து பல நூல்களைப் படிப்பது அவளுக்குத் திருப்தியளித்தது. அவள் பசியைப் போக்க, கான்ஸ்டாண்டி நோபிளில் ரொட்டிக்காகத்தான் அவள் யாரையாவது கேட்க வேண்டும். சொகுசான குளியல் கூடங்கள் கூட அனைவருக்கும் இலவசம்தான். உழைக்காமல் வாழுவது அவள் உள்ளத்தை உறுத்தியது. நாட்டியக்காரிக்கு கௌரவமான ஓர் வேலையைத் தர யாரும் முன்வரவில்லை. ஹிப்போட்ரோம் அரங்குக்குத் திரும்பிப் போகவும் அவளுக்கு விருப்பமில்லை. ஆகவே ஓர் அயல்நாட்டு பணக்கார வணிகரிடம் வேலைக்காரியாக அமர்ந்தாள். அவரோடு ஆப்பிரிக்காவுக்குப் பயணமானாள்.

அந்தப் பணக்கார வியாபாரியின் வீட்டில் நூல் நூற்கவும் துணி நெய்யவும் கற்றுக் கொண்டாள். முதன் முதலாக உயர் இன்ப வாழ்க்கையை (லக்ஸரி) அதில் தெரிந்து கொண்டாள். இன்ப வாழ்க்கைக்கு அடிமையாகிவிடக் கூடாது என்பதையும் புரிந்து கொண்டாள். ஆகவே ஒருநாள் இரவு வணிகரின் வீட்டிலிருந்து வெளியேறினாள். தன்னுடைய மிகச் சொற்பமான உடைமைகளை மட்டுமே எடுத்துக் கொண்டு. அவளுக்காக அளிக்கப்பட்டிருந்த உடைகளைக் கூட அவள் எடுத்துக் கொள்ளவில்லை. மீண்டும் கோமாளியாக அவள் பிழைக்கலாம். ஆனால் திருடியாக விரும்பவில்லை.

பல நாள் பாலைவனத்தில் அலைந்து திரிந்தாள். முடிவில் எகிப்திலுள்ள அலக்சாந்திரியாவுக்கு வந்தாள். பசி, களைப்பு, சோர்வு, காய்ச்சல் இவற்றினால் பலவீனப்பட்டுப் போனாள் தியோடோரா. தெருக்களில் ஏழைகள் கையேந்திப் பிச்சை கேட்பதைக் கண்டாள். திருடியாகக் கூடாது என்பதிலே உறுதியாக இருந்ததைப் போலவே, பிச்சையெடுக்கக் கூடாது என்பதிலும் கண்டிப்பாக இருந்தாள்.

நிம்மதியற்ற மனநிலை மீண்டும் அவளிடம் தலைதூக்கலாயிற்று. ஒருநாள் துறைமுகப் பகுதியில் நடந்து போய்க் கொண்டிருந்தபோது வணிகக் கப்பலொன்றில் பொருள்கள் ஏற்றப்பட்டுக் கொண்டிருப்பதைக் கண்டாள். கப்பல் தலைவரிடம், அந்தக் கப்பல் எந்த நாட்டுக்குப் போகிறது என்று சாதாரணமாக விசாரித்தாள்

'கான்ஸ்டாண்டிநோபிளுக்கு" என்று கூறினார். அவர் பிறகு அவளைப் பார்த்து "நீங்கள்

**உழைப்பது சன்மானம் பெறுவதற்கு என்று நினைத்தால் அவ்வேலை கடினம் போலத் தோன்றும்.**
**- டால்ஸ்டாய்**
**தகவல் : ஆர். ஹேமலதா**

எங்கே போக வேண்டும் மேடம்?" என்று கேட்டார்.

சட்டென்று சற்றும் யோசியாமல் ஆர்வமுடன் கூறினாள் தியோடோரா. "நானும் கூட கான்ஸ்டான்டிநோபிளுக்குப் போக விரும்புகிறேன் என் வீட்டுக்கு... தயவுசெய்து உங்களோடு என்னைக் கூட்டிப் போவீர்களா?"

ஆகவே - அவள் மீண்டும் மத்தியதரைக் கடலைக் கடந்து தாய்நாட்டை நோக்கிப் பயணப்படலானாள். கப்பல் தலைவனிடமிருந்து தன் தாயகத்தைப் பற்றிய தகவல்களைத் தெரிந்து கொண்டாள். [illegible] சக்கரவர்த்தி

## கேட்டதும் படித்ததும்

**நடந்தால் நாடெல்லாம் உறவு படுத்தால் பாயும் பகை.**

**- கிளார்க்**

**தகவல் - வனிதா**

கான்ஸ்டாண்டைன் ஸ்தூபியின் படிகளில் ஏறி மேலே போவாள். அந்நகருக்கு அவர் தன் பெயரையே சூட்டியிருந்தார். அந்த மேடையில் அவரது சிலைக்குக் கீழே நின்றபடி சூரியன் அஸ்தமிக்கும் அழகைக் கண்டு மகிழ்வாள்.

ஒருநாள் இப்படி மேடை மீது ஏறும்போது அங்கு ஒரு மனிதன் இருப்பதைக் கண்டாள். கைப்பிடிச் சுவரில் சாய்ந்தபடி நின்று கொண்டிருந்தான் அவன். முதலில் பின்வாங்கிப் போய் விடலாமா என்று நினைத்தாள். ஆனால் அவன் தோற்றம் பழகுவதற்கு இனியவனாகத் தோன்றியது. அறிவு முதிர்ச்சியுற்றவனாக எளிய உடையும் சோக முகமுமாகத் தோன்றிய அவனைப் பற்றி அச்சம் கொள்ளாமல் வழக்கம் போல இருட்டும் வரை அங்கிருந்து விட்டுத் திரும்பினாள். அதன் பிறகு தினமும் அவன் அங்கு இருக்கக் கண்டாள். அவனிடம் பேசிப் பழக்கப்படுத்திக் கொண்டாள்.

போராடி முன்னேறி வந்துள்ளதை விவரித்தாள்.

அவனும் தன்னைப் பற்றிக் கூறினான். "நான் மாசிடோனியாவில் நீ பிறப்பதற்குப் பல நாட்களுக்கு முன்பு குடியானவனாகப் பிறந்தேன். கான்ஸ்டாண்டிநோபிளை நோக்கி, நீண்ட நெடுஞ்சாலையில் நடந்து வந்தேன். காரணம் - இங்குதான் சர்வகலாசாலை உள்ளது. அறிவைப் பெருக்கிக் கொள்ளும் ஆர்வம் என்னை இங்கு அழைத்து வந்தது."

"அந்த ஆர்வம் தணிந்ததா?" - அவள் கேட்டாள்.

"கொஞ்சம்... சில நூல்களைக் கற்றேன். கல்விக்கு எல்லை ஏது? ஆனால் நூல்களைப் படிப்பதினால் மட்டுமே நாம் எல்லாவற்றையும் அறிந்து கொண்டு விட முடியாது."

"எனக்கும் எழுதப் படிக்கத் தெரியும்" என்றாள் அவள் பெருமையுடன். பிறகு, "அது சரி உங்கள் பெயர் என்ன? அதைச் சொல்லவே இல்லையே" என்று கேட்டாள்.

"என் பெயர் பீட்டர். என் மாமாவுக்குக் குழந்தைகள் இல்லை. ஆகவே என்னைத் தன் மகனாகத் தத்து எடுத்துக் கொண்டார். அதனால் இப்போது என் பெயர் ஜஸ்டினியன் - அதாவது ஜஸ்டினின் மகன்!"

"நீ... நீங்கள்... சக்... சக்

மனம் தளர்வுற்றது - களைத்தது. சுசப்புடன் கேட்டாள் ஜஸ்டினியனிடம்.

"நீங்கள் மறந்து விட்டீர்களா - நான் வெறும் நாட்டியக்காரி. சட்டம் என்னைப் போன்றவர்களை மணக்கத் தடைவிதித்துள்ளதே."

"அதனால் என்ன? சட்டத்தை மாற்றுவோம்!"

"சட்டத்தை மாற்றுவதா? நீ அதைச் செய்ய முடியாது. சட்டத்தை உன்னால் மாற்ற முடியாது."

"முடியும். என் மாமா ஜஸ்டினினால் முடியும்" என்று கூறியவன் அவளைத் தன் கைகளால் அள்ளி அணைத்துக் கொண்டான். அவளைப் பேச விடாமல் தன் முத்தங்களால் அவள் செவ்விதழுக்குப் பூட்டுப் போட்டான். கடவுள் எனக்களித்த வெகுமதி பரிசு... என் இனிய மகிழ்ச்சி!" என்று முனகி அவளை மெய்சிலிர்க்க வைத்தான்.

முதன் முதலில் அரச மாளிகைக்குள் அவன் நுழைந்தபோது அவனோடு ஒட்டிக் கொண்டு நடந்தாள். கிழக்கு ரோமானியப் பேரரசின் சம்பிரதாயப்படி பகட்டும் தாராளமாகப் பழக்கூடாத விறைப்பும் தேவை. பணியாளர்கள் தலைவணங்கி ஒதுங்கி நின்றார்கள். வெள்ளை ஆடையும் வெள்ளியினாலான ஆயுதங்களும் தரித்த ராஜகாவலர் மரியாதையோடு அவர்களைச் சக்கரவர்த்தியிடம் அழைத்துப் போனார்.

வயது முதிர்ந்த சக்கரவர்த்தி ஜஸ்டினிடம் ரோம சாம்ராஜ்ய சம்பிரதாயங்கள் ஏதுமில்லை. போர் வீரனுக்குரிய பழுப்பு நிறமுகமும் குடியானவனுக்குரிய அறிவுத்திறன் பளிச்சிடும் கண்களோடும் காணப்பட்டார். ஜஸ்டினியன் அவரிடம் தங்கள் விருப்பத்தைக் கூறியபோது, உரக்கச் சிரித்தவர், "நாட்டிய மங்கைகள் இன்பம் தரக்கூடியவர்கள் - கெடுதல் ஏதும் செய்ய மாட்டார்கள். ஆகவே சட்டம் அவர்களை ஏன் தண்டிக்க வேண்டும்?" என்றார்.

சட்டம் மாற்றி அமைக்கப்பட்டது. கான்ஸ்டான்டிநோபிளின் பாதுகாவலர் முன் ஜஸ்டினியனும் - தியோடோராவும் மண்டியிட்டு புனிதமான திருமணத்தின் அனுமதி பெற்று தம்பதியானார்கள். அரண்மனை வளாகத்துக்குள் அவளுக்கென்று ஒரு சிறிய வீடு கட்டிக் கொடுத்தான் அவன். அவ்வீட்டின் பின்பக்கம் அரண்மனைத் தோட்டத்தையொட்டி இருந்தது. தன் வீட்டின் பால்கனியிலிருந்து நகரின் ஜனசந்தடிமிக்க தெருக்களையும் அதற்கு அப்பால் விரிந்து கிடக்கும் கடலையும் அவளால் காண முடிந்தது. வழிதவறி அலைந்த பூனைக்குட்டி மீண்டும் தன் வீட்டைக் கண்டுபிடித்து, பசி, மற்றும் கல்லெறிந்து துன்புறுத்தும் கொடுமைகளிலிருந்து விடுபட்ட பத்திரமான உணர்வை அந்த வீட்டில் அனுபவித்தாள்.

அரண்மனையில் பகலெல்லாம் உழைத்தான் அவள் கணவன் ஜஸ்டினியன். இரவில் மேலும் வேலை செய்ய வீட்டுக்குக் கொண்டு வந்தான். அவளுக்கு இது வியப்பளித்தது. அடிமை போல இப்படி உழைப்பானேன் என்று ஒருநாள் கேட்டே விட்டாள்.

"ஜஸ்டினியன்! ரோமானிய சக்கரவர்த்திகள் அனைவருமே அனேகமாக ராணுவ வீரர்கள்தான். நீங்கள் மட்டும் ஏன் இப்படி? சக்கரவர்த்தியின் வாரிசு நீங்கள். குறைந்த பட்சம் படைத் தலைமையையாவது ஏற்கலாமே. எழுத்தராக - அவ்வளவு பாதுகாப்பானராக, ஊதியத்துக்காக உழைக்கும் கணக்கரைப் போல...

அவன் சிரித்தான். "வீரர்களை வழி நடத்திச் செல்ல ஏராளமான பேர் இருக்கிறார்கள். ஆனால் தன் மக்களை - நாட்டை எப்படி நடத்திச் செல்ல வேண்டும் - ஆள வேண்டும் என்பதை சக்கரவர்த்தி அறிந்திருக்க வேண்டாமா?"

"உண்மைதான். ஆனால்" குறுக்கிட்டுப் பேசினாள் தியோடோரா. "அதற்கான சட்டங்கள்தான் ஏற்கெனவே இருக்கின்றனவே."

"சட்டங்கள்?" விஷமமாகச் சிரித்தான். "நிறையவே இருக்கின்றன. வழக்காடுவதில் வல்ல ஒருவர் அந்தச் சட்டங்களில் ஏதாவதொன்றைத் தன் வழக்குக்குச் சாதகமாக்கிக் கொள்ளலாம். ரோம சாம்ராஜ்யம் ஐந்து காவலர்களால் நிர்வகிக்கப்படுகிறது. காரணம் சட்டங்கள் மிகச் சிலவே. மக்கள் அவற்றை அறிவார்கள். அவற்றை மதிக்கவும் செய்



தேங்காய் பர்பி செய்யும்போது, இறக்குவதற்கு கொஞ்சம் முன்பு, சிறிது குங்குமப் பூவை பாலில் கரைத்து கலந்து, பின் இறக்கினால், பர்பி இள மஞ்சள் நிறத்துடன் பார்க்கவும் நன்றாக இருக்கும். சுவை பல மடங்கு கூடி இருக்கும். இறக்குவதற்கு சிறிது முன்பு முந்திரி பருப்பையும் லேசாக வறுத்துப் பொடி செய்து கலந்தால் சுவை பிரமாதமாக இருக்கும்.

- சாவித்திரி கணபதி

கிறார்கள். நாம் செய்ய வேண்டியது என்ன? சட்டங்களையும் செயல்படும்படி செய்ய வேண்டும்."

கணவனின் விளக்கங்களைப் பொறுமையுடன் கேட்டாள். சட்டங்கள் சோர்ந்திருப்பதை – எழுச்சியற்றிருப்பதை உணர்ந்தாள். தன் தோழனும் கூட்டாளியும் எல்லாவற்றுக்கும் மேலாக அவனது மனைவியுமான அவள் அவனிடம் சட்டம் பற்றி வினாக்கள் எழுப்பினாள். அவன் எழுதியுள்ள உயிலைப் படித்தாள். சட்டம் மாற்றப்படுவதற்குத் தானே காரணமாக இருந்ததை – சர்க்கஸில் ஆடும் பெண்ணுக்குக் கெளரவமான கல்யாணத்தை வழங்கியதை – நினைத்துக் கொண்டாள். பெண்களுக்குச் சாதகமாக மேலும் பல சட்டத் திருத்தங்களை – யோசனைகளைக் கூறினாள். அவள் யோசனைகளுக்கு அவன் தலையசைத்தான். "இது நியாயமான கருத்து என்று கூறி அவள் யோசனைகளை எழுதிக் கொண்டான். ஆகவே, மெள்ள மெள்ள இருவரும் சேர்ந்து மாலை வேளைகளில் விளக்கு வெளிச்சத்தில் வேலை செய்தார்கள்.

கோடை தேய்ந்தது போலவே கோமாளியின் வாழ்வும் தேய்ந்தது. சக்கரவர்த்தி

மறக்கவில்லை. எல்லா வகுப்புப் பெண்களும் தங்களுக்கு அநீதி இழைக்கப்படும்போது அவளிடம், நீதி கேட்டு வந்தார்கள். உதவியும் அனுதாபமும் கிடைக்கப் பெற்றார்கள்.

புதிய சக்கரவர்த்தி ஜஸ்டினியனின் புகழும் ஓங்கியது. முடிசூடிய முதல் மாத ஆட்சியில் ரோமானியப் படை பாரசீகர்களை வென்று வெற்றி மாலை சூடியது. பல வருடங்களாக நடக்காத செயல் அது. தெருவில் அவனை வாழ்த்தும் மக்கள் நினைத்துக் கொண்டார்கள். "அப்பாடா! இனி வரிச்சுமை குறையும்!" என்று.

ஆனால் ஜஸ்டினியன் தன் ஆலோசகர்களிடம் கூறினான் – "கிழக்கிலே நாம் வெற்றி பெற முடியும்போது மேற்கிலும் நாம் வெற்றி பெற முடியும். இழந்த ரோமானிய மாகாணங்களை மீட்போம். அதற்காக நாம் பெரும் கப்பல் படையை உருவாக்க வேண்டும்.

கவுன்சிலர்கள் வாதிட்டார்கள். "ஒரு மாகாணத்தை வேண்டுமானால் மீட்டு வெற்றி பெறலாம். ஆனால் தோல்வி ஏற்பட்டாலோ நாம் இழப்பது போர் வீரர்களையும் கப்பல்களையும். இத்தகைய கோமாளித்தனத்துக்குப் பெரும் பொருள் செலவிடப்படுவதை ஏற்க

# வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
42, காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம் - 612 001.

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். உயிருக்கு மேலாக தேசித்து பொருளை சம்பாதிக்கும் நாம், அதன் ஒரு பகுதியையாவது வேதாத்யயனம் செய்யும் குழந்தைகளை ரக்ஷிக்க அர்பணிக்க வேண்டும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 455 ஆண்டுகளாக நடந்து வரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 130 மாணவர்களுக்கு 15 வேத சாஸ்திர அத்யாபகர்கள் வேத சாஸ்திர வித்தைகளை புராதனமான குருகுல முறைப்படி போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்கு கொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம்.

| வ எண். | திட்ட விவரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை துகை (Adhoc donation) | நிறந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|---|
| 1. | ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி துகை) | Rs. 500 | Rs. 5,000 |
| 2. | ஸுமங்கலி ப்றார்தன : ஸுமங்கலி ப்றார்தனைக்கு ரூ. 1000/- வித்யார்த்தி ஸமாராதனைக்கு ரூ. 500/- | Rs. 1,500 | Rs. 15,000 |
| 3. | அமாவாஸ்யை (அ) பௌர்ணமி (அ) த்வாதசி ஸமாராதனைக்கு | Rs. 1,500 | Rs. 15,000 |
| 4. | பௌர்ணமி ஆயுஷ்ய, நவக்ரஹ நக்ஷத்ர ஹோமம் | Rs. 1,000 | Rs. 10,000 |
| 5. | ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு மாத செலவு ரூ. 1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakhs |

Cross செய்யப்பட்ட D.D ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்புக் கோருகிறோம்.

**MAY VEDA MATHA BLESS US ALL**



பிறந்த சின்னஞ்சிறு குழந்தைகளுக்கு சட்டை ப்ரஸன்ட் செய்ய விரும்பினால், மெல்லிய வெள்ளைத் துணியில். ஜிப்பா மாதிரி 4 (அ) 6 தைத்துக் கொடுக்கலாம். வீண் ஆடம்பரத்துக்காக, ஃபிரில் வைத்து, ஸின்தடிக் சட்டை வாங்கினால், குழந்தைக்கும் வேதனை.

- ஆர். பார்வதி

தாரர்களாக மாறுவார்கள்...

ஹிப்போட்ரோம் அரண்மனைக்கு மிக அருகாமையில் இருந்தது மாடித் தோட்டத்திலிருந்தபடி அதை அவள் காண்பாள். அங்கு நடக்கும் களியாட்டங்களைக் காண முகிழ்ச்சியாயிருக்கும். பழக்கப்பட்ட கூச்சலான 'நிக்கா! நிக்கா!' - வெற்றி கொள் வெற்றி கொள் என்பதை நீல - பச்சை வண்ணப் பிரிவினர் முழக்கும் போது பழைய நினைவுகள் நினைவில் மிதக்கும்.

சிறிது காலத்துக்கு புதிய சக்கரவர்த்தியும் சக்கரவர்த்தினியும் யாருடைய குறைகளையும் கேட்க மறுக்காதிருந்த பிரபலமாக விளங்கினார்கள். ஆனால் மக்கள் காட்டு மிராண்டிகள் மீது புதிய போர் துவக்கியதினால் வரிகள் உயர்த்தப்படவே, முணுமுணுக்கலானார்கள். உயர்குடி மக்களோ சட்டங்கள் தங்களுக்குச் சாதகமாக இல்லை என்று கோபப் பட்டார்கள்.

ஒருநாள் பச்சை - நீலநிறக் கட்சிகளுக்கிடையே நிகழ்ந்த தெருச் சண்டையில் பலர் கொல்லப்பட்டனர். இரு கட்சியினரும் தண்டனைக்குள்ளானார்கள். இந்தப் புகை பெரு நெருப்பாகி புரட்சிக்கு வித்திட்டது. அரண்மனைக்குள்ளேயே "நீலமும் பச்சையும் நீடூழி வாழ்க" என்ற கோஷம் கேட்கலாயிற்று. முதன் முதலாக இருகட்சியினருக்கும் பொதுவான கௌரவப் பிரச்னையாக இதைக் கருதி இணைந்து போராடலானார்கள்.

அன்று இரவின் கடைசி ஜாமத்தில், அரண்மனை, கொழுந்து விட்டெரியும் கட்டிடங்களினால் துண்டிக்கப்பட்டது. அவற்றில் சாங்கடா சோஃபியாசர்ச்சும் ஒன்று. ஆத்திரமூற்ற கும்பல் கட்டிடங்களுக்குத் தீ மூட்டிக் குதூகலித்தன. அரண்மனையிலுள்ள பணியாளர்களும் அதிகாரிகளும் இரவில் வெளியேறி விட்டார்கள். பிரதம சேனாபதி பெலிசாரியஸும் ஜஸ்டினியனும் ஒருசில விசுவாசமிக்க அதிகாரிகள் மட்டுமே அரண்மனையில் இருந்தனர்.

காலையில், தளபதி பெலிசாரியஸ், பாதுகாப்புப் படையை அனுப்பி, புரட்சியாளர்களை விரட்டி நகரில் வழி உண்டாக்குமாறு அனுப்பினார். ஆனால் நகரம் தன்னைத்தானே பாதுகாத்துக் கொண்டிருந்தது. எந்த ராணுவத்தையும் விட கலகக்காரர்களின் கை ஓங்கி இருந்தது. எரியும் கட்டிடங்களிலிருந்து எதிர்த்தார்கள். இடிபாடுகள் சாலைகளை வழிமறித்து மூடிக் கிடந்தன. அனல்கக்கும் கட்டுமானங்கள் சரிந்து கொண்டிருந்தன - அணுக முடியாமல். இருள் மூடும் போதில் பாதுகாப்புப் படை தள்ளாடியபடி புகையினால் கருத்து, தீக் காயங்களால் நொந்து சோர்ந்து திரும்பியது.

ஜஸ்டினியன் பொன்னையும் பொருள்களையும் மற்றும் அத்தியாவசியப் பொருள்களையும் துறைமுகத்தில் தயாராக நிற்கும் உல்லாசப் படகில் கொண்டு போய் குவிக்கும்படி ஆணையிட்டான்.

மறுநாள் கலகக் கும்பல் ஹிப்போட்ரோமுக்குள் (வட்டரங்கம்) புகுந்து 'வெற்றி வெற்றி' (நிக்கா நிக்கா) என்று போர்க்குரல் எழுப்பியது. முடிவில் ஜஸ்டினியன், "நான் அவர்களிடம் போய் பேசிப் பார்க்கிறேன்" என்று கூறிப் போனான். ஆனால் விரைவிலேயே வெளிறிய முகத்துடன் ஆடிப் போய் திரும்பினான்.

"என் பேச்சை அவர்கள் கேட்க விரும்பவில்லை. எல்லாத் தவறுகளுக்கும் நானே பொறுப்பேற்பதாகக் கூறினேன். யாரையும் தண்டிக்கப் போவதில்லை என்றும் உறுதி அளித்தேன். ஆனால் அவர்கள் கேட்கவில்லை... நாம் இப்போது செய்யக்கூடியது ஒன்றே ஒன்றுதான். நாம் நம்மைத் தற்காத்துக் கொள்ள இங்கிருந்து வெளியேற வேண்டும்!"

தியோடோரா வியப்போடு தன் கணவனைப் பார்த்தாள். ஒரு சக்கரவர்த்தியிடமிருந்து வரும் வார்த்தைகளா இவை? முதல் தடவையாக தன் கணவனுடைய தீரம் அவன் சிந்தனையோடு சரி என்பதையும் ஆபத்து வேளையில் அவன் உடல் கருங்கிப் போவதையும் கண்டாள்.

ஆனால் அவளோ...?

தன்னந்தனியே எகிப்தியப் பாலைவனத்தைக் கடக்கும் துணிச்சலுடையவள். ஏளனத்தோடு கணவனைப் பார்த்துக் கூறினாள். "போரிடுவது கடினம். கடலும் உம்முடைய உல்லாசப் படகுகளும் உம்மைப் பத்திரமாக



சப்பாத்திக்கு பிசையும்போது சிறிது எண்ணெய், ஒரு கரண்டி புளிக்காத தயிர் விட்டுப் பிசைந்தால் சப்பாத்தி மிகவும் மிருதுவாக இருக்கும். கல்லில் காய்ந்த பிறகு ஒரு நிமிடம் 'கேஸில்' அப்பளம் மாதிரி புரட்டுங்கள். 'புஸ்'ஸென்று உப்பி சூப்பராக இருக்கும்.

– சாவித்திரி

கொண்டு சேர்க்கக் காத்திருக்கின்றனை. நான் இங்கேயே தங்கி இருப்பேன். சக்கரவர்த்தினி யாகவே மரணத்தைத் தழுவுவேன். ராஜாங்க ஊதா நிற அங்கி போன்ற கௌரவமான சவப் போர்வை வேறில்லை!"

அவளுக்குப் பதில் கூற யாருக்கும் துணி வில்லை. அவர்களுக்குத் தெரியும், அவள் சொல்வதைச் செய்யக்கூடியவள் என்று. திடீ ரென்று ஏற்பட்ட ஏதோ ஓர் உள் உணர்ச் சியின் காரணமாக தளபதி பெலிசாரியஸ் அரண்மனையின் உப்பரிகைக்குப் போய், கீழேயுள்ள ஹிப்போட்ரோமில் குழுமியுள்ள கலகக் கும்பலைப் பார்த்தார். ஜஸ்டினியனின் கண்கள் எதைக் காணவில்லையோ அதை அவ ரது போர் வீரக் கண்கள் கண்டன. உடனே கீழே வந்தார்.

"கலகக்காரர்கள், தாங்கள் வட்டரங்கினுள் இருப்பதைப் பாதுகாப்பாகக் கருதுகிறார்கள். ஆனால் உண்மையில் தாங்கள் பொறியில் சிக் கிய எலிகள் என்பதை அவர்கள் அறிய வில்லை" என்றவரின் ராணுவ மூளை வேக மாகச் செயல்பட்டது. காவல் படை வீரர்களை, மன்னர் குடும்பத்தினர் ஹிப்ரோட்ரோமுக்குள் போகும் விசாலமான நுழை வாசல் வழியே அணிவகுத்துச் செல்லும்படி ஆணையிட்டார். வட்டரங்கத்திலிருந்து கலகக்காரர்கள், ராணு வத்தினரின் தாக்குதலிலிருந்து தப்பி வெளியேற உள்ள ஒரே வழி மிகக் குறுகலானது. கலகக் காரர்களின் கூட்ட நெரிசலே அந்த வழியை அடைத்துக் கொள்ள நிக்கா ரிவோல்ட் – வெற்றிக் கிளர்ச்சி பிசுபிசுத்துப் போனது.

கிறிஸ்துவ மடாலயம் நீக்கிரையான போது அங்கிருந்து தப்பிய துறவிகளுக்குத் தனது வீட் டில் தியோடோரா புகலிடம் அளித்தாள். விடிமுந்த பெண்களுக்கு பாஸ்போரஸ் கடற் கரையில் அகதிகள் முகாம் உருவாக்கிக் கொடுத்தாள். காலப்போக்கில் கணவன் ஜஸ்டினியனிடம் கண்ட பலவீனமே, அவன் மீது முன்னையும் விட அதிகமாக அன்பு கொள்ளச் செய்தது.

கான்ஸ்டான்டிநோபிளைப் புதுப்பித்து மீண்டும் பொலிவுறச் செய்தாள். சாங்டிகோ சோஃபியா தேவாலயத்தை அதன் சாம் பலிலிருந்து எழும்படி செய்தாள். கடவுளின் புகழ் பரப்பும் அற்புதச் சின்னமாக அது இன் றும் நிலைத்து நிற்கிறது. தளபதி பெலிசோரியஸ் பண்டை ரோமசாம்ராஜ்யப் பகுதிகளை மீட்டு புகழ் சேர்த்ததையும் ரோமானியர்கள் கிறிஸ் துமத நம்பிக்கையாளர்களானதையும் கண்டு களித்தாள்.

கி.பி. 532-ம் ஆண்டின் அந்த இரவில் பீதி யினால் கலகலத்துப் போயிருந்த எந்த சாம் ராஜ்யத்தை அவள் காப்பாற்றினாளோ அது ஆயிரம் ஆண்டுகள் நிலைத்திருந்ததைக் காண அவள் இல்லை. அவள் கணவன் ஜஸ்டினியன் வகுத்த சட்டங்கள் இன்றும் மதிக்கப்படுவதைக் கண்டு பெருமிதப்பட அவள் இல்லை. அவளை மரணம் தழுவியபோது அவளுக்கு வயது நாற்பது.

அவள் மறைவுக்குப் பின் ஜஸ்டினியனைப் பற்றி இப்படிக் கூறினார்கள் மக்கள் – "தன் அரண்மனையில் அவர் பேய் போல உலாவு கிறார்!" உண்மைதான். ஜஸ்டினியனும் தியோ டோராவும் ஒரு முழுமையின் இருபாதிகள். அவன் அறிவு – அவள் விவேகம், அவன் மனம் – அவள் வலிமை. அவள் இல்லாமல், மாபெரும் சக்கரவர்த்தினி தியோடோரா இல்லை. அவள் இல்லாமல் சட்டங்களை உரு வாக்கிய பெருந்தகை ஜஸ்டினியன் இல்லை. இப்போது அவள் இல்லாமல் அவனால் எந்த உறுதியான முடிவையும் முன் போல எடுக்க முடியவில்லை. ஆகவே தன் எண்ணங்களை செயலாக்க முடியாமல், அரண்மனையில் நடைப்பிணமாக உலாவிக் கொண்டிருப் பதையே மக்கள் 'பேயாக உலாவுகிறார்' என்றார்கள்.

தனது முதுமையில் முதன் முதலாக படைக்குத் தலைமைதாங்கி, 'ஹன்' கொள் ளைக்காரர்களை விரட்டப் போர்க்களம் புகுந் தார் ஜஸ்டினியன். நைன் நதியின் அக்கரைக்கு அவர்களை விரட்டி வெற்றிகண்டார். பிறகு தலைநகருக்குத் திரும்பியதும், திருத்தூதர்களின் தேவாலயத்துக்குச் சென்று தியோடோராவின் சமாதியில் இரண்டு மெழுகுவர்த்திகளை கொளுத்தி வைத்தார். வெகுநேரம் அதன் அருகே அமர்ந்திருந்தார். அவளிடம் ஒரு வேளை இப்படிக் கூறி இருக்கலாம் – "நான் வெற்றி கொண்டது ஹன்களையல்ல – என் உள்ளத்து பயத்தைத்தான் வெற்றி கொண் டேன். நான் உன்னிடம் வரும்போது நான் உனக்குத் தகுதியானவன் என்பதை நீ உணரு வாயா, என் இனிய தியோடோரா – கடவுளின் பரிசே...!"

ESTD :1959

## ஸ்ரீ குருராகவேந்தராய நமஹ

### 40 வருட அனுபவமுள்ள ஸ்தாபனம்

### 4 நாட்கள் கொண்ட ஆந்திர மாநில யாத்திரை

சென்னையிலிருந்து 6.7.97 இரவு 10 மணிக்கு டீலக்ஸ் பஸ்ஸில் பிரயாணம். நெல்லூர் – ஸ்ரீசைலம் – மந்திராலயம் – மஹாநந்தி – அஹோபிலம் – கட்டணம் ரூ. 675/-

### 12 நாட்கள் கொண்ட காசி, நேபாள் யாத்திரை

12.7.97 இரவு 10 மணிக்கு ரயில் மூலம் பிரயாணம். பூரி – புவனேஸ்வர் – கோனார்க் – காசி – கயா – அயோத்தியா – அலகாபாத் கட்டணம் ரூ. 2900/-

### 15 நாட்கள் கொண்ட பஞ்ச துவாரகை யாத்திரை

26.7.97 காலை 9 மணிக்கு நவஜீவன் எக்ஸ்பிரஸ் மூலம் பிரயாணம். அகமதாபாத் – துவாரகை – பேட்டி துவாரகை – ஹரிசித்திமாதா – மூலத்து வாரகா – போர்பந்தர் – பாலக் – சோமநாத் – விர்ப்பூர் – ஜஞ்ஜா – மாத்ருகயா – அம்பாஜி – மவுண்ட் ஆபு – புஷ்கர் – அஜ்மீர் – ஜெய்ப்பூர் – ஸ்ரீநாத் துவாரகா – காங்கு ரோலி துவாரகா – டாக்கூர் துவாரகா – உதய்ப்பூர் - காந்தி நகர். கட்டணம் ரூ. 3850/- (20 இடங்களே உள்ளன.)

### 15 நாட்கள் கொண்ட 7 ஜோதிர்லிங்க யாத்திரை

மஹாராஷ்டிராவில் 5-ம் மத்திய பிரதேசத்தில் 2-ம் ஆக 7 ஜோதிர்லிங்கம் மற்றும் பம்பாய் – பண்டரிபூர் – கோலாப்பூர் உள்ளிட்டது. 10.8.97 காலை 7 மணிக்கு ரயில் மூலம் பிரயாணம். கட்டணம் ரூ. 3850/-

மேலும் விவரங்களுக்கு : **ஸ்ரீ விஜயா டிராவல் சர்வீஸ்,**

*29, ஆரிமுத்து ஆசாரி தெரு (விவேகானந்தர் பஸ் நிலையம் அருகில்)*
*திருவல்லிக்கேணி, சென்னை – 600 005. போன் : 8554538*
*உரிமையாளர் : வி. சுப்பாராவ்*

ADSTART

**குறிப்பு : எல்லா வண்டிகளுக்கும் காலை டிபன், காபி, 2 வேளை சாப்பாடு தங்கும் வசதி உட்பட்டது.**

---

## நீங்கள் அழகுக்கலை நிபுணராக வேண்டுமா
## அரசு அங்கீகாரம் பெற்ற சான்றிதழுடன்!
## அணுகவும் மஹாவை!

## MAHA BEAUTY TRAINING INSTITUTE

(Approved by Govt. of Tamil Nadu G.O.M.S. No. 4087/THOPA/96)

(Govt. Certificate issued on completion of course)



**RUSH TO JOIN EXCELLENT JOB ORIENTED BEAUTICIAN COURSES.**

- **Diploma in Beautician cum Hair dresser**
- **Diploma in Cosmetic preparation**
- **Training in latest Electrical Equipments handling.**
  **Classes are conducted regularly**

Maha BEAUTY PARLOUR

*(for Ladies Only)*

**Specialist in**

**Bridal Makeup, Hair weaving, Electrolysis & Implantation, Acne and Pimple, under eye for dark circles, Hair Styles and Mehandi, Scalp for hair falling & dandruff.**

**6C, Venkatesa Agraharam Street, Mylapore, Chennai - 600 004.**
**(Near Sai Baba Temple) Ph : 4950922/4942326/4940497 (R)**

**Duration of course - 3 months Crash course for 1 month is also available**

**Accommodation available for outstation students.**

# என்ன கோர்ஸ், எங்கு படிக்கலாம்?

நமது இதழில் 'வழி காட்டிகள்' போட்டியை அறிவித்தது பற்றிப் பெருமிதப்படும் வகையில் நிறைய வாசகிகள் மிகப் பயனுள்ள கல்வி வகுப்புக்களைப் பற்றி எழுதி வருகிறார்கள். இவற்றைப் பத்திரப் படுத்திக் கொண்டே வாருங்கள். கல்வியாண்டில் பயனுள்ளதாக இருக்கும். மற்றவர்களுக்கும் தரலாமே, வழிகாட்டலாமே! (வாசகர்களுக்கு ஒரு வார்த்தை) இது ஒரு வழிகாட்டும் தகவல் பகுதி மட்டுமே. கோர்ஸ் அல்லது கோர்ஸ் நடத்தும் நிறுவனங்களின் நிறை குறைகளை அவரவர்கள்தான் ஆராய்ந்து தேர்ந்தெடுக்க வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறோம். நம் நிறுவனம் அதற்குப் பொறுப்பாகாது.

— ஆர்.

National Dairy Research Institute, Karnal or B.Tech. (Dairy Technology) பற்றி வாசகர் ஒருவர் எழுதியிருந்தார்.

மேற்காண் நிறுவனத்தில் கற்பிக்கப்படும் கோர்ஸ்களும், அதன் விபரங்களும் பின் வருமாறு:

1) MASTER IN DAIRYING:-

I) Dairy Microbiology,
II) Dairy Chemistry
III) Dairy Technology
IV) Dairy Engineering
V) Animal Biochemistry
VI) Animal Genetics & Breeding
VII) Live stock production & Managements
VIII) Animal Nutrition
IX) Animal Physiology
X) Dairy Economics
XI) Dairy Extension Education
XII) Animal Biotechnology.

தகுதிகள்:-

பி.எஸ்ஸியில் விவசாயம், கால்நடை, மருத்துவம், Dairying, Pure Science, Animal Science, மனையியல்

அல்லது

பொறியியல், Food Technologyயில் 60% மதிப்பெண் பெற்றிருக்க வேண்டும். SC/ST பிரிவினருக்கு 55% போதுமானது.

தேர்வு செய்யும் முறை:-

அனைத்திந்திய அளவிலான நுழைவுத் தேர்வு மூலம்.

2) NATIONAL DAIRY DIPLOMA (DAIRY TECHNOLOGY)

இப்படிப்பு, Southern Regional Station of National Dairy Research Institute, Bangaloreல் மட்டுமே உள்ளது.

தகுதிகள்:- 10+2-வில், இயற்பியல், வேதியியல், கணிதம் மற்றும்

## முன்னாள் படைவீரர் அவரைச் சார்ந்தோர் கவனத்திற்கு...

மருத்துவம், பொறியியல், செவிலியர், பி.எஸ்சி, (விவசாயம்), ஆசிரியர் பயிற்சி, சட்டப் படிப்பு போன்ற பல்வேறு பட்டம், பட்டயம் மற்றும் சான்றிதழ் படிப்புகளுக்கு தமிழக அரசினால் முன்னாள் படைவீரர்களுக்கும் அவரைச் சார்ந்தோருக்கும் இட ஒதுக்கீடுகள் செய்யப்பட்டுள்ளன. மேலும் விபரம் அறிய உதவி இயக்குநர், முன்னாள் படைவீரர் நல அலுவலகம், சேத்துப்பட்டு, சென்னை - 31 அவர்களை அணுகவும்.

— ஏ.எம்.பாலகிருஷ்ணன்,
உதவி இயக்குநர், முன்னாள் படைவீரர் அலுவலகம்.

ஆங்கிலத்தில் 50% தேர்ச்சி SC/ST பிரிவி னருக்கு 45%தேர்ச்சி போதுமானது.

தேர்வு செய்யும் முறை:-

அனைத்திந்திய அளவிலான நுழைவுத் தேர்வின் மூலம்.

விண்ணப்பிக்கும் முறை:-

விண்ணப்பம் மற்றும் தகவல் தொகுப்பி னைப் பெற ரூ.60%க்கானவங்கி வரைவினை "ICAR UNIT, NDRI, KARNAL" என்ற பெயரில் எடுக்கவும். அத்துடன் சுயமுகவரியிட்டு உறை (20×25செ.மீ.)யின் இடப்பக்க ஓரத்தில் சேர வேண்டிய படிப்பு விபரத்தைக் குறிப்பிடல் வேண்டும். (MASTER OR DIPLOMA),

தகவல் தொகுப்பினைப் பெற விரும்பு வோர் கீழ்க்கண்டவற்றை கொட்டை எழுத் துக்களில் (Capital letters) எழுதி அனுப்பவும்.

பெயர், முழு முகவரி (அஞ்சல் குறியீட்டு எண்ணுடன்) சேர விரும்பும் படிப்பு மற்றும் வங்கி வரைவின் விபரங்கள்.

அனுப்ப வேண்டிய முகவரி:

Registrar, National Dairy Research Institute, Karnal - 132 001. Haryana.

— எஸ். பிரபு, ஈரோடு-4.

## வேளாண்மை பட்டப் படிப்பு

குறைந்த காலமே படிக்க வேண்டும். அதிக செலவு ஆகக் கூடாது. தாய்மொழியில் கற்க வேண்டும். படித்து முடித்ததும் வேலை. அதிலும் அதிக சம்பளம் கிடைக்கவேண்டும்- இவைகளனைத்தும் ஒரே படிப்பில் முடியுமா? முடியும். மதுரை- திண்டுக்கல் சாலையில், சின்னாளப்பட்டி அருகில் காந்திகிராமம்- கிராமிய பல்கலைக் கழகத்தில், இரண்டு வருட வேளாண்மை பட்டப் படிப்பு உள்ளது. தமிழ் மீடியத்தில் நடைபெறும் இக்கல்வி மிகவும் அதிக வேலை வாய்ப்புகளை கொண்டதாகும். சிறந்த கல்வி, பயிற்சி, பல பயிர்களில் அனுபவ கல்வி, மற்றும் இங்குள்ள பெரிய கால்நடை பண்ணையில் பயிற்சி போன்ற சிறப்பு கல்விகளை கொண்டது.

இப்படிப்பு முடிந்ததும், உடனடியாக வேலை கிடைக்கும். தனியார் பண்ணை, பழத் தோட்டங்கள், மருந்துக் கம்பெனி, உரக் கம்பெனிகளிலும் அரசு ஆராய்ச்சி நிலையங் கள், மண் பரிசோதனை நிலையம், கரும்புத் தொழிற்சாலை, வங்கி, நகர சபை, அரசு பண் ணைகளிலும் வேலை கிடைக்கும். தகுதி +2வில் அறிவியல், கணக்கு மற்றும் விவசாய குரூப்கள் படித்தவர்க்கு, +2 ரிசல்ட் வந்ததும் சேர்க்கை பற்றிய விபரங்கள் அனைத்து நாளி தழ்களிலும் வெளியாகும், பெண்களும் சேர்க் கப்படுகிறார்கள். மேலும் விபரங்கள் பெற "The Deen, Faculty of Agriculture and Animal husbandry, Gandhigram Rurel University, Gandhigram, Dindugal, Anna Dist." என்ற முகவரியை நாடலாம்.

மேலும் இப்பல்கலைக் கழகத்தில் ஒரு வருட மற்றும் இருவருட சுகாதார பயிற்சிகள் நடைபெறுகிறது. மேலும் மலர்களைப் பற்றிய பொருளாதார படிப்பும் உள்ளது. இது பூக்கள் ஏற்றுமதி, பூக்களிலிருந்து எண்ணெய், மெழுகு எடுத்தல் பற்றியதை போதிப்பதாகும். விபரங்கள் அறிய:-The Registrar, Gandhi gram Rural University, Gandhigram, Dindugal Dt.

A. சித்ரா அனந்தகுமார்,
குலசேகரம்.

Information given by M. Chandrasundaram, Shenkuruchi, that Central Hindi Directorate is conducting Correspondence Courses "Free of Cost and those who will complete these courses will get priority in Central Government jobs and those who have com-

போளி செய்யும்போது பால் கவர் (அல்லது) வாழை இலை உபயோகிக்கிறோம் அல்லவா? வேண்டாம். இப்போதெல்லாம் காப்பிப் பொடி போன்றவை அலுமினியம் (ஃபாயில்) கவரில் வருகிறது. அந்தக் கவரை சேகரித்து வைத்து அதில் போளி தட்டி உபயோகிக்கலாம்.

- பிரேமாவதி

pleted 15 years of age." We are receiving thousands of letters for admission to various courses. But we are unable to give clarification to each and every individual.

In this connection it is to inform you that Central Hindi Directorate is conducting Hindi Correspodence Courses on a nominal fee of Rs. 50/- in the form of postal order /DD. from students taking admission. Session starts from July every year. It is again reiterated that these courses are not free of cost.

The Course is open to all Indians and Foreigners residing in India or abroad whose mother-tongue is not Hindi and who are above 15 years of age. The candidate should have adequate knowledge of the medium of instruction.

*Dr. Virendra Saxena,*
*Deputy Director.*
*Central Hindi Directorate.*

**B.**Sc., *முடித்தால்* M-Tech *படிக்கலாம்.* All India Institute of Medical Science offers-

*படிப்பு:* M.Tech (Bio-Technoloy)

*காலம்: 2 வருடம்.*

*தகுதி:* M.B.B.S/B.V.Sc.,/ Ist class degree in B.Sc., _B.Sc (HONS) in Human Biology/Chemistry/ Genitis/Life sciences/Micro Biology/ Immunology.

*தேர்வுமுறை:* (Mode of selection)

ALL INDIA TEST CONDUCTED BY "AIIMS".

Month of test: Beginning of the Academic session.

Particulars:

For further details contact: DEAN,

Department of pathology, AIIMS, Ansari nagar, New Delhi.

*– கே.என். சிவசக்திவேல்,*
*ஈரோடு.*

## சுருக்கெழுத்து மற்றும் கணிப்பொறி பயிற்சி

**1937** *ஆம் ஆண்டு மூதறிஞர் இராஜாஜி அவர்களால் தொடங்கப்பட்ட சுருக்கெழுத்தாளர்கள் சங்கத்தில் சுருக்கெழுத்து மற்றும் கணிப்பொறியில், வேலை வாய்ப்பைக் கருத்தில் கொண்டு, கீழ்கண்ட பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன.*

*1) எழுபதே நாட்களில் ஆங்கிலச் சுருக்கெழுத்து* (Rapid course)

*2) எழுபதே நாட்களில் தமிழ்ச் சுருக்கெழுத்து* (Rapid course)

*3) கணிப்பொறி பயிற்சி* (Wordstar, Lotus 1-2-3, d Base III +)

- *பயிற்சிக் கட்டணம் - ரூ.750/- மட்டும்*
- *காலம் – ஒரு மாதம் / இரண்டு மாதங்கள்*

*4)* WINDOWS *கணிப்பொறி பயிற்சி* (MS-WORD, MS-EXCEL)

- *பயிற்சிக் கட்டணம்- ரூ. 1,000/- மட்டும்*
- *காலம் – ஒரு மாதம்*

*5) நேர்முகச் செயலர் பயிற்சி* (Personal Secretary Course)

* English typewriting, English Shorthand, Computer (Wordstar, Lotus 1-2-3, d Base III +, MS-WORD AND MS-EXCEL), Accountancy, Spoken English, Business Correspondence, Office Equipments etc).

- *பயிற்சிக் கட்டணம் – ரூ.2,000/- மட்டும் (தவணை முறையிலும் செலுத்தலாம்)*
- *காலம் – மூன்று மாதங்கள்*

*தகுதியுடைய மாணவர்களுக்கு வேலை வாய்ப்புப் பிரிவின் மூலம் வேலை பெற்றுத் தரப்படும்.*

*மேலும் விவரங்களுக்கு:*
*சுருக்கெழுத்தாளர்கள் சங்கம்*
*நெ 1, கில்டு தெரு,*
*(சிவா - விஷ்ணு கோயில் பின்புறம்)*
*தி. நகர், சென்னை - 600 017.*
*தொலை பேசி : 4342421; 4337387*

*– வி. இரமேஷ்*
*கௌரவச் செயலாளர்,*
*சுருக்கெழுத்தாளர்கள் சங்கம்.*



**வாழைக்காயை பச்சையாக துருவலில் துருவிக் கொண்டு அதற்குத் தேவையான மசாலா விழுது, உப்பு, இலைகளுடன் வெங்காயம், கருவேப்பிலை இலைகளையும் அரிந்து போட்டு நன்றாகப் பிசையவும். அடுப்பில் தோசைக் கல்லை போட்டு, எண்ணெய் தடவி, வாழைக்காய் கலவையைப் பரத்தி, சுற்றிலும் எண்ணெய் விட்டுப் பொன்னிறமானதும், திருப்பிப் போட்டு சிவக்க விடவும். 'இந்த வாழைக்காய் ரோஸ்ட் சமமாக பொரிந்து சாப்பிட 'கரகர'வென்று சுவையுடன் இருக்கும்.**

**– உமா**

பொங்கலில் வேர்க்கடலையைச் சிறிது நெய் ஊற்றி வறுத்துப் போட்டேன். முந்திரிப் பருப்பு என்றால் ஐந்துதான் போடுவேன். வேர்க்கடலையைத் தாராளமாக போட்டவுடன், குழந்தைகளுக்கு ரொம்பப் பிடித்து விட்டது.

– சித்ராஸ்ரீதரன்

## ஃபேஷன் டெக்னாலஜி

Fashion Designing வட இந்தியாவில் மட்டுமல்ல இங்கும் விரைவாக முன்னேறி வருகிறது. கற்பனா சக்தியும் ஈடுபாடுமுள்ள யாரும் இதில் சேரலாம். கல்லூரிகளில் தியரியாக படிப்பதை இங்கு பிராக்டிகலாக செய்ய வைக்கின்றனர். ஒவ்வொரு ஊருக்கும் ஆளுக்கும், இடத்துக்கும் தகுந்தபடி Fashion design மாறுவதை புரியவைக்கின்றனர். சிறந்த NIFT நிறுவனத்திலிருந்து வந்து பாடம் எடுக்கின்றனர். கடைசி வருடம் Fashion show நடத்தி அவரவர் Brand பெயரில் செய்ய வைத்து முழு நிபுணராகவே வெளியே அனுப்பி வைக்கின்றனர். படித்து முடித்தவுடன் சம்பாத்தியம் நிச்சயமாகிறது. ஆண், பெண் அனைருக்கும் குறுகிய கால டிப்ளமா கோர்ஸும் உள்ளது. தென்னிந்தியாவிலேயே முதல் முறையாக தனியார் கல்லூரி Fashion Technologyயும் இது தான் என்பதால் அனைவருக்கும் அரிய வாய்ப்பு.

முகவரி : SIFT,
No. 7C/7D
Spenzer plaza IInd floor,
Anna Salai,
Chennai - 600 002.
Ph : 852 6193.

– பானுமதி, சென்னை - 5.

ஒரு கம்பெனியில் செகரட்டரி என்பவர் முன்பெல்லாம் டைப்பிஸ்ட், சுருக்கெழுத்தாளர் என்பதாகத்தான் இருந்தது. ஆனால் இன்றைய வியாபார வேகம் நிறைந்த ஒரு உலகில் அதிகாரியின் வலதுகை போல விளங்க வேண்டியவராக இருக்கிறார். அலுவலக டேபிள் வொர்க், கம்ப்யூட்டரில் அடிப்படை அறிவு, தொலை பேசியில் நேரில் பேசுபவர்களை அணுகும் முறை, வேலை அதிகமாகும் போதோ ஒரு அவசர காலத்திலோ சரியாக முடிவெடுக்கும் திறன் இப்படி நிறைய தகுதிகள் ஒரு செகரட்டரிக்கு இன்றைக்குத் தேவை. இவற்றோடு அழகுக்கலை பயிற்சியும் சேர்த்து, ஒரு பெண்ணை முழுமையான வெற்றிகரமான செகரட்டரியாக பவனிவர பயிற்சி தருகிறது பெண்டியம் கல்லூரி. வருடத்திற்கு முப்பது பேரை மட்டுமே தேர்வு செய்து பயிற்சி கொடுத்து முடிந்தவரை அனைவருக்கும் வேலை வாய்ப்பையும் செய்து தருகிறார்கள்.

**Pentium College of Secretaries,**
**K.P.Complex, Officers Colony,**
**11, III main Road, Adambakkam,**
**Chennai - 88.**
**Ph : 245 7011, 2450829**

கல்யாணம், மற்றும் விசேஷங்களுக்குக் கொடுக்கப்படும் முறுக்கு, ஸ்வீட் வகைகள் ஒன்றாகக் கலந்து சாப்பிடப் பிடிக்காது. எனவே கரகர வகைகளை மிக்ஸியில் பொடியாக்கி, அத்துடன் ஸ்வீட் வகைகளையும் பொடியாக்கிக் கலந்து ஸ்பூன் போட்டு சாப்பிட 'புது வகை புட்டு' போல பிரமாதமாக இருக்கும்.

– உமா



### சேமியுங்கள் பயப்படாமல்...

# சேவைக்கு உடனே கை கொடுக்கும் சேவை!



*இன்று நடுத்தரவர்க்க மக்கள் பலருக்குப் பெண்ணின் திருமணம், குழந்தைகள் படிப்பு முதலிய பல அவசர தேவைகளுக்கு கைகொடுக்கும் ஓர் வசதிதான் 'சீட்டு நிதி' என்பது. ஆனால் இதைப் பற்றி சரிவர புரிந்து கொள்ளாமல் கஷ்டப்பட்டதால், சீட்டு என்றாலே அச்சப்படுவோர் பலர்! இவர்களின் கவலைகளை நீக்க, சீட்டு நிதி நிறுவனங்களைப் பற்றி நமக்கு விளக்கமளிக்கிறார் 'ராம் காஷ்யப் சிட்ஸ் (பி) லிட்' நிர்வாக இயக்குநர் திரு அ. வெங்கட்ராமணி'...*

**கேள்வி :** சீட்டு நிதி நிறுவனங்கள் எந்த அடிப்படையில் இயங்குகின்றன? இந் நிறுவனங்கள் எவ்வாறு தோன்றின?

நவீன வங்கிகளும், வங்கி சாரா நிதி அமைப்புகளும் வெளிநாட்டு இறக்குமதியே. நம் நாட்டில் உருவாக்கப்பட்ட மிகப் பழமை யான நிதி அமைப்பே 'சீட்டு நிதி' என்பது. கேரள மாநிலத்தில் தனி நபர்களால் ஆரம்பிக் கப்பட்டது சீட்டு நிதி நிறுவனங்கள். அந்த நாளில் பணப்புழக்கம் அதிகம் இல்லாதபோது தங்களிடையே உள்ள பண்டங்களை மாற்றிக் கொள்ளும் முறையில் முதலில் தொடங்கி, பிறகு அண்டை மாநிலங்களிலும் பரவியது. முக்கியமாக அவசரத் தேவைக்குக் கையில் பணம் உடனடியாக கிடைக்கவே, மக்களின் நலனை மனத்தில் கொண்டு செயல்பட்டு வருகின்றன எங்களைப் போன்ற சீட்டு நிதி நிறுவனங்கள்.

**கேள்வி :** இந் நிறுவனங்கள் இயங்க மூலப்பணம் எங்கிருந்து கிடைக்கிறது? அத்தொகையை வேறு எந்தெந்த வழிகளில் பயன்படுத்துகிறீர்கள்?

ஒரு 'குரூப்' சீட்டு ஆரம்பிக்கும்போது, அதில் பலர் சேருகின்றனர். அனைவரும் முதல் தவணையை செலுத்துகின்றனர். இரண்டாவது தவணை முறையிலேயே சீட்டு சேர்ந்தவர்களில் எவரேனும் ஒருவர் சீட்டை ஏலத்தில் எடுக்கத் தொடங்குகின்றனர். ஒவ்வொரு மாதமும் சீட்டு ஏலம் போன தொகை, அதாவது சீட்டுத் தொகையில் முப்பது சதவிகிதம் தள்ளுபடி யையே உச்ச வரம்பாகக் கொண்டு, மீதம் வட்டித் தொகையாக மற்றவர்களுக்குத் தரப் படுகிறது. அதனால் சீட்டு நிதி நிறுவனத்திற்கு மூலாதாரம் சீட்டு சேருபவர்கள் அளிக்கும் தவணைத் தொகையே. அதில் ஐந்து சதவிகி தம் மட்டுமே, சீட்டை நடத்துபவருக்குப் போய்ச் சேருகிறது. அந்தத் தொகையைக் கொண்டே அந்த நிதி நிறுவனம் அலுவல கத்தை நிர்வகிக்க, வேலை செய்பவர்களுக்கு ஊதியம் அளிக்க, ஏனைய இதர செலவுகளை செய்ய வேண்டும். எக்காரணம் கொண்டும் சீட்டு சேர்பவர்கள் கட்டும் தொகையை, வேறு எந்தக் காரணத்திற்கும், கடனளிக்கவும், சொத்துக்கள் வாங்கவும் முற்பட முடியாது. அதுவே சீட்டு நிதி நிறுவனத்தில் உள்ள மிகப் பெரிய பாதுகாப்பு.

**கேள்வி :** சில வருடங்களுக்கு முன் சீட்டுத் திட்டத்தையே அரசாங்கம் தடை

செய்து விட்டது என்ற கருத்து நிலவியது. பிறகு சீட்டு நிதி நிறுவனங்கள் திரும்பத் தொடங்கப்பட்டது எவ்வாறு?

மத்திய மாநில அரசு சீட்டு நிதிச் சட்ட விதிகளுக்கு உட்பட்டு தொடங்கி நடைபெற்று வரும் 'சீட்டு நிதி' நிறுவனங்கள் வேறு. குலுக்கலில் பரிசுத் திட்டத்தில் சீட்டு சேர்ந்து, பரிசு பெற்ற பிறகு பணம் செலுத்த வேண்டாம் என்று தங்கம், வெள்ளி, எவர்சில்வர், துணிமணி மற்றும் பல பொருட்களுக்கு சீட்டு நிதி நடத்திய நிறுவனங்கள் வேறு. இந்தத் திட்டத்தையே அரசாங்கம், "Prize Chits and Money Circulation Schemes Central Act 43 of 1978" மூலம் தடைசெய்து விட்டனர். தனி நபர்களால் உருவாக்கப்பட்டு, கூட்டு நிறுவனங்களாகவும், வரையறுக்கப்பட்ட கம்பெனிகளாகவும் இயங்கும் சீட்டு நிதி நிறுவனங்களை 'ஜேம்ஸ் ராஜ் கமிட்டி'யின் பரிந்துரைப்படி ஒழுங்குபடுத்தி, Central Chit Funds Act 1982 படி மத்திய பார்லிமெண்ட்டில் சட்டமாக்கப்பட்டது. அதன்படி இந்த சீட்டு நிதி நிறுவனங்களை அந்தந்த மாநில அரசு நிர்வகிக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. அதன்படி "தமிழ்நாடு சீட்டு நிதிகள் விதிகள் 1984" அமுலாக்கப்பட்டு தமிழ்நாட்டில் சீட்டு நிதி நிறுவனங்கள் இயங்கி வருகின்றன. இந்த இரண்டு சட்ட திட்டங்களுக்கும் அடங்கி, மேலும் இந்திய ரிசர்வ் வங்கியின் வங்கி சாரா நிதியமைப்புக்கான இலாகாவின் தணிக்கைக்கும் உட்பட்டது இவை.

**கேள்வி : வங்கி மற்றும் பிற ரெகரிங் டெபாஸிட் திட்டங்கள், கம்பெனி டெபாஸிட்டுகள் போன்றவற்றிலிருந்து 'சீட்டு நிதி' மாறுபடுவது எவ்வாறு?**

வங்கி மற்றும் பிற ரெக்கரிங் டெபாஸிட் திட்டங்களில் மாதா மாதம் ஒரே தொகையைக் குறிப்பிட்ட மாதங்கள் முடியும் வரை கட்ட வேண்டும். ஆனால் தவணை முறையில் சீட்டு குரூப்பில் தள்ளுபடிக்கேற்ப, வட்டித் தொகை பெற்று, தவணைத் தொகையில் கழித்து மீதியைக் கட்டினால் போதும். மேலும் எதிர் காலத்தில் செலுத்தப் போகும் தவணைத் தொகையை வாக்குறுதியின் பேரில் நம்பி, நிகழ் காலத்திலேயே கணிசமான தொகையை ஏலம் மூலம் தருவது சீட்டு நிதியே. ஆனால் கம்பெனி டெபாஸிட்டிலும், ரெகரிங் டெபாஸிட்டிலும், மொத்த தொகையும் கட்டி முடித்த பிறகே, பெரிய தொகை கையில் கிடைக்கும். கம்பெனி டெபாஸிட்டை முன்பாக முடித்துக் கொள்வதற்கு அல்லது கடன் பெற காத்திருக்க வேண்டிய காலம் ஒன்று உண்டு. அதே போல் 'ரெக்கரிங் டெபாசிட்'டில் கடன் பெற ஒரு குறிப்பிட்ட தொகையாவது சேர்ந்திருக்க வேண்டும். இந்தக் கட்டாயங்கள் ஏதும் சீட்டு நிதியில் கிடையாது.

**கேள்வி : இவ்வாறு மிக எளிதாகக் கடனாக சீட்டுப் பணத்தை அளித்து வரும் நீங்கள், தள்ளி எடுப்பவரிடமிருந்து பெறும் உத்திரவாதங்கள் என்ன?**

பொது மக்களின் பணமே சீட்டு தள்ளி எடுத்தவரிடம் கொடுக்கப்படும் பணம் என்பதும், எங்கள் நிறுவனத்தின் மீது உள்ள நம்பிக்கையைக் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணமும் இருப்பதால், ஒருவர் சீட்டை தள்ளி எடுத்துப் பணம் பெறுவதற்குள், அவரைப் பற்றி விசாரித்து விடுவோம். அவரது குடியிருப்பு, அலுவலகத்தில் அவர் பெற்றுள்ள அங்கீகாரம், அவரது வீட்டிலுள்ள மற்றவர்களின் வருவாய், அவரது சொத்து விவரம், சீட்டை தொடர்ந்து கட்டக்கூடிய தகுதி ஆகியவற்றை ஆராய்கிறோம். மேலும் சீட்டின் மதிப்பிற்கேற்ப இரண்டு அல்லது மூன்று நபர்களிடமிருந்து உத்திரவாதக் கையெழுத்து தேவைப்பட்டால் வாகனத்தை அடமானமாக்கி கொள்வது, அல்லது இன்சூரன்ஸ் பாலிஸி போன்றவற்றை அடமானம் வைத்துக் கொள்வோம். மாதா மாதம் அவர் செலுத்த வேண்டிய தொகையைப் பெற எங்கள் பிரதிநிதிகள் நேரேயே சென்று விடுவார்கள். ஓரிரு மாதம் கட்டாவிடில் நல்ல முறையில் பேசிக் கட்டச் சொல்வோம். அதற்கும் மீறினால் அவர் மேல் தகுந்த நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

**கேள்வி : நீங்கள் ஒவ்வொரு குரூப் திட்டத்தையும் சரியாக நடத்துகிறீர்களா என்பதைக் கண்காணிப்பது யார்? சீட்டுத் தொகையை கட்டத் தவறினால எடுக்கப்படும் நடவடிக்கை என்ன?**

என் தோழியின் வீட்டிற்கு சென்றிருந்த போது, தட்டில் சிப்ஸும் ஜூஸும் கொடுத்தார்கள். சிப்ஸ் சாப்பிட சுவையாக இருந்தது. சிப்ஸ் பொரித்ததும், மேலே எள்ளுப் பொடி + உப்பு + காரம் தூவியிருந்தார்கள். நாமும் செய்து பார்க்கலாமே!

- உமா



சீட்டு நிதி நிறுவனங்களை மேலாண்மை செய்வது மாநில அரசு இலாகா. அங்கு பதிவு அலுவலக இன்ஸ்பெக்டர் ஜெனரல் பதவியிலிருப்பவரின் கீழ் பணிபுரியும் அலுவலர்களிடம் நிதி நிறுவனத்தின் படிவங்கள், ஒவ்வொரு செயல்பாட்டிற்கும் விதிப்படி செலுத்த வேண்டிய தொகை, சீட்டு துவங்கியது, நடத்தியது, முடித்தது பற்றிய விவரங்கள் ஆகியவை சமர்ப்பிக்கப்படும். ஒவ்வொரு குரூப் சீட்டுகள் தொடங்கப்படும்போதும், அந்த குரூப்பின் சீட்டுத் தொகையளவிற்கு - அதாவது பத்தாயிரம் ரூபாய் சீட்டு எனில் பத்தாயிரம் ரூபாய்க்கு பிக்ஸட் டெபாஸிட் எடுக்கப்பட்டு அந்த அலுவலகத்தில் வைக்கப்படுகிறது. மேலும் இந்த சீட்டு நிறுவனங்களை பரிசோதனை செய்யும் உரிமையும் அவர்களுக்கு உள்ளது. விதிகளை மீறினால் அபராதம் தண்டனை அளிக்க உரிமையும் உண்டு.

எவரேனும் சீட்டுத் தொகை கட்டத் தவறினால் இந்த அலுவலகத்திலுள்ளவரே சந்தாதாரருக்கும், சீட்டு நடத்துபவருக்கும் சமரசம் செய்ய முற்படுவார். அதையும் மீறி கட்டவில்லையெனில் கோர்ட்டில் வழக்கு நடத்தப்படும். அடமானம் வைக்கப்பட்ட பத்திரங்கள் ஏலம் விடப்பட்டு தொகை சீட்டு நடத்துபவருக்கு தரப்படும். அதுவரை சீட்டு கட்டும் மற்றவர்க்கு சீட்டு நடத்துபவரே உத்திரவாதம் அளிக்க வேண்டும். சீட்டைத் தொடர்ந்து நடத்தப் போதிய தொகையையும் சேர்த்து அளிக்க வேண்டும். ஆனால் அநேகம் பேர் சமரசப் பேச்சு வார்த்தையிலேயே சீட்டை தொடர்ந்து கட்டத் தொடங்கி விடுவார்கள்.

**கேள்வி : சீட்டுக் கட்டும் சந்தாதாரர்கள் இத்தகைய சீட்டிலிருந்து எவ்வாறு அதிக பட்ச பலன்களைப் பெறலாம்?**

பலன் என்பது சந்தாதாரரின் தேவையை பொறுத்தேயாகும். அவசரத் தேவைக்கென சீட்டை எடுக்கும்போதும் முப்பது சதவிகிதத் தள்ளுபடி போக கிடைக்கும் தொகை வெளியில் மற்றவர்கள் கடனுக்கு அளிக்கும் வட்டியை விட குறைந்தே இருக்கும். மேலும் சீட்டு நிலவரத்தை கவனித்து சாதுரியமாக, சீட்டுக் காலத்தின் நடுவில் எடுத்தால் அதிக பலன், முடிவில் எடுத்தால் அவ்வளவு பலனில்லை! இருப்பினும் தேவை அப்போது ஏற்பட்டால், எடுத்துதான் ஆக வேண்டும். அந்த நிலையில் கூட அவர் நஷ்டம் அடைவதில்லை. எந்தவிதமான கடன்களுக்கும் மற்ற நிதி அமைப்புகள் குறைந்தபட்ச ஈட்டுதொகை இருபத்தைந்து சதவிகிதமாவது இருக்க வேண்டுமென்பார்கள். ஆனால் சீட்டு நிதியில் சட்டப்படி அதிகபட்ச வரம்பு முப்பது சதவிகிதம் இருப்பினும், மாதம் செல்லச் செல்ல இந்த வரம்பு குறைந்து கொண்டே வந்து, ஐந்து சதவிகிதத்தில் நின்று விடும்! எல்லாவற்றையும் விடச் சீட்டில் பெற்ற தொகையைத் திருப்பிச் செலுத்த முப்பது முதல் அறுபது மாதங்கள் காலவரையறை அளிக்கப்படுகிறது.

**கேள்வி : சீட்டு நிதி பற்றி மக்கள் தெரிந்து கொள்ள வேண்டியதென்ன?**

பலதரப்பட்ட மக்களை, கீழ்மட்ட, நடுத்தர உயர்தர, வியாபாரிகளை, தொழில் வல்லுநர்களை, வேலை பார்ப்பவர்களை, சிறுதொழில் புரிபவர்களை என பலரை ஒருங்கிணைப்பது சீட்டு நிதி ஒன்றே. பண வீக்கத்திலிருந்து காத்துக் கொள்ளக்கூடிய தடுப்பு வேலிதான் சீட்டு நிதி. சீட்டு நிறுவனம் ஒரு தர்மகர்த்தா நிதி அமைப்பு. பணத்தைச் சீட்டிலிருந்து பெறுபவர் கண்ணியமாகவும், கௌரவமாகவும், உரிமையுடனும் பெறலாம். இவையெல்லாவற்றையும் மனதில் கொள்வதோடு சீட்டை நடத்தும் நிறுவனம் பற்றியும் ஆராய்ந்து அறிந்து கொள்ள வேண்டும். "சீட்டை ஏலத்தில் எடுப்பவர் கட்டத் தவறினாலும், தொடர்ந்து நடத்தக் கூடியவர்களா? கட்டத் தவறுபவர்களிடம் தொகையை மீட்டு பெறக்கூடியவர்களா? நற்பெயர் பெற்றவர்களா?" என்று ஆராய்ந்து சேர வேண்டும்.

இவ்வாறு மக்கள் அலசிப் பார்த்து நல்ல முடிவெடுத்து எங்களிடம் சேர்ந்துள்ளதால் இன்று வருடாந்திர ஏலத் தொகை இருபத்தைந்து கோடியாக உயர்ந்துள்ளது. இருபத்திஐந்தாயிரம் சந்தாதாரர்களை கொண்டுள்ளது. இரண்டே வருடங்களில் தமிழ்நாட்டில் பதினாறு கிளைகளையும், ஆந்திரப் பிரதேசத்தில் பதினான்கு கிளைகளையும் கொண்டுள்ளது எங்கள் நிறுவனம்" என்கிறார் ராம்காஷ்யப் சிட்ஸ் (பி) லிட். தலைவர் வெங்கட்ரமணி.

பேட்டி : **ராஜ்யஸ்ரீ சந்திரசேகர்**

**கவுனில் தைக்கும் ஷோபட்டன் பிளைனாக இருந்தால் அதில் ஜிகினா உள்ள நெயில் பாலீஷை தடவினால் மேலும் அழகூட்டும்.**

**— மங்கை பொன்னுசாமி**



# போரடிக்காமல் பொருளாதாரம் படிக்கலாமா?

இந்த மாதம் விவசாயத் துறையைப் பார்க்கலாமா? என்னடா! பொருளாதாரம் சம்பந்தப்பட்ட கட்டுரையில் விவசாயத்தைப் பற்றி எழுத என்ன இருக்கிறது என்று நீங்கள் யோசிக்கலாம். நம்மில் பல பேர் விவசாயம் ஏதோ கிராமத்தில் நடக்கும் அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சி, அதிகமாகப் படிக்காதவர்கள் ஈடுபட்டிருக்கும் ஒரு தொழில் துறை என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம்.

ஆனால் உண்மையில் விவசாயத் துறை பொருளாதாரரீதியாக எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது தெரியுமா? இன்னும் ஒரு படி மேலே சொல்லப் போனால், வெறும் பொருளாதாரக் கண்ணோட்டத்தில் மட்டுமல்லாமல், விவசாயம் பல வகையிலும் முக்கியத்துவம் பெற்ற துறை.

விவசாயம் நாட்டின் முதுகெலும்பு என்று மகாத்மா காந்தி சும்மா சொல்லவில்லை. இன்றைய நிலையிலும் நம் நாட்டின் ஜனத்தொகையில் 72% மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கின்றனர். நம் நாடு மட்டுமில்லாமல் அநேக நாடுகளின் ஆரம்ப காலத் தொழில் இதுதான். எந்தச் சமுதாயமும் முன்னேறுவதற்கான முதல் படி. பல முன்னேறிய நாடுகளின் சரித்திரத்தைப் பார்த்தால் ஒன்று புரியும். அவையும் ஆரம்ப காலத்தில் விவசாயத் துறையையே சார்ந்திருந்ததென்று.

அரசியல் ரீதியாகப் பார்த்தாலும் விவசாயம் ரொம்ப முக்கியத்துவம் வாய்ந்தது. ஒவ்வொரு ஆண்டும் பட்ஜெட்டில் விவசாயத் துறைக்கென்று மானியம் எந்தளவு ஒதுக்கப்படுகிறது என்று வெகுவாக எதிர்பார்க்கப்படுகிறது. உணவுப் பொருட்களுக்கு அளிக்கப்படும் மானியம், உரத்திற்கு அளிக்கப்படும் மானியம், மற்றும் மின்சாரத்திற்கு அளிக்கப்படும் மானியம் எல்லாம் சேர்த்து –

1993 – 94-ல் 12, 864 ரூ. (கோடியில்)
1994 – 95-ல் 12, 810 "
1995 – 96-ல் 12, 400 "
1996 – 97-ல் 8, 666 "
1997 – 98-ல் 7,500 உணவுத் துறைக்கு மட்டும்.

என்று நாட்டின் மொத்த செலவில் ஒரு பெருந்தொகையே ஒதுக்க வேண்டியிருக்கிறது. மானியம் ஓட்டு வங்கி சம்பந்தப்பட்ட விஷயம் என்றும் ஒரு கருத்து நிலவுகிறது.

சரி! பொருளாதாரரீதியாகவும் விவசாயத் துறை எப்படி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததென்று பார்ப்போமா?

நாட்டின் மொத்த வருமானம்/உற்பத்தியின் மதிப்பு – மூன்று துறைகளைச் சார்ந்திருக்கிறது.

1. விவசாயத் துறை, 2. தொழிற்துறை, 3. Services Industry எனப்படும் 'சேவை' சம்பந்தப்பட்ட பல தொழில்களைச் சேர்ந்த துறை (உதாரணத்திற்கு : கூரியர் சர்வீஸ், தொலைபேசி, போக்குவரத்து வசதி, தொலைக்காட்சி



எக்ஸ்ட்ரா) இன்னும் சொல்லப் போனால் இந்தத் துறையால் மனித வாழ்க்கைக்கு வசதி பெருகுகிறது. அதனால்தான் Services Industry என்று பெயர்.

இந்தியா சுதந்திரம் பெற்று சில ஆண்டுகள் வரை Gross Development Product (GDP) எனப்படும் நாட்டின் மொத்த உற்பத்தியின் மதிப்பு, வருமானத்தில் கிட்டத்தட்ட 55% வரை விவசாயத் துறையிலிருந்து வந்தது. நாளடைவில் மற்ற துறைகளின் வருமானம் பெருகி 1994-95 ஆண்டில் விவசாயத் துறையிலிருந்து கிட்டத்தட்ட 30%, தொழில் துறையிலிருந்து 28% (சர்வீஸ்) சேவைத் துறையிலிருந்து 42% வருமானமும் வந்தது.

இந்தக் கட்டுரையே விவசாயம் ஏதோ ஒரு புராதனத் தொழில் அல்ல; அதுவும் ஒரு வகையான தொழிற்துறை என்றும், பொருளாதார ரீதியாக முக்கியத்துவம் வாய்ந்த, சிந்திக்கப்பட, திட்டமிடப்பட வேண்டிய துறையே என்று கூறுவதற்காகத்தான்.

ஒரு நாட்டை விவசாயத்தைச் சார்ந்த பொருளாதாரம் என்றும், தொழிற்துறையைச் சார்ந்த பொருளாதாரம் என்றும் பாகுபடுத்தப் படுவதைப் கேட்டிருக்கிறோம். (Agricultural Economy and Industrial Economy) இந்தியாவைப் பொறுத்தவரையில் இரண்டு துறையையும் சார்ந்த நாடென்று சொல்லலாம்.

வெறும் விவசாயத்தையே நம்பி எவ்வளவு தொழிற்சாலைகள் இயங்குகின்றன என்று பார்ப்போம். சர்க்கரை, சமையல் எண்ணெய், ரெடிமேட் உணவுப் பொருட்கள், தின்பண்டங்கள் தயாரிக்கும் சிறு குறு தொழில்கள் என்று

---

பாலேடு எடுத்து சேகரித்து வெண்ணெய் எடுக்க மிக்ஸியில் போட்டு ஹை ஸ்பீடில் கடைய பத்து செகண்டில் வெண்ணெய் ரெடி. மோருடன் கடைந்த வெண்ணெயைப் பாத்திரத்தில் ஊற்றி ஐக்கை வெதுவெதுப்பான நீரில் அலம்பி வெண்ணெயுடன் சேர்த்து பிரிட்ஜில் வைக்க அரை மணியில் கெட்டியான வெண்ணெய் ரெடி.

– பிரேமாவதி



பலவகையான தொழில்கள் விவசாயத் துறையையே நம்பியிருக்கின்றன.

விவசாயத்தின் மூலம் அந்நியச் செலாவணி வருவாய் எவ்வளவு என்று பார்ப்போம். 1991 – 95 ஆண்டில் நமது ஏற்றுமதியில் கிட்டத் தட்ட 20% விவசாயம் மற்றும் அதனைச் சார்ந்த இதரத் துறைகளிலிருந்து வந்தது. உலகளவில் அரிசி, கோதுமை, பருத்தி, நிலக்கடலை உற்பத்தியில் இந்தியாவின் விளைச்சல் முதல் மூன்று இடத்திற்குள் இருக்கிறது. இத்தனைக் கும் நம் நாட்டு விவசாயத் துறை இன்னும் பழமைவாய்ந்த முறையிலேயே இருக்கிறது. அநேகமாக வானம் பார்த்த பூமி. கடந்த எட்டு ஆண்டுகளாக நல்ல பருவ மழையிருப்பதன் காரணமாக தானிய விளைச்சல் நன்றாக இருந்து வருகிறது. நீர்ப்பாசன வசதி நம்மிடம் இருக்கும் விவசாய நிலத்தின் நான்கில் ஒரு பகுதி நிலத்திற்குத்தான் இருக்கிறது. அதாவது விவசாயத்திற்கு உகந்த இடம் 170 மில்லியன் ஹெக்டேரில் கிட்டத்தட்ட 45 மில்லியன் ஹெக்டேர் நிலத்தில்தான் நீர்ப்பாசன வசதி இருக்கிறது.

விஞ்ஞானரீதியாக, நவீன தொழில்நுட்பத் தோடு விவசாயம் நடைபெறுவது மிகவும் குறைச்சல். நல்ல உரம், தரமான விதைகள் எல்லா விவசாயிகளாலும் வாங்க முடியாது இருந்தும் கூட நாம் இந்த ஆண்டின் அரிசி விளைச்சலில் 190 மில் டன் அளவு எட்டியிருக் கிறது என்றால் ஓரளவு பாராட்டக்கூடிய நிலைதான். ஆனால் இதை நினைத்து, பெரு மைபட்டுக் கொண்டு நாம் மெத்தனமாக உட் கார முடியாது. முன்னேறிய நாட்டின் ஒரு ஏக் கர் நிலத்தின் விளைச்சலின் அளவு விகிதத்தை ஒப்பிட்டுப் பார்க்கையில் நம் நாட்டு விளைச்சல் மிகவும் குறைவு. அமெரிக்காவின் ஜனத்தொகையில் 3% சதவீதம் மட்டுமே விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறது. (அமெரிக்கா வின் ஜனத்தொகை நம் ஜனத்தொகையில் கிட்டத்தட்ட மூன்றில் ஒரு பங்கு) ஆனாலும் கோதுமை, சோளம் விளைச்சல் அளவைக் கேட்டால் நம்மை பிரமிக்க வைக்கிறது. அந்த நாட்டு ஜனத்தொகையின் 3% மக்கள் ஈடுபட்டு ஏற்படுத்தும் விளைச்சல் கிட்டத்தட்ட நம் நாட்டு விளைச்சல் அளவு இருக்குமென்றால் அவர்களின் விவசாய முறை எவ்வளவு முன்னேறியிருக்கிறதென்று உங்களுக்குப் புரியும்.

வருத்தத்திற்குரிய இன்னொரு விஷயம் என்னவென்றால் நல்ல விளைச்சல் உண்டா னாலும் நம்மிடம் அதைத் தக்கவைத்துக் கொள்ளும் நவீன தொழிற்நுட்பம் மிகக் குறைவு. விவசாய/உணவுப் பொருட்கள் எல்லாவற்றிற்குமே அதை பக்குவப்படுத்தி

வைத்துக் கொண்டால்தான் நீண்ட நாட்கள் வரும். அதுவும் பழம்/காய்கறிகள் நமக்குப் பதப்படுத்தத் தெரியாமல் அழுகிப் போவதால் ஏற்படும் நஷ்டத்திற்குக் கணக்கு வழக்கு கிடையாது. ஆங்கிலத்தில் இதையே Perishable goods என்று சொல்லுகின்றனர்.

பொருளாதார/விவசாய வல்லுனர்களின் கருத்துப்படி நாம் விவசாயத் துறையில் கவனிக்க வேண்டிய விஷயங்களைப் பார்ப்போமா?

நாட்டில் இருக்கும் நிலவளத்தின் தரத்தைப் பெருக்க வேண்டும், விவசாயத்திற்கு உட்படுத்தப்படாத இடத்தை அந்தந்த நிலத்தின் தரத்தைப் பொறுத்து விவசாயத்திற்கு உகந்ததாக மாற்ற வேண்டும்; நீர்ப்பாசன வசதி எல்லா விவசாய நிலத்திற்கும் அளிக்கப்பட வேண்டும். தரமான விதைகள்/உரங்கள் போட்டு ஒரு குறிப்பிட்ட அளவு இடத்திற்குக் கூடுதல் சாகுபடி (yield) பெற வேண்டும். நவீன முறைப்படி mixed roppy எனப்படும் கலவை முறையில் விவசாயம் செய்து கூடுதல் விளைச்சல் ஏற்படுத்த வேண்டும். இன்னும் எவ்வளவோ சொல்லிக் கொண்டே போகலாம்.

எல்லாவற்றிற்கும் மேலாக விளைந்த பொருட்களை பக்குவப்படுத்தி, அதன் மதிப்பைப் பெருக்குவதில் அரசாங்கம் இப்பொழுது முயன்று வருகிறது. இவ்வளவு காலமாக இல்லாமல் கடந்த சில ஆண்டுகளாக பதப்படுத்தும் தொழிற்சாலை, value addition (மதிப்பைப் பெருக்கும் பணியில் ஈடுபடுத்தப்பட்ட) தொழிற்சாலை அதிகரித்து வந்திருப்பதை நாம் காணலாம். மாம்பழ குளிர்பானம், தக்காளி சாஸ் எல்லாம் இந்த நவீன தொழிற்நுட்பத்தில் அமைக்கப்பட்டன என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும்.

இவையெல்லாம் ஒருபக்கமென்றால், விவசாயத் துறைக்கு தேவைக்கதிகமாக சலுகை அளிக்கப்படுகிறது என்ற கருத்தும் நிலவுகிறது. இருந்தும் விவசாயத் துறை இந்தியாவில் இன்னும் ஒரு Industry Status பெறும் அளவு வளரவில்லை. அதாவது ஒரு முழுமையான தொழிற்துறை என அழைக்கப்படும் அளவுக்கு வளரவில்லை. அதற்குக் காரணங்கள் நான் ஏற்கெனவே கூறியதுதான்.

முன்னேறிய நாடுகளில் விவசாயம் ஒரு தொழிற்துறை போன்று கருதப்படுகிறது. நம் நாட்டில் அரசாங்கம் இத்துறையை ஊக்குவிப்பதற்கென்றே மின்வசதி, உரம், விதை கடன் வசதி குறைந்த விலையில் அளித்து வருகின்றன. இதைத்தான் மானியம் என்கிறோம். அதாவது ஏழை எளிய விவசாயிகளுக்கு அளிக்கப்படும் உதவி. ஆனால் உண்மையிலேயே ஏழை விவசாயிக்கு இந்தச் சலுகை போய்ச் சேருகிறதா, இதில் முறைகேடுகள் நிகழ்கின்றனவா என்பதில் இரண்டு வகையான கருத்தும் இருக்கின்றன.

வெறும் மானியம் அளிப்பதால் இந்தத் துறை முன்னேறி விடாது. நவீன தொழிற்நுட்பமே இத்துறை முன்னேறுவதற்கான ஒரே வழி என்பதையும் அரசாங்கம் உணர்ந்திருக்கிறது. இஸ்ரேல் நாட்டோடு விவசாயத்தில் கூட்டு முயற்சி என்பதெல்லாம் இந்த அடிப்படையில் ஏற்பட்டவைதான்.

விவசாயத் துறை முன்னேறினால் வெறும் நாட்டின் வயிற்றுப் பசி அடங்குவது மட்டுமில்லாமல், அதனைச் சார்ந்த இதரத் தொழிற்சாலைகள் வளர ஏதுவாக இருக்கும். அதாவது காய்கள், கனிகள் ஏன் பூக்களை வைத்தும் தொழிலைச் செய்யலாம்.

நம் நாட்டில் பல துறைகளும் விஞ்ஞானமயமாகி இருப்பது போல விவசாயத் துறையும் விஞ்ஞான முறையில் செய்யப்படுமானால் நாட்டின் பொருளாதாரம் மிகவுயர்ந்த நிலைக்குச் செல்லும் என்பதில் ஐயமில்லை.

**- ஜெயந்தி ஸ்ரீநிவாஸன்**



மாங்கல்யதாரணம் ஆனதும், மணமகன், மணமகள் கைகளைக் குலுக்கி வாழ்த்து சொல்வது வழக்கமாகி விட்டது. ஆனால் சாஸ்திரப் பிரகாரம் திருமணம் முடிந்தபிறகு 'சப்தபதி' என்ற சடங்கு நடந்து முடியும் வரை மணமகனோ, மணமகளோ, பிறர் கையை தொடக் கூடாது. மணமகனும் மணமகளும் திருமணம் ஆகி ஒருவர் கையை ஒருவர் பிடித்தபடி 7 அடி நடந்து சப்தபதியை முடிக்க வேண்டும். பிறகுதான் கைகுலுக்குவதற்கு பிறர் கையைத் தொட வேண்டும். பல திருமணங்களில் இந்தக் கைகுலுக்கல் நடந்து கொண்டுதான் இருக்கிறது. **– எஸ். விஜயா சீனிவாசன்**



கிரைண்டர் வைத்திருந்தோம். குழந்தை உயரத்திற்குக் கிரைண்டர் மட்டுமே பிரதானமாகத் தெரிய, அவள் கிரைண்டரையே ஸ்வாமி என்று நினைத்திருந்தாள். மறுநாளே கிரைண்டரை இடம் மாற்றினோம். இந்நிகழ்ச்சி சிறு குழந்தை மனத்தில் சில சின்னச் சின்ன விஷயங்கள் கூட எவ்வளவு ஆழமாக பதிந்து விடுகிறது என்பதற்கு நல்ல உதாரணம்.

திரஞ்சனா பாலு, ஜெய்பூர் – 17.

**மங்கையர் மலர் & அம்மி கிச்சன் மிஷின் வழங்கும் 'வாழ்வின் சுவையான நேரங்கள்' பரிசுப் போட்டியில் முதல் பரிசு பெற்ற கட்டுரை**

## கிரைண்டரே கடவுளாக!

அப்பொழுது என் மகளுக்கு இரண்டு வயது. காலையில் குளித்தவுடனும், மாலை விளக்கேற்றியவுடனும் ஸ்வாமி மேடையருகே சென்று சிறு ஸ்லோகங்கள் சொல்லி நமஸ்கரிக்க பழக்கியிருந்தேன். அவளும் நான் மறந்தால் கூட அவளே ஞாபகப்படுத்தி செய்வாள்.

ஒருநாள் என் சித்தி வீட்டில் தங்கியபோது அவர்கள் மாலை விளக்கேற்றியதும், நான் ஹாலில் உட்கார்ந்தவாறே, போய் "ஸ்வாமி நமஸ்காரம் செய்து விட்டு வா" என்றேன். குழந்தையும் உள்ளே போய்விட்டு வந்தாள். நானும் ஏதோ பேச்சு ஸ்வாரஸ்யத்தில் "இன்னொரு முறை பண்ணு," என்று சொல்ல அவளும் உள்ளே சென்றாள். இதற்குள் என் சித்தி, "இங்கே பார், உன் பெண் விழுந்து விழுந்து கிரைண்டருக்கு நமஸ்காரம் பண்ணுகிறாள்" என்று சமையலறையிலிருந்து கூற, நானும் உள்ளே விரைந்தேன். "இப்படி ஏன் செய்கிறாய்? ஸ்வாமி அங்கேதான் இருக்கிறது" என்று சொல்ல அவள் விடாமல் கிரைண்டருக்குத் தான் ஸ்லோகம் சொல்லி நமஸ்கரித்தாள். பக்கத்தில் இருக்கும் என் மாமி வீட்டிற்குப் போனால் அங்கும் இதையேதான் செய்தாள்.

பிறகுதான் புரிந்தது. எங்கள் வீட்டில் ஸ்வாமி அலமாரி உயரமான இடத்தில் இருந்தது. வேறு சரியான இடத்தில் ப்ளக் கனெக்ஷன் இல்லாததால் அதற்குக் கீழேயே




# வாழ்வின் சுவையான நேரங்கள்

## பிரசுத்திற்கு....

## வெடி போண்டா

சுமார் 20 பேர் கலந்து கொள்ளும் சிறு விருந்து நிகழ்ச்சியினை நண்பர் வீட்டில் போதிய இடவசதி இல்லாததால் எங்கள் வீட்டில் ஏற்பாடு செய்திருந்தார் நண்பர். பெரும்பாலான வேலைகள் என் தலையில் விழுந்தன. இட்லி, போண்டா, கேசரி, சாம்பார், இரண்டு வகை சட்னி இதுதான் மெனு.

எல்லா வேலைகளையும் முடித்து விட்டு கடைசியில் சூடாக போண்டா போடலாம் என்பதால் மாலை ஆறு மணிக்கு மேல்

# அதிர்ஷ்டக் கற்களின் மூலம் பிரச்சினைகளைத் தீர்க்க

ராசி, நட்சத்திரம், தேதி, மாதம் பார்த்து ஜாதிகற்கள் அணிவதால் போதிய பலன் அளிப்பதில்லை, ஜாதகத்தினை துல்லியமாக கணித்து தற்போதைய பலன்கள்படி ஜாதிகற்களை அணிவதன் மூலமே பலன் அளிக்கிறது என்று சப்த ரிஷிகள் கூறியுள்ளார்கள்.

**K.P.** ஜுவல்லரியில் வித்தியாச மான முறையில் தங்க நகை வியாபாரம் செய்வதோடு பாரம்பரியமிக்க ஜோதிடரைக் கொண்டு ஜாதகத்தை துல்லி-யமாக கணித்து குடும்பத்தில் குழப்பம், தடைபடும் திருமணம், புத்திர தோஷம், செவ்வாய் தோஷம், வீடு, மனை, வியாபாரம் இவைகளுக்கு ஏற்ப அதிர்ஷ்டக்கல் அணிந்து பூரண வெற்றி பெறலாம்.

## K.P. ஜுவல்லரி & ஜெம்ஸ்

11, துரைசாமி ரோடு, (பாலம் அருகில்), தி. நகர்.
சென்னை - 600 017. ✆ : 4341186 / 4320132

இத்தாலி பவளம், ஐதராபாத் முத்துக்கள் தங்கத்திலும் வெள்ளியிலும் கிடைக்கும்

எங்கள் மூலம் ஆயிரக்கணக்கானவர்கள் பயன்பெற்று ஆனந்தமாக வாழ்கின்றனர்.

# நலமான வாழ்விற்கு காந்த சிகிச்சை











நாட்பட்ட எல்லா நோய்களுக்கும் மருந்து, ஊசி, மாத்திரை, உணவுக் கட்டுப்பாடு, அறுவை சிகிச்சை எதுவுமில்லாமல் காந்தக் கருவிகளின் மூலம் நீங்களாகவே சிகிச்சை செய்து கொள்ளலாம்.

தீராத வியாதிகள் தீர : இதற்கு வழியே இல்லையா என ஏங்குபவர்க்கு மட்டும். பல்வேறு மாற்று மருத்துவங்களும், மணி, மந்திர ஔஷதம் எனப்படும் முறைகளான எண்கணிதம், வாஸ்த்து சாஸ்த்திரம், மந்திர பிரயோகம், ஜெர்மன் ஹோமியோ, லண்டன் மலர் மருத்துவம், இத்தாலிய எலக்ட்ரோ ஹோமியோ இவற்றில் சிறப்பு அனுபவம் பெற்ற **Dr.M.G. அண்ணாதுரை** அவர்களின் முன் அனுமதி பெற்று சந்திக்கவும். மேலும் விவரமறிய சுயவிலாசமிட்ட ஒரு ரூபாய்த் தபால் தலை ஒட்டிய கவர் அனுப்பவும்.

பல்வேறு மாற்று மருத்துவத்திற்கு
**Dr.M.G. அண்ணாதுரை**
E.H.M.P.,D.B.R., D.R.T.,N.D., D.MAG.,D.ACU., D.E.H.M.

காந்த சிகிச்சைக்கு
**Dr.A. ஆனந்தன்**
B.SC.,D.MAG.,R.M.P.,D.ACU

விளக்கவுரை, விண்ணப்ப மனு பெற ரூ.5/–க்கான தபால் தலைகளை அனுப்புக.

## காந்த சிகிச்சை ஆராய்ச்சி நிறுவனம்

பிளாட் எண் 60, ஜீவன்லால் நகர், (என்பீல்டு எதிரில்)
405, திருவொற்றியூர் நெடுஞ்சாலை, திருவொற்றியூர், சென்னை – 600 019.
போன் – 545207, 545235

பல்வேறு மாற்று மருத்துவ சிகிச்சைக்கு தபால் மூலம் பயிற்சி அளிக்கப்படும்.

கிரைண்டரைக் கழுவி ஊறிய முழு உளுந்தை களைந்து போட்டு ஓட விட்டேன். தண்ணீர் தெளித்தால் மாவு நீர்த்து விடும் என்று தண்ணீரே காட்டாமல் கெட்டியாக அரைத்தேன். கிரைண்டராலேயே சுற்ற முடியாத போது கொஞ்சமாகத் தண்ணீர் தெளித்து அரைத்தேன். அதற்குள் விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்த நண்பரின் மனைவியும் வந்து விட மாவை வழித்து தேவையான பொருள்களைப் போட்டு எண்ணெய் காய்ந்ததும் நன்றாக பெரிய சைசில் உருட்டி, உருட்டி எண்ணெயில் போட்டார்.

கொஞ்ச நேரம் ஆயிற்று. சிவந்து வரத் தொடங்கியதும் திருப்பி விட்டார். 'டமால்' என்று ஒரு சத்தம். ஹாலில் வந்து விழுந்தது ஒரு போண்டா. அடுத்து ஒன்று சாமி அலமாரித் தட்டு, எங்கள் மேல் என்று வரிசையாக டென்னிஸ் பந்து போல பறக்க ஆரம்பித்தது. எங்கள் இருவரின் மேலும் எண்ணெய் தெறித்து ஓரே எரிச்சல், என்ன நடந்தது என்று யாருக்கும் புரியவில்லை.

ஹாலில் உட்கார்ந்திருந்த என் கணவரும், நண்பரும் ஓடி வந்து விடுங்கள் போண்டாவும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம் எனக்கூற, அடுப்பைக் குனிந்து கொண்டே போய் நிறுத்தி விட்டு ஓடி வந்து விட்டோம். அடுத்த நிமிடம் டமால், டமால் எனப் பறந்தன போண்டாக்கள். நாம்தான் எண்ணெயில் போடவில்லையே, எப்படி வெடிக்க முடியும் எனத் தட்டைப் பார்த்தால் தட்டு காலி. எடுத்து வைத்த போண்டாக்கள் எல்லாம் ஐந்து நிமிடம் கழித்து வெடித்து உள்ளிருந்த மாவு உருண்டையாக வெளியே வந்து விழுந்தது. அந்த மாவைப் பார்த்ததும் பயங்கரமாக சிரிப்பு வந்து விட்டது எங்களுக்கு. எல்லோரும் சிரித்து முடித்து விட்டு காரணத்தை ஆராய்ந்தோம். 'நல்ல உளுந்து இல்லை. அப்பவே என்னவோ வாசம் வந்தது' என்றார் நண்பரின் மனைவி.

அதற்குள் விருந்தினர்கள் வந்துவிட, அதில் ஒரு பெண்மணி, வெடித்து விழுந்த போண்டா மாவை அழுத்திப் பார்த்துவிட்டு 'பூக்க, பூக்க' அரைக்க வேண்டும் என்றார். தண்ணீர் தெளிக்காமல் எப்படி 'பூக்க, பூக்க' அரைப்பது என எனக்கு ஓரே குழப்பம். எண்ணெய் சரியில்லாவிட்டால் கூட இப்படி ஆகும் என்றேன் நான். (ஏனெனில் கிரைண்டரில் அரைத்தது நான், பழி என் மேல் வரக்கூடாது என்று)

கடைசியில் வெடி போண்டா மாவில் வெங்காயம், பச்சை மிளகாய் போட்டு வடையாக செய்து விருந்தை சமாளித்தோம். வடையைக் கடித்து இழுத்துதான் சாப்பிட முடிந்தது. இன்னும் ஒரு வடை என்று அருகில் போனாலே, வேண்டாம், வேண்டாம் என்று நடுங்கினார்கள். இப்பவும் எங்கே போண்டாவைப் பார்த்தாலும் எங்கள் வெடி போண்டா நினைவுதான். என் கணவர் வேறு 'வெடி போண்டா போடவில்லையா' எனக் கிண்டல் செய்கிறார்.

கடைசியில் ஒன்று, ஏன் வெடித்தது என்று இன்னமும் எனக்குக் காரணம் தெரியவில்லை.

*எம். குமுதம், பாண்டிச்சேரி-4.*

## 'பாப்' தலை ஆக்கிய கிரைண்டர்!

கடந்த ஆண்டு என் சகோதரிக்குத் திருமணம் ஏற்பாடு செய்யப்பட்டது. என் அக்கா ரொம்ப அழகாக இருப்பாள். மிக நீளமான சுருள் முடி. திருமணத்திற்கு ஒரு வாரம் முன்பு வீடே உறவினர்களால் கலகலத்துக் கொண்டிருந்தது. மணமகன் வீட்டில் ரொம்ப ஆசாரமான குடும்பம். ஆதலால் வேலைக்கு (சமையல்) ஆள் வைக்காமல் உறவுக்காரர்களே செய்தோம்.



அப்போது கிரைண்டரில் மாவு ஓடிக் கொண்டிருந்தது. அனைவருக்கும் வேலை ஓயாமல் இருந்து கொண்டே இருந்தது. ஆகையால் என் தாய் என் அக்காவை கொஞ்சம் மாவை பார்த்துக் கொள் சுசிலா என்று கூறி விட்டு வேறு வேலை பார்த்தார். அக்கா அப்போது தலை குளித்திருந்ததால் முடியை

விரித்து போட்டபடி கிரைண்டரை (மாவை) கவனித்தாள். யாரும் எதிர் பார்க்காதபடி திடீ ரென்று அக்காவின் கூந்தல் குழவியில் சிக்கி விட்டது. கிரைண்டர் ஓடிக் கொண்டே இருந்ததால் அவளால் அணைக்கவும் முடிய வில்லை. மற்றவர்கள் என்னவென்று உணர்ந்து கொள்ளும் முன்பே முடி அப்படியே அடித் தலை வரை சிக்கி விட்டது. எல்லாரும் பரபரத்து கிரைண்டரை நிறுத்தி விட்டனர். அவளது அலறல் சத்தம் வீட்டையே கலங்க அடித்தது.

அடித்தலை மயிர் வரை சிக்கி யிருந்த தால் மெதுவாக எல்லோருமாக தூக்கி னோம். அக்காவிற்கு நினைவே போய் விட்டது. பலத்த காயம், மூளை யில் அதிர்ச்சி ஏற்படுத்தி விட்டது. கல்யாண வீடே துக்க வீடாக போய் விட்டது. எல்லாரும் கலங்கிப் போனோம்.

சம்பந்தி வீட்டில் கல்யாணத்திற்கு முன்பே என்ன அபசகுனம் என்று. இந்தக் கல்யாணம் வேண்டாம், என்று அவர்கள் வேறு, புது இடியை இ... கினர். அன்றுதான் என் அத்திம் பே... அதாவது மணமகன் ஸ்டேட்ஸிலிருந்து கல்யாணத்திற்காக வந்தார். விஷயம் கேள்விப்பட்டவுடன் அதிர்ச்சியைக் காட்டிக் கொள்ளாமல்,

"கவலைப்பட வேண்டாம், உடல்நிலை சரி யானதும் அடுத்து வரும் முகூர்த்தங்களில் ஒன் றில் கல்யாணம் நடக்கும்," என்று கூறினார்.

எங்களுக்குப் போன உயிர் திரும்பி வந்தது. அக்காவின் கல்யாணம் நான்கு மாதம் தள்ளி நடந்தது. இப்போது அவர்கள் அமெரிக்கா வில், கலிபோர்னியாவில் செட்டிலாகி விட் டார்கள். அவளுக்கு முடி அதன் பிறகு வளர வில்லை. பாப் தலையுடன்தான் இருக் கிறாள்.

*எஸ். மீனாகுமாரி,*
*தஞ்சாவூர் – 7.*

## சமையலறையைச் சுற்றி வரும்!

எங்கள் வீட்டில் ஒரு கிரைண்டர் உண்டு. மிகவும் வினோத மானது. ஸ்விட்ச் போட்டு 2 நிமிடம் கழித்துத் தான் இயங்க ஆரம்பிக்கும். அது உருள ஆரம்பிக்கும் சத்தம், ரயில் நிலை யத்தில் நீராவி எஞ்சின் கிளம்பு வதை நினை வூட்டும். நேரம் ஆக ஆக, இருக்கும் இடத்தை விட்டு மெதுவாக நகர ஆரம்பிக்கும். தோசைக்கு அரைத்து முடிப்பதற்குள், அந்த அடுக்களையையே ஒரு குட்டி வலம் வந்து விடும். தினமும் அதோடு ஓடியாடி வேலை செய்வோம். என் மாமியாருக்கு இதன் மீது கொள்ளைப் பிரியம். அது செய்யும் இத்தனை ஆர்ப்பாட்டங்களையும் மீறி அதன் மீது ஒரு பாசத்தையே வைத்துக் கொண் டிருந்தார்.

அன்று கோகுலாஷ்டமி. மாலையில் கண்ணனுக்குப் படைப்பதற்காக வடை, முறுக்கு, அதிரசம், சீடை என பல்வேறு பட்சணங்கள் தயாராகிக் கொண்டிருந்தன. என் மாமியாருக்கு உதவியாக நானும்



சமையலறையில் இயங்கிக் கொண்டிருந்தேன். அரைப்பதும் கரைப்பதும், முறுக்குப் பிழிவது மாக வேலை மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது.

அப்போது என் கடைசி மைத்துனன் என் மாமியாரிடம் வந்து "கோபி வந்திருக்கார்" என்று சொல்லி விட்டு ஓடி விட்டான். கோபி எங்கள் குடும்ப நண்பர். ஹாலில் என் கண வரோடு பேசிக் கொண்டிருந்தார். கிரைண்டர் சத்தத்தில் 'கோபி' என்பதைத் தவறாகக் கேட்ட என் மாமியார்,

"வந்துட்டானோல்லியோ ஒரு நாளு கிழமை கிடையாது. நேரம் காலம் கிடையாது. அமாவாசை தர்ப்பணம் மொதக் கொண்டு திவசம் வரைக்கும் கரெக்டா, டாண்ணு வந்து நின்னுடுவான்" என்று ஏதேதோ கூறிக் கொண்டே இருந்தார்.

ஹாலில் பேசிக் கொண்டிருந்த என் கண வரும் அவர் நண்பரும் திடுக்கிட்டுப் போனார் கள். என் கணவர் அடுக்களைக்கு வந்து, "என்னம்மா பேசிக் கொண்டே இருக்கிறாய்? யார் வந்தது என்று தெரியுமா?" என்று கேட் டார் என் மாமியார். "டோபிதானே" என்றார். என் கணவர் "இல்லை வந்திருப்பது என் ஃபிரண்ட் கோபி" என்றதும் அசடு வழிய மன் னிப்புக் கேட்டார்.

அதற்குப் பிறகு புது கிரைண்டர் ஒன்றும் வாங்கி விட்டோம். பழைய கிரைண்டரை

# குழந்தை இல்லையா?

## கருப்பை/ மார்பக கட்டியா?

## மாதவிடாய் கோளாறா?

### வரவும் - நிறுத்தவும் தொடர்ந்து மாத்திரைகளா?

திருமணம் ஆகி குழந்தை இல்லாத பல பெண்களும், 13-14 வயதில் பருவம் அடைந்ததிலிருந்தே பல இளம்பெண்களும் மாதவிடாய் வரவும், நிறுத்தவும் கூட தொடர்ந்து 5 நாள்/21 நாள் ஹார்மோன் மாத்திரைகளை சாப்பிட்டுக் கொண்டே வருகிறார்கள். இதன் விளைவுகளை அறியாமலும் திருமணம் ஆனால் சரியாகிவிடும்- குழந்தை பிறந்தால் சரியாகிவிடும் என்று கூறுவதை நம்பியும் பின்னர் வாழ்க்கையே வெறுமையாய் போனவர்கள் பலர்! இன்னும் கருக்கோளக் கட்டிகள் (Ovarian Cysts- PCOD), கருக்குழாயில் நீரடைப்பு சதையடைப்பு (F. Tube Block), முட்டையே (Follicle) தானாக உருவாகாத பெருஞ்சிக்கல், கருப்பை பலவீனம், வீக்கம், தொடர்ந்து கருச்சிதைவு (Missed Abortion), கருப்பை புண்கள்/ வெள்ளைபடுதல் கடுமையான வயிற்று வலி (Endometriosis, Cervicitis, Hyperplacia) மற்றும் கட்டிகளான, கறுப்பான தாறுமாறான ரத்தப் போக்கு போன்ற பல காரணங்கள் குழந்தைபேறுக்கு தடையாக உள்ளன.

இம்மாதிரியான குறைபாடுகள் நோய்களுக்கு வேறு மருத்துவமே இல்லை என்று தவறாக எண்ணி ஒரேவிதமான ஹார்மோன் மருந்துகளையே பெரும்பாலும் வருடக் கணக்கில் சாப்பிட்டு வருகிறார்கள். சிலருக்கு இப்படியே கருத்தரிக்கும் இளம் வயது வீணாகி விடுகிறது.

**உயிரணு இல்லாத ஆண்கள்:** (Azoospermia) ஆண்களின் குறைபாடுகளில் மிகவும் சிக்கலானதும் பிறரிடம் உயிரணு பெறுதல் அல்லது தத்து எடுத்தல் இரண்டு மட்டுமே தீர்வு என்று கருதப்படும் இந்த கோளாறுக்கு வெற்றிகரமான சிகிச்சை எம்மிடம் உண்டு. 5-6 மில்லியன் உள்ளவர்கள் பலர் பல மாத்திரை, ஊசி மருந்து எடுத்தும் தற்காலிகமாக அதிகமாகி 3 மாதம் கழித்து சோதித்தால் முன் உள்ளதும் இல்லாமல் போனவர்களும் பலர் உண்டு.

இக்குறைகளை எமது 180 ஆண்டு பரம்பரை அனுபவம் பெற்ற குரு மருந்துகளால் தீர்த்து குழந்தைபேறு அடைய உதவுகிறோம்.

**கருப்பை கட்டி:** Ms. பிரபாதேவி (வயது 34) வங்கி ஊழியர், மகாலிங்கபுரம், சென்னை. இவருக்கு கருப்பையினுள் 3.5 செ.மீ. அளவு கட்டி (Fibroid) இருந்தது. இதனால் திருமணம் தடைப்பட்டது. எமது குரு மருந்தின் பலனால் இக்கட்டி முழுமையாக கரைந்துவிட்டது.

# தீராத இடுப்பு வலி- கழுத்து - தோள் - மூட்டு வலியா?

## இனியும் துன்பப்படவேண்டாம் !



Mrs.R. சீதா (வயது 57) 120-C, ராஜ மன்னார் சாலை, கே.கே. நகர், சென்னை-78. இவர் இடுப்பு வலி மற்றும் கால்களை நீட்டவும் மடக்கவும் (Osteo Arthritis) முடியாமல் இரண்டு ஆண்டுகளாக மிகவும் துன்பப்பட்டார். எமது சிகிச்சைக்குப் பின் இப்போது பூரண குணம். ஜப்பானுக்கு சுற்றுலா சென்ற இவர் பல மைல்கள் நடந்தும் எந்த வலியும் இல்லை என்கிறார். இதுபோல கைவிடப்பட்ட பலர் குணம் பெற்று வருகிறார்கள். கழுத்து எலும்பில் C4 to C7 மற்றும் Lumbar Vertebrae-வின் குறிப்பாக இணைப்பு எலும்புகள் தேய்வு (Degenerative Changes) கழுத்து வலி (Cervical Spondylitis), இடுப்பு முறிவதுபோல் வலி (Lumbago), இடுப்பு முதல் தொடை, கால் நரம்புகள் இழுப்பது, குடைவது போன்ற வலி (Sciatica), மூட்டுகளில் வீக்கம், வலி, (Synovitis, Arthritis) கால்களில் மதமதப்பு, Toilet-ல் உட்கார்ந்து எழுவதில் மிகுந்த கஷ்டம், கைகளை உயர்த்த, கால்களை நீட்டி மடக்க முடியாமை, பாதங்களில் வீக்கம், இளம் வயதிலேயே கால்கள் செயலற்று போவது போன்ற நரம்பியல் வாத நோய்களுக்கு அபூர்வமான சித்தர் குருமருந்து சிகிச்சை அளிக்கிறோம். இவைகளுக்கெல்லாம் வெறும் வலி நிவாரண மாத்திரைகளை மட்டும் சாப்பிட்டுக் கொண்டு காலத்தை கடத்துவது தவறு. Physiotherapy / Plastry / Oil Massage சிகிச்சைகளில் ஓரளவே குணம் பெற்றவர்களும் எமது குருமருந்து சிகிச்சையில் 99% பேர் முழுமையான குணம் பெற முடியும்! **எமது சிகிச்சையில் ஆஸ்துமா தீராத நோய் அல்ல.** நீரடைப்பு, கல்லடைப்பு, அடிக்கடி சிறுநீர் கழிதல், பிடிவாதமான பல தோல் நோய்களுக்கும் சிறப்பு மருத்துவம்.

## பெண்கள் மார்பக கட்டி

பெண்கள் மார்பகத்தில் குத்தல், வலியுடனோ வலி இல்லாமலோ ஒருவித கட்டி (Fibro Adenoma) வருவதுண்டு. இதற்கு நவீன மருத்துவத்தில் இதுவரை மருந்து இல்லை. பலமுறை ஆபரேஷன் செய்த பின்பும் கட்டி வளர்ந்ததால் பலர் எம்மிடம் சிகிச்சை பெறுகிறார்கள். பலர் ஆண்டுக் கணக்கில் வேறு மருந்து சாப்பிட்டும் குணமில்லை என்று வருகிறார்கள். எமது 3 மாத குரு மருந்து சிகிச்சையில் இது குணம் தெரிவதை காணலாம். பயத்துடன் நாட்களை கடத்த வேண்டாம்.

## கருப்பை புற்று

Mrs. சீரங்கம்மாள் (வயது 56) காமனாம்பட்டி, திருச்சி-13. இவருக்கு கருப்பையில் புற்று நோய் ஏற்பட்டு இரத்தம், சீழ் ஒழுக்குடன் மிகவும் துன்பப்பட்டு வந்தார். எமது குரு மருந்து சிகிச்சையில் குணமடைந்து 4 மாதமாக நலமுடன் இருக்கிறார். எந்த வயதிலும் நீடித்த வெள்ளைபோக்கு, கருப்பை புண்கள் (Cervical Erosion, Cervicities) பலருக்கு புற்று நோயாக மாறி விடுகிறது. இதில் பெண்கள் அலட்சியம் கூடாது. கருப்பை மார்பக புற்று, மூளை கட்டிகள் இரத்தப் புற்று (Leukemia), தொண்டை, கன்னம், கல்லீரல், இரைப்பை உள்பட எல்லா புற்று நோய்களுக்கும் சிகிச்சை அளிக்கிறோம். 20-40 நாளில் முன்னேற்றம் தெரியும்!




**Dr. S. JEYARAM,**

M.D. (A.M.), RMP, M.A., M.A.,

நவோதயா சித்தர் மருத்துவமனை

[illegible], ஆற்காடு ரோடு (மாடியில்)

கோடம்பாக்கம், சென்னை - 600 024.

(லிபர்டி பஸ் ஸ்டாப் / சேகர் எம்போரியம் அருகில்)

போன் : 044-4810752 / 044-4962258 (வீடு)


**பெண் மருத்துவர் உண்டு. முன்பதிவு பெற்று வரவும்.**

ஆலோசனை நேரம் : காலை 10 முதல் 2 மணி வரை, மாலை 4 முதல் 8.30 மணி வரை, ஞாயிறு காலை மட்டும்

ஜூன் 17-ந் தேதி, டாக்டரை திருச்சி-1, ஜங்ஷன் ரோடு, திருவள்ளுவர் பஸ் நிலையம் அருகில், ஹோட்டல் அருந்ததியில் சந்திக்கலாம். போன்: 460501.

ஜூன் 18-ந் தேதி, கோவை, R.S.புரம், 5, பெரியசாமி ரோடு கிழக்கு, பிருந்தாவன் ஹோட்டலில் டாக்டரை சந்திக்க முன் பதிவுக்கு அலமேலு ... போன்: 452235 (P.P.) (10 a.m. to 4 p.m.)

நினைவுச் சின்னம் போல் வைத்திருக்கிறோம். இன்றைக்கும் அதைப் பார்க்கும்போதெல்லாம் கோபியை டோபியாக்கிய படலம் நினைவு வந்து சிரிப்பை மூட்டும்.

*– பத்மா மகாதேவன், திருச்சி - 5.*

## ஒரே மாதிரி முடிவெடுத்தோம்!

ஒரு கிரைண்டர் வாங்க வேண்டும் என்ற ஆவல் அந்த ஆண்டு வாய்ப்பளித்தது! தீபாவளிக்குப் பதினைந்து நாட்கள் முன்னதாக, தனியே நான் சேமித்து வைத்திருந்த ரூபாயு



டன் என் பிறந்தகம் சென்றேன். போதாத பணத்திற்கு என் தந்தையிடம் வாங்கி அங்கேயே ஒரு கிரைண்டரை வாங்கிக் கொண்டு ஊர் திரும்பினேன். மாற்றுச் சாவியால் வீட்டைத் திறந்து நடு வீட்டில் கிரைண்டரை வைத்து அதை ஒரு துணியால் மூடினேன். என் கணவர் வந்ததும் இன்ப அதிர்ச்சி அடைய வேண்டுமே! சமையல் அறைக்குள் சென்றேன். அங்கு ஒரு புதிய கிரைண்டர் உட்கார்ந்திருந்தது! என்னை இன்ப அதிர்ச்சியில் ஆழ்த்த என் கணவர் நான் இல்லாதபோது வாங்கி வைத்திருக்கிறார்!

ஒரு கிரைண்டரை யாருக்காவது விற்று விடலாம் என்று முடிவு செய்தோம். பத்து நாட்களாக அக்கம் பக்கம், உறவினர், தெரிந்தவர்கள் என்று பலரிடம் கேட்டுக் கடைசியில் ஒருவருக்கு, வாங்கிய விலையில் இருநூறு ரூபாய் குறைத்தே விற்று விட்டேன். வாங்கியவரும் கிரைண்டரை எடுத்துச் சென்று விட்டார்... ஒரு வேடிக்கை பாருங்கள்... கணவர் அலுவலகத்தில் இருந்து வந்தவுடன் கிரைண்டர் விற்று விட்டது பற்றிச் சொல்லும் ஆவலுடன் இருக்கும்போது ஆட்டோ ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து என் கணவரும் அவரது அலுவலக அதிகாரியும் இறங்கினர்! அந்த அதிகாரியை ஹாலில் உட்கார வைத்து விட்டு என்னைத் தனியே கூட்டிப் போய், 'நான் வாங்கிய கிரைண்டரை இவருக்கு விற்று விட்டேன்! வாங்கிய விலையில் இருந்து முன்னூறு ரூபாய் குறைவாகக் கொடுக்க ஒப்புக் கொண்டு ரூபாய் வாங்கி விட்டேன்... கிரைண்டரை எடுத்துச் செல்லத்தான் வந்திருக்கிறார்...' என்றார் என் கணவர்! கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வேண்டும் என்று மற்றொரு கிரைண்டரும் கைவிட்டுப் போனது! தீபாவளியன்று மூன்றாவதாக ஒரு கிரைண்டரை இருவரும் சேர்ந்து போய் வாங்கி வந்தோம்!

*– சுசீலா பொன்னுசாமி, உடுமலை.*

## நாங்கதான் மாவாட்டணுமா?

எனக்குத் திருமணமான புதிதில் நானும் என்னுடைய கணவரும் மதுரையில் தனிக்குடித்தனம் சென்றோம். திடீரென்று ஒருநாள் எங்களைப் பார்ப்பதற்கு எனது அக்காவும், மச்சானும் வந்திருந்தார்கள். அன்றுதான் நாங்கள் ஆர்டர் கொடுத்திருந்த கிரைண்டரும் வந்து இறங்கியது. நானும் உடனே மறுநாள் டிபன் செய்ய இட்டிலிக்கு மாவு ஊற வைத்து விட்டேன்.

மாலையில் ஊறவைத்த நினைவு இல்லாமல் மீனாட்சி அம்மன் கோயில், ராஜாஜி பார்க் என வெளியே சுற்றிவிட்டு இரவு பத்து மணிக்கு மேல் வீடு திரும்பினோம். வீட்டில் வந்து பார்த்தவுடன் அரிசியும் உளுந்தும் முழித்துக் கொண்டிருந்தன. 'சரி கிரைண்



டரில் போட்டு விடு' என்றாள் என் அக்கா 'முதலில் கிரைண்டர் கல்லில் உள்ள தூசி போக பருத்திக் கொட்டை அல்லது

மங்கையர் மலர் அறிவித்த போட்டியொன்றில் 'தாலி' எனும் தலைப்பில் பரிசு பெற்ற அதிர்ஷ்ட சாலி நான். புவனேஸ்வரி அம்மன் கோயிலைச் சுற்றி வரும்போது என் கழுத்திலிருந்த தாலி என்னையறியாமலே கீழே விழுந்து பிறகு அம்மனின் அருளால் மீண்டும் கிடைத்தது. அதனால் நான் அன்றிலிருந்து அந்த புவனேஸ்வரி அம்மனுக்கு அடிமையாகி விட்டேன் என்று கூடச் சொல்லலாம். இப்படி எத்தனையோ பக்தர்களுக்கு அருள்பாலித்துக் கொண்டிருக்கும் அந்த அம்மன் சென்னை கே.கே. நகர், பாரதிதாசன் குடியிருப்பில் குடி கொண்டிருக்கிறாள். அவளுடைய கோயில் மிகச் சிறப்பாக பராமரிக்கப்பட்டு வளர்ந்து வருகிறது. வருகிற ஜூன் மாதம் 29-ந் தேதி ஞாயிற்றுக் கிழமை காலை ஆறு மணிக்குக் கும்பாபிஷேகமும் மிகச் சிறப்பாக நடக்க இருக்கிறது. என் மகிழ்ச்சியை நான் உங்களுடன் பகிர்ந்து கொள்ளாமல் வேறு யாரிடம் சொல்வேன்?

- மனோரஞ்சிதம், சென்னை - 78.



தேங்காய் போட்டு அரைக்கணும். அதுவும், ரெண்டு மூணு தடவை போட்டால் தான் தூசி இருக்காது' என்றார். இரவு 11 மணிக்கு பருத்திக் கொட்டைக்கு எங்கே செல்வது? முழித்துக் கொண்டு நின்றேன்.

நாங்கள் இருந்த வீட்டின் புழக்கடையில் ஆட்டு உரல் உண்டு. ஆனால் எங்கள் ஏரியாவில் மாலை 5 மணிக்கு மேல் ஜன்னலைத் திறந்தாலே கொசுக்கள் பிடுங்கித் தின்று விடும். இருந்தாலும் எங்கள் மச்சான் 'நீ களைந்து எடுத்து வா' என்று கூறிவிட்டு பின்பக்கம் சென்றார்.

நான், என் கணவர், என் அக்கா, மச்சான் நால்வரும் கதையடித்துக் கொண்டே ஒருவர் ஆட்ட, மற்றொருவர் தள்ளி விட, ஒருவர் கொசுக்களை விரட்ட என நடுநிசி என்றும் பாராமல் உரக்க பேசிச் சிரித்தபடி கழித்த அந்த ஒரு மணி நேரம் என் வாழ்விலே மறக்க முடியாதது.

"இப்படி வீட்டிற்கு வந்தவர்களை உனது பொறுப்பின்மையால் மாவாட்ட வைத்து விட்டாயே" என்று என் கணவர் வருத்தப்பட்டாலும் இன்றும் என் அக்காவும் மச்சானும் எங்கள் வீட்டிற்கு வரும்போதெல்லாம் "இன்னைக்கும் நாங்கதான் மாவாட்டணுமா?" என்று கேட்டு கிண்டல் செய்வார்கள்.

- டி. ரத்தினாபதி,
தூத்துக்குடி - 3.



ஆடி மாதம் வரலக்ஷ்மி நோன்பு வருகிறது. அதற்கு வாழைக்கன்று கட்டுவோம். தொட்டி போல் பிளாஸ்டிக் டப்பாக்கள் அல்லது ஹார்லிக்ஸ் பாட்டில் இரண்டு (ஒரே மாதிரி) எடுத்து அதில் மண் நிரப்பி அதில் கன்றுகளை வைக்கலாம். நன்கு ஈரப்பசையுடன் மண் இருக்கலாம். தினம் தண்ணீர் தெளித்து வைத்திருந்தால் 3 (அ) 4 தினங்கள் வரை இலை வாடாமல் புதியதாக பறித்தது போல் இருக்கும். அதிலேயே குச்சிகள் இரண்டு நட்டு மாவிலை தோரணம் கட்டலாம். குச்சிக்குக் காவிப்பட்டை சுண்ணாம்புப் பட்டை அடித்து விட்டால் மங்களகரமாக இருக்கும்.

- கௌரி

• டாக்டர் ஜெயராம்



வாசகிகளிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றுள்ள டாக்டர். எஸ். ஜெயராம் எழுதும் 'வருங்காலப் பெண்களுக்கு...' கட்டுரைத் தொடரில் மிகச் சரியாக இந்த இதழ் 'வருங்கால மணப்பெண்களுக்கு...' என எழுதப்பட்டுள்ளது. டாக்டர் இதனை திருமண ஸ்பெஷலுக்காக எழுதவில்லை. 'கருப்பை மலர ஆரம்பிக்கும் ஏழு வயது முதல் படிப்படியாக ஒரு பெண் ஆரோக்கியமாக வளர்க்கப்படுவாளேயானால், இன்றைய பெண்கள் அனுபவிக்கும் பல்வேறு உடல்ரீதியான துன்பங்கள் இருக்காது' என அவர் எழுதி வரும் கட்டுரைத் தொடரில் தானாக இது மணப்பருவத்துக்குரிய பெண்ணின் உடல்



# வருங்கால மணப் பெண்களுக்கு

ஆரோக்கியத்தைக் கூறும் பகுதியாக அமைந்து விட்டது. எனவேதான் திருமண ஸ்பெஷலுக்காகவே எழுதியது போலானது. பல்லாண்டுகளாக சித்த மருத்துவத் துறையில் ஈடுபட்டிருப்பவரும், பெண்களின் கருப்பை கோளாறு போன்ற நோய்களின் துறையில் ஆராய்ச்சி மையமே அமைத்து மருத்துவம் செய்து வருபவருமான டாக்டர்.எஸ். ஜெயராம் கூறுகிறார்....

திருமணம் என்பது ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் மிக முக்கியமான நிகழ்ச்சி. பல காரணங்களால் இது புனிதமானதாகக் கருதி மகிழ்ச்சியான விழாவாக பல சடங்குகளோடு எல்லா சமூகத்தினராலும் கொண்டாடப்படுகிறது. திருமணம்



**ஊரிலிருந்து வந்த மாமியாரின் சகோதரி பல்லாங்குழி ஆட முட்டை (Egg boxs) பெட்டியில் உள்ள முட்டைகளை எடுத்துவிட்டு புளியங் கொட்டைகளை குழிகளில் போட்டு ஆட ஆரம் பித்து விட்டார். பழைய ஆட்டம் புதிய முறையில். ஆச்சரியப்பட்டுப் போனேன்.**

**– த. சாந்தி**

---

ஆகும் வரை அரைமனிதனாக இருந்து அதன் பின்னரே முழு மனிதன் ஆகிறான் என்று ஒரு பழமொழி உண்டு. அனுபவத்தில்தான் திருமணம் ஒரு ஆண் பெண்ணை எப்படி மாற்றி விடுகிறது என்பது விளங்கும்!

ஆணுக்கும் பெண்ணுக்கும் சுயநலம் பிடிவாதம் 'தான்' என்கிற அகங்காரம் போன்ற பல குணங்கள் மாறி தம் வாழ்க்கைத் துணைக்காகவும் சேர்த்து சிந்திக்கவும் செயல் படுவதும்தான் முதல் மாற்றம்! பல புதிய உறவுகளையும் ஏற்படுத்திக் கொண்டு பல புதிய அனுபவங்களை கற்றுக் கொள்கிற காலமே திருமண வாழ்க்கை! திருமணத்துக்கு முன்பு வரை அறிமுகமே இல்லாத முற்றிலும் புதிய ஒரு ஆண் மகனுடன் இணங்கி வாழ் நாள் முழுவதும் சுகதுக்கங்களையும் பகிர்ந்து கொண்டு வாழ சங்கல்பம் எடுத்து ஒரு பெண் தயாராகி விடுகிறாள்! பெற்றோருக்கு மட்டுமே கட்டுப்பட்டு மரியாதை காட்டி வந்த ஆண் மகன் வாழ்க்கைத் துணையாக வந்தவளுக்கும் சம உரிமை கொடுத்து அவளுக்காக எதையும் செய்யவும் தன்னை மாற்றிக் கொள்ளவும் கூட முன்வருகிறான். இது ஒரு ஆச்சரியமான விஷயம்தான். ஆனால் இதுதான் இயற்கை!

"முரடனாகவும் அவசரக்காரனாகவும் இருந்த என்னை பக்குவப்படுத்தி ஒரு மனித னாக ஆக்கியவள் என் மனைவி" என்று தமிழ்த் தென்றல் திரு.வி.க. கூறியுள்ளார். "பெண்ணின் பெருமை" என்று ஒரு நூலே எழுதியவர் இவர்!

வெற்றிகரமான திருமண வாழ்க்கைக்கு மனஒற்றுமை உடல் ஐக்கியம் இரண்டுமே சம அளவில் இருக்க வேண்டும். பல குடும்பங் களில் மன ஒற்றுமை சரியாக உருவாகாததால் மெல்ல மெல்ல உடல் மோகம் மறைந்தவுடன் மனமும் சலித்து வாழ்க்கையில் முறிவு பிரிவு ஏற்படுகிறது. இன்னும் பல குடும்பங்களில் மனவேற்றுமைகள் பலவற்றை அவ்வப்போது போக்கும் ஒரு "அருமருந்தாக" உடல் ஐக்கியம் இருந்து வருவதையும் பார்க்கிறோம். உடல் ஐக்கியமின்றி திருமணமே அர்த்தமற்றது.

பல ஆண்டுகள் வளர்த்த ஆசைகள், கற்ப னைகள் காரணமாக திருமணம் என்பதை இரண்டு உடல்கள் இணையும் ஒரு இன்ப நிகழ்ச்சியாக நினைப்பது சகஜம்தான்! ஆனால் இதுவும் முழு உண்மை அல்ல! குடும்பத்திற்கும் சமூகத்திற்கும் பயனுள்ள சிறந்த சந்ததியை உரு வாக்கிடும் முக்கிய கடமையும் இதில் உண்டு. இதனால் மன ஆரோக்கியம் மற்றும் உடல் ஆரோக்கியத்தை நன்கு பேணுவது மிகவும் அவசியம்!

மன ஆரோக்கியம் என்றால் கஷ்டங்கள் பிரச்னைகளின் போதும் கூட விரிசல் விடாத நல்ல இணக்கத்தை இருவருமே வளர்த்துக் கொள்வது ஆகும்! இது இல்லாவிடில் நிம்மதி என்பது அறவே போய்விடும்! உத்தியோகம் தொழில் போன்ற வெளி உலக சமாச் சாரங்களும் கெட்டுப் போய்விடும்! இதனால் தான் இணக்கமற்ற தம்பதிகள் "சேர்ந்து" வாழ்வது என்பது "ஒரு குடத்தினுள் பாம் போடு உடனுறைவது போன்றது" என்றார் திருவள்ளுவர்.

இரவு 10 மணிக்கு மேல் விளக்கை எரிய விட்டு, புத்தகம் படித்துக் கொண்டிருக்கிறாள் மனைவி. விளக்கு வெளிச்சம் கண்ணை உறுத்த உறக்கம் வரவில்லை கணவனுக்கு. விளக்கை அணைக்கும்படி கத்துகிறான். அவள் கேட்பதாக இல்லை. 'புத்தகம் படிக்கா மல் எனக்குத் தூக்கம் வராது' என்கிறாள் அவள். இப்படி வாக்குவாதம் பல நாட்கள் நடக்கிறது. இது முற்றும்போது எங்கே போய் முடியும்? இவர்கள் படித்தவர்கள் என்று பெருமை பாராட்டும் அறிவு ஜீவிகள்! ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்காமல் இவர்களைத் தடுப்பது எது? அதுதான் வரட் டுப் பிடிவாதம் – "ஈகோ" என்கிற அகங்காரம்! மேலே சொன்ன பிரச்சினை தீர சுலபமான வழி இல்லாமல் இல்லை. மனைவி தனக்கு மட்டுமே வெளிச்சம் தருமாறு மேசை விளக்கு ஒன்றை வைத்துக் கொண்டாலே போதும். இரு வர் காரியமும் நிறைவேறி விடுகிறது. சுமுக மான மாற்றுவழி என்ன? என்று சிந்திக்கவும் மறுக்கும் முரட்டுப்பிடிவாதமே பல குடும் பங்களைச் சீரழித்திருக்கிறது.

எனது 19 ஆண்டு மருத்துவ சேவையில் இம்மாதிரி சில பிரச்னைகளுக்கும் கூட பஞ் சாயத்து செய்ய வேண்டிய சுவையான அனு பவம் ஏற்பட்டு உள்ளது! மகாபாரதம், ராமா யணம், கந்தபுராணம் போன்ற காவியங்களில் பகவானின் அவதார மகிமையை மட்டுமே எண்ணி அனுபவித்து மகிழும் நாம் அதில்

அழிந்து போன கௌரவர்கள், இராவணன், சூரன் இவர்களின் வறட்டுக் கௌரவம் அகங்காரத்தினால்தான் அதோகதி அடைந்தார்கள் என்ற உண்மையையும் அவசியம் நினைவில் கொள்ள வேண்டும். ஏனெனில் அது நம் வாழ்க்கைக்குப் பாடமாகும்!

குறுகிய எண்ணங்கள் வீம்புகளை விட வாழ்க்கை ரொம்பவும் முக்கியமானது என்பதை உணர வேண்டும்! வேண்டாத சிந்தனைகளுக்கு அதிக இடம்கொடுக்காமல் தலைபெருத்து மனிதநேய உணர்வுகளை ஒதுக்கி வருவதால் இதயம் சுருங்கிப் போனவர்களாகவும் ஆகிக் கொண்டிருக்கிறோமோ என்று தோன்றுகிறது! வெளி உலக விவகாரங்களில் பல சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப பலவிதமாக நிறம் மாற வேண்டிய அவசியம் அதிகமாகவோ குறைவாகவோ எல்லோருக்குமே உண்டு. ஆனால் வீட்டில் மறைப்பின்றி மனந்திறந்த பேச்சு தான் உறவை வளர்க்கும். எதிர்வாதம் செய்வதை தவிர்த்து முடிந்தால் அடுத்தவர் கூற்றில் உள்ள நியாயத்தை அறிய முனையலாம். முடியாவிட்டால் அவரவர் கருத்துப்படியே ஆகட்டும் என பல பிரச்னைகளை விட்டு விடுவதே மேல்!

இப்படியாக பல கோணத்தில் மனப்பக்குவத்தை வளர்த்துக் கொண்டு புதிதாக திருமணம் செய்து கொண்ட பெண் சாந்தி முகூர்த்தத்தை எதிர்நோக்கி இருக்கிறாள். பல காலம் "புத்தி அறிந்த" பிறகு மனத்தில் நிறைந்திருந்த ஆசைகள் கற்பனைகளின் வடிகாலாக அமைவதுதான் இந்த நாள்! அலைபாயும் எண்ணங்களும் மனமும் 'சாந்தி' பெறும் முகூர்த்தம் இது! திருமணம் அன்பு செலுத்துவதற்காக மட்டுமே என்கிற பிளேட்டோவின் தத்துவம் நடைமுறைக்கு ஒத்ததால் உடல்களின் சேர்க்கை – ஐக்கியம் இன்றி திருமணத்தின் நோக்கம் நிறைவேற முடியாது!

தாம்பத்திய உறவின் முழு வெற்றிக்கு இருவரின் உடல் ஆரோக்கியமே முதல் தேவை ஆகும்! முந்தின கட்டுரைகளில் கூறிய வழிமுறைகளைக் கடைபிடிப்பதன் மூலம் எந்தப் பெண்ணும் உடல்நலத்தை நன்றாகவே வைத்துக் கொள்ள முடியும்! "ஆண் ஒரு நெருப்பு, அதை அணையாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது மனைவியின் கடமை" என்று அனுபவம் மிக்க மேலைநாட்டுப் பெண்மணி ஒருவர் கூறினார். அதோடு அகலாமலும் அணுகாமலும் குளிர்காய்வது போல நடந்து கொள்ள வேண்டிய சந்தர்ப்பங்களும் உண்டு.

குளிர்பிரதேச மக்களை விட நம் நாடு போன்ற உஷ்ண பிரதேசத்து மக்களுக்கு உணர்ச்சி தூண்டுதல் இயல்பாகவே அதிகம்! இதை மேலும் அதிகரிக்கும் வகையில் சினிமா, டி.வி. போன்ற மீடியாக்கள் ஆட்டிவைப்பதால் பல ஆண்கள் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியாமல் தவறான வழிகளில் தங்களையே அழித்துக் கொண்டு வருவதுண்டு. இதுபோன்ற காரணங்களால் வரவர ஆண்மை உயிரணு உற்பத்தி குறைந்து கொண்டே வருவதாக உலக சுகாதார நிறுவனம் ஆராய்ந்து கூறி உள்ளது. இம்மாதிரி பாதிப்பு – பலவீனம் அடைந்த ஆண்கள் குறையை மறைக்க உடனே முறையான சிகிச்சை எடுப்பதை விட்டு ஒரேயடியாக மனைவி உடல்நிலை மீது பழிபோடுவது உண்டு. இவ்விஷயத்தில் பெண்கள் கவனமாக இருந்து உடனே தக்க சிகிச்சை பெறுவதன் மூலம் தாம்பத்திய வாழ்க்கையை தக்கவைத்துக் கொள்ளலாம்! இருவருமே வெட்கப்பட்டு மறைத்து வைத்து வயது சென்றபின் கூறி எந்தப் பயனும் இல்லை!

கணவன் மனைவி இருவருமே மனம் விரும்பி உறவு கொள்வதே மிகச் சிறந்தது. பழைய காலம் போலன்றி படித்தவர்கள், முற்போக்கு சிந்தனை உள்ளவர்களிடையே, ஒருவரை ஒருவர் முதலில் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஒரு கருத்து வலுவாக உள்ளது. இதனால் 'முதலிரவிலேயே தாம்பத்திய உறவு என்பது சரியல்ல' என்பதுண்டு. இது அவரவர் கருத்துப்படி என்றபோதிலும் உடல்நலம் சரியாக இருக்க வேண்டும் என்பது மறுக்க முடியாதது!

ஆண் பெண் சேர்க்கைக்கு ஏற்ற சிறப்பான நட்சத்திரங்கள், நேரம் போன்ற பல விஷயங்களை ஜோதிட சாஸ்திரம் கூறுகிறது. கிரக சஞ்சாரத்தை அனுசரித்து 9 மாதம் 9 நாள் கர்ப்ப காலமாகக் கணக்கிட்டு கர்ப்பதான லக்கினத்தையும் (நேரம்) குழந்தை பிறக்கப் போகும் நட்சத்திரத்தையும் கூட நம் முன்னோர்கள் கணக்கிட்டு உள்ளனர்! உடல் நிலையும் அனுகூலமாக இருந்து மனஎழுச்சி

இப்போது கோவைக்காய் மலிவாக இருக்கிறது. வில்லைகளாக நறுக்கி, ஒருநாள் வெயிலில் போட்டு மறுநாள் புளித்த மோரில் உப்புப் போட்டுப் பிசிறி மறுபடியும் நன்கு காயவைத்து வறுத்தால், மிகவும் நன்றாக இருக்கும். – ஆர். பார்வதி





# *Dream Designs at Dream Prices*



Alluri Sarees bring you an attractive array of Sarees, Salwar Suits and Readymade Blouses. At prices that are very affordable!

**WELCOME TO COTTON WORLD**

## Dealers of Karishma Churidars & Sarees

5% Discount with this cutting



### Welcome to

# Aaluri Sarees

## WHOLESALE & RETAIL

No. 4/38, R.K. Mutt Road, Mylapore,
Chennai - 600 004. Ph: 4935791



ஃப்ரிட்ஜின் மீது ஸ்டெபிலைசர்களை அப்படியே வைக்காமல் ஸ்டாண்ட் வைத்து அதன் மீது வைக்கலாம். சூடான பாத்திரங்களை வைக்க டைனிங்டேபிள் மீது வைக்கும் சில்வர் ஸ்டாண்டுகளையே வைக்கலாம். ஏனெனில் ஸ்டெபிலைசரை நகர்த்தி அந்த இடத்தை தொட்டுப் பாருங்கள். எவ்வளவு சூடாக உள்ளதென்று தெரியும்.

— சித்ரா சுரேஷ்

யும் இருவருக்குமே ஒத்துவந்தால்தான் இது பெரும்பாலும் சாத்தியம்! இன்ன மாதம் இன்ன தேதியில் கருவுற்றால் பிறக்கும் குழந்தை ஆணா? பெண்ணா? என்று கூட 98% சரியாகக் கூறும் ஒரு கணிதமும் உண்டு! ஆனாலும் ஞாயிற்றுக் கிழமை பரணி நட்சத்திரமும், திங்கட்கிழமை சித்திரை நட்சத்திரமும், செவ்வாய்க் கிழமை உத்திராடம், புதன்கிழமை – அவிட்டம், வியாழக்கிழமை – கேட்டை, வெள்ளிக்கிழமை – பூராடம், சனிக்கிழமை – ரேவதி இப்படி கிழமையும் நட்சத்திரமும் கூடிய நாட்கள் தாம்பத்திய உறவுக்கு அசுபமென்று அறிக. இதுபோல் மற்ற சுபகாரியங்களுக்கும் தீதாகும்!

தாம்பத்திய உறவுக்கு முன்பின் கணவன் மனைவி சாப்பிடத் தகுந்த உணவு, கூட வேண்டிய நேரம் கூட கவனிக்கத்தக்கவை. அன்று இரவு காரம் புளிப்பு அற்ற சுகபோஜனம் எளிதில் செரிக்கும்படி உண்டு. அது முக்கால் பாகம் ஜீரணமானபின் சுமார் 5 மணி நேரம் கழித்தபின் ஈடுபடுவதே நன்று. பெண்கள் குறிப்பாக உளுந்தங்களி உளுந்தின் வடை போன்ற பட்சணங்கள் உண்பது நல்லது. பால் பழங்கள் உடற்சூட்டை தணிப்பவை! நேரத்தோடு உண்டபின் சற்று உறங்கி இரவு 12 மணிக்குப் பின் 3 மணிக்கு மேல் பிரம்ம முகூர்த்தம் என்கிற சிருஷ்டி வேளையில் கூடுவதே சிறந்தது. இந்த நேரம் உடல் களைப்பு, அழுத்தம், அசதி இவை தணிந்து புத்துணர்ச்சி பெற்றிருப்பதுடன் பாலியல் உறுப்புகள் இயல்பாகவே பலம்பெறும் சமயம்! பலவீனமான ஆண்கள் இதைத் தங்கள் அனுபவத்தில் காணலாம்!

சம்போகத்துக்குப் பின் உடலில் அதிகமான தாபிதம் உண்டாவதுண்டு. இதை உடனே உரிய முறையில் தணிப்பது அவசியம்! குளிர்ச்சியானவையோ, சூடானவையோ சாப்பிடக் கூடாது. காய்ச்சின பாலில் கற்கண்டு அல்லது தேன் கலந்து சாப்பிடலாம். இயற்கையாக தயாரிக்கப்பட்ட நன்னாரி சர்பத் மிகவும் நன்று. பாலில் வேகவைத்த பூண்டுக் கனியுடன் சர்க்கரை கலந்து சாப்பிடலாம்! இவைகளால், "கரணாக்கினி" (ORGANIC HEAT) தணிந்து உடல் இயக்கம் இயல்பான நிலைக்கு திரும்பி விடுகிறது. மறுநாள் இடுப்பு வலி சோர்வு அசதி ஏற்படுவது இல்லை. கொண்டைகடலை சிறிது ஊறவிட்ட நீரில் தேன் கலந்து காலையில் சாப்பிடுவதும் ஆண்களுக்கு நன்று. ஆள் வள்ளிக் கிழங்கு அடிக்கடி சாப்பிடுவது இருபாலாருக்கும் சக்தி வலிமை குறையாது பாதுகாக்கும். போகத்தில் விருப்பம் இல்லாதவர்களுக்கு நிலப்பனை கிழங்கு, பூனைக்காலி விதை, தேற்றான் விதை – சந்தனம் சேர்ந்த விழுது நல்ல பலன் தரும். இவர்களுக்குப் பாலியல் உறுப்பில் வறட்சி ஏற்பட்டு சிரமத்தை உண்டுபண்ணுவதுண்டு. இதனால் எரிச்சல், புண் போன்றவை ஏற்பட்டு துன்புறுவார்கள். மேற்கண்ட சிகிச்சைகளுடன், சோம்பு திராட்சைக் கஷாயம், வில்வ இலை வெங்காய கஷாயம் போன்றவையும் பலன்தரும்.

பலர் சுத்தம் பற்றிய விஷயத்தில் அலட்சியம் காட்டுகிறார்கள். எப்போதுமே மலஜலபாதை பிறப்புறுப்பை சுத்தமாக அலம்பி வர வேண்டும் என்றாலும் இந்தச் சமயத்திற்கு முன்னும் பின்னும் இது முக்கியம் ஆகும். குழந்தை பெறும் நோக்கில் சேரும் பெண் உடனேயே எழுந்து நடமாடாமல் அப்படியே சிறிது நேரம் ஓய்வாக இருத்தல் நலம் என்ற ஒரு கருத்து சித்தமருத்துவ கர்ப்பக்கோள் நூலில் கூறப்பட்டு உள்ளது. மா, ஆல், அத்தி, அரசு, உதியன் போன்ற துவர்ப்பு மரப்பட்டை தூளை நீரிலிட்டு காய்ச்சி வடிகட்டியோ அல்லது படிகாரம் சிறிது கலந்த நீரையோ விட்டு நன்கு உறுப்புக்களை அலம்புவதால் எந்தவித தொற்றுக்களும் அண்டாது. பெண்கள் மறுநாள் சுகந்த வாசனை பொடி போட்டு குளிப்பதன் மூலம் உடலில் காணும் ஒருவித முடை நாற்றத்தைப் போக்கலாம்! மறுநாள் எண்ணெய்க் குளியல் செய்வது நன்று!

சித்தமருத்துவ ஆய்வின்படி தாம்பத்திய உறவின் போது ஆண் பெண் இருவர் உடலிலும் கிளர்ந்து எழும் "மேக உஷ்ணம்" என்கிற மிகையான சூடு கொஞ்சம் கொஞ்சமாக உடலில் சேர்ந்து, எளிதில் உணர்ச்சியையும், நாளடைவில் ஆண்களுக்கு வெட்டைச்சூடும், பெண்களுக்கு கருப்பாசயத்தைத் தாக்கி சூதக ஒழுங்கீனம், கருப்பை எரிச்சல் வெள்ளைப்பாடு போன்ற நோய்களை உண்டுபண்ணுகிறது. பல பெண்களுக்கு திருமணத்திற்கு

முன்பு வரை மாதம்தோறும் ஒழுங்காக வந்த மாதப் போக்கு பிறகுதான் ஒழுங்கு தவறி வரத் தொடங்கியது என்று கூறுவதும் உண்டு. இதனால் கருஉற்பத்தியும் பாதிக்கும். இதற்கு முறையான சித்தமருத்துவம் செய்து சரி செய்யலாம்! தானாக சரியாகிவிடும் என்று இருப்பதோ உடனே ஹார்மோன் மாத்திரைகளால் ஒழுங்குபடுத்த முயல்வதோ மேலும் பிரச்னைகளுக்கு வழியாகும்!

Endometritis, Vaginitis, Cervicitis, Cystitis போன்ற பல அழலை நோய்களும் (Inflammatory Diseases) தோன்ற காரணமாகின்றன. தீராத நீர்க்கடுப்பு ஏற்பட்டு இடைவிடாமல் மருந்து சாப்பிட்டு "கட்டுப்படுத்தியே" வருபவர்களும் உண்டு! ஆண்களுக்கு இதுபோல சில பாதிப்புகள் உண்டு. "இதையே வெட்டையால் எடுத்த நோய்கள்" என்று சித்த மருத்துவம் கூறுகிறது. இந்நிலையில் தொற்றுகள் ஏற்படுவது மிக எளிது ஆகிறது. இன்றைக்கு பின் இடுப்பு வலி, அடி முதுகுத் தண்டு வலி (LUMBAR PAIN) என்று துன்பப்படுகிறவர்களில் 90% பேர் இதன் தொடர்பான நோய்பட்டவர்களே! 'வெட்டையால் எடுத்த நோய் முறையாக தீர்க்கப்படாவிட்டால் கட்டை வரை (மரணம் வரை) தொடரும்' என்பது சித்தர்களின் எச்சரிக்கை! இது எமது முறையான சிகிச்சையில் விரைவில் நீங்குவதைக் காணலாம்! வில்வாதி லேகியம், இதற்கு சிறந்தது! தாம்பத்திய உறவு சம்பந்தமாக பல சிக்கல்களை நான் சித்த மருத்துவர் என்ற முறையில் ஆலோசனை கூறி மகிழ்ச்சியான வாழ்விற்கு வழிகாட்டி இருக்கிறேன். (நவோதயா சித்த ஆராய்ச்சி மையம், 20, ஆற்காடு ரோடு, சென்னை - 24. தொ : 4810752)

பாலியல் உறவில் ஏனோதானோவென்று ஈடுபடுவது நல்லதல்ல. இதனாலேயே வாழ்நாள் கடைசி வரை முழுமையாக திருப்தி அடைந்ததாக பலர் உணர்வதே இல்லை! சினிமாக் காட்சிகள், கற்பனைகள் இன்றி இருவர் மனமும் ஒன்றி உணர்ச்சிகள் கனிந்து முடிவில் கூடுவதே ஆரோக்கியமானது! கருப்பை உணர்ச்சியும், தூண்டுதலும் பெற்று துடிப்புடன் ஆண் கருவை வாங்குகிறது. இன்றேல் வீணாகி விட வாய்ப்பு அதிகம். ஒழுக்கம் தவறாத நடத்தைக்கும் ஒரு உத்தரவாதம்! திருமணம் ஆன புதிதில் தாம்பத்திய உறவிற்கு நாட்கள் கட்டுப் பாடு விதிக்க முடியாது. ஆனால் ஆரோக்கியத் தைப் பேணும் விதிமுறைகளின்படி மாதம் இருமுறையே போதும்! மாதவிலக்கிற்கு முன்பும் பின்பும் 7 நாட்கள் ஆகாத நாட்கள்! மாத விலக்குக்கு முந்தின 8 நாட்கள் கருவுறும் வாய்ப்பு மிக மிகக் குறைவு. ஆகையால் இது கருத்தடைக்குப் பாதுகாப்பான நாட்கள் ஆகும்!

இவை போக எந்தெந்த சமயங்களில் தாம்பத்திய உறவு கூடாது என்றும் விவரமாகக் கூறுகிறது சித்த மருத்துவம்! மணமான ஒவ்வொரு தம்பதிகளும் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டும்! சுரம், வாந்தி, பேதி, அஜீரணம், மார்புவலி, வாயுபிடிப்பு, பக்கசூலை, ஆஸ்துமா இழுப்பு, தாகம் நீர்க்கடுப்பு, தலை வலி, உயர்ரத்த அழுத்தம் இருக்கும் போதும் உடலுறவு அறவே கூடாது. உடல் எண்ணெய்க்குளியல் செய்த அன்றும், நீண்ட தூரம் நடந்து களைத்து இருக்கும் போதும் வெயிலில் அலைந்து சோர்ந்து வியர்வை மிகுந்த போதும், இரவு முழுக்க கண்விழித்து வேலை செய்த பின்னும், மிகுந்த கவலை, ஆத்திரம், பெரும் இழப்பினால் மனச்சோர்வு, வெறுப்பு, துக்கம், பயம் நிறைந்திருக்கும்போதும், மேலும் குளிர்ந்த நீரில் நீண்ட நேரம் குளித்தபின்னும், பன்றி மாமிசம், புளிப்பான தயிர், கீரை சாதம் சாப்பிட்டு அது செறிக்குமுன்பும், தவிர்க்க வேண்டும். மலம் மூத்திரம் இவற்றை அடக்கிய நிலையில் அவசரமாக ஈடுபடுவதால் வயது போகப் போக மூலநோய், புரஸ்தகசரப்பி, அழற்சி வீக்கம், நீரடைப்பு போன்ற நோய்களை உண்டுபண்ணும்! உறவுக்குப் பின் இருதய வலி, தலைசுற்றல், உடலில் குளிர்ந்த வியர்வை போன்ற அறிகுறிகள் உடலுக்கு ஆபத்தை உண்டுபண்ணக்கூடியவை! அதன் பிறகு இவ்வுறவை அறவே தவிர்க்க வேண்டும்! பெண்கள் சூதகமாகி இருக்கும்போதும், கருப்பையில புண், வலி, வீக்கம், ரத்தக்கசிவு, சீழ் வெள்ளை ஒழுக்கு மற்றும் மிகுந்த சூடு வறட்சி இருக்கும்போதும் உடலுறவு ஆகாது. மேலும் நோய் அதிகரிக்கவே வழிவகுக்கும்!

திருமணம் முடிந்தபின் அனைவரின் அடுத்த கட்ட எதிர்பார்ப்பு கர்ப்பம், குழந்தைப் பேறு! இதன் அடிப்படையான பல உண்மைகளை ஒவ்வொரு பெண்ணும் அறிந்து இருக்க வேண்டும்! மணமாகி, 8-10 ஆண்டுகள் குழந்தை பேறுக்காக ஏங்கி இருக்கும் பெண்கள் பலருக்கு அவர்களுக்கு என்ன குறைபாடு - நோய் என்று அவர்களுக்கே புரிவதில்லை! நல்ல மருத்துவர்களை அணுகி எந்தச் சிக்கல்கள் இருந்தாலும் வெட்கப்படாமல் கேட்பது நல்லது.

இரண்டு முயல்களை விரட்டினால் ஒரு முயலைக் கூட பிடிக்க முடியாது.

- கொரியப் பழமொழி



இங்கிலாந்தில் ஹிந்து தர்மத்தை படிப்பதற்காக ஆங்கிலத்தில் உள்ள "வைபவ லக்ஷ்மி விரதம்" புஸ்தகத்தை ஆங்கிலத்தில் லோயர் செகன்டரி ஸ்கூல் மாணவர்களுக்கு பாடமாக சொல்லித் தரப்படும்.

## ஆங்கிலேயர்களும் "வைபவ லக்ஷ்மி விரதத்தை" படிப்பார்கள்.

'சூரத் ஸாஹித்ய ஸங்கத்தின் - சூரத்' இந்தியாவின் மத்திய அரசின் காப்பிரைட் நம்பர் : எல் 11639/88-ல் ரெஜிஸ்டர் செய்த 'வைபவ லக்ஷ்மி விரதம்' புஸ்தகம் தற்பொழுது வெளிநாடு மார்க்கெட்டிலும் கிடைக்கிறது. ஸாஹித்ய ஸங்கம்- சூரத்தின் இந்திய மத்திய அரசின் காப்பிரைட் நம்பர் - எல்.11639/88-ல் ரெஜிஸ்டர் செய்துள்ள 'வைபவ லக்ஷ்மி விரதம்' புஸ்தகம் ஹிந்து தர்மத்தை படிப்பதற்காக ஆங்கிலத்தில் லோயர் செகன்டரி பள்ளிக்கூட மாணவர்களுக்கு கற்றுக் கொடுக்கப்படும். இதற்கான உரிமை வாங்குவதற்கு Heineman U.K. உடன் கடிதப் போக்குவரத்து துவங்கியுள்ளது.

## அமெரிக்காவிலும் ஸாஹித்ய ஸங்கம் - சூரத்தின் 'வைபவ லக்ஷ்மி விரதத்தின் மகிமை'

அமெரிக்காவிலிருந்து அமெரிக்க சகோதரி Janet E.McCriokard எழுதுவதாவது, தங்கள் 'வைபவ லக்ஷ்மி விரதம்' புஸ்தகப்படி நான் விரதம் செய்கிறேன். இதை பிரபலப்படுத்த எனக்கு ஆங்கிலத்தில் 'வைபவ லக்ஷ்மி விரதத்தின்' புஸ்தகம் வேண்டும். தாங்கள் எனக்கு அனுப்பி தருவீர்களா, அல்லது அமெரிக்காவில் கிடைக்கும் இடத்தின் முகவரி அனுப்புங்கள். "ஜய் அம்மா வைபவ லக்ஷ்மி" Janet E.McCrickard ஸாஹித்ய ஸங்கம் - சூரத்தின் வைபவலக்ஷ்மி விரதம், இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் பிரபலமானது. ஹிந்தி, மராட்டி, குஜராத்தி, ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், பெங்காளி, ஒடியா மேலும் ஸிந்தி பாஷை உட்பட 11 பாஷைகளில் 'வைபவ லக்ஷ்மி விரதம்' புஸ்தகம் கிடைக்கிறது. காப்பி ரைட் நம்பர் எல்.11639/88. மேலும் 'ஸாஹித்ய ஸங்கம்' பெயரை படித்த பின் வாங்கவும். நகல் செய்த புஸ்தகப்படி விரதம் செய்து பலன் கிடைக்காவிட்டாலும், அதை மறந்து புதிய முறைப்படி ஸாஹித்ய ஸங்கத்தின் புஸ்தகம் வாங்கி விரதத்தை தொடங்குங்கள். ஒரு முறை, இரு முறை ஒரு வேளை பலன் கிடைக்காவிட்டாலும் விரதத்தை மீண்டும் தொடர்ந்து செய்யவும். பலன் கட்டாயம் கிடைக்கும்.

## ஸோவியத் விஞ்ஞானிகள் கூறுவதாவது - "ஸ்ரீ இயந்திரம் அற்புதமான வினோதங்களை காட்ட வல்லது".

ஸோவியத் விஞ்ஞானி டா. குஸாயிஸேங், மேலும் ஸோவியத் சரித்திர ஆராய்ச்சியாளர் டா. தேசாதேன் அவர்களும் சொல்லுவதாவது : இந்தியாவின் ஸ்ரீ இயந்திரத்தில் இருக்கும் அற்புதமான குணங்கள் முற்போக்கு விஞ்ஞானிகளுக்கும் புரிவதில்லை. செம்பில் சித்த 'ஸ்ரீ இயந்திரம்' ரூ.75/- (தபால் மூலம் ரூ.85/-) சித்தி கிடைக்கப் பெற்ற ஸ்ரீ இயந்திரமாகும். ஆகையால் ஒரு விதியும் செய்ய தேவையில்லை. பூஜை இடத்திலோ அல்லது அலமாரியிலோ வைத்து தினம் காலை ஊதுபத்தி காட்டவும், 'ஸாஹித்ய ஸங்கம்' பெயர் படித்து வாங்கவும். இலவச அட்டவணை கேட்டு வாங்கவும்.

**ஸாஹித்ய ஸங்கம், ஹீரா பஜார், பாபா ஸித்தி,**
**கோபிபுரா, சூரத் - 395 001. (குஜராத்)**

# அழகுக்கு அழகு செய்ய



அழகு சாதனம் என்பது ஏதோ இந்த சமீப நூற்றாண்டில்தான் கண்டுபிடித்ததாக எண்ண வேண்டாம். பல நூற்றாண்டுகளாக இருந்து வருவதே - கால மாற்றத்தால் மாறுதலடைந்து வருகிறது. பழமை - புதுமையாகி வருகிறது. பிறர் கண்ணில் படும் மனிதர்கள் - (ஆண்- பெண்) சுத்தமாகவும், பளிச்சென்றும் விளங்க வேண்டும். இனிமையாகப் பழகுவதும், இளமை அழகு குறையாமல் இருப்பதும் அவசியம். ஆண்களாயினும் பெண்களாயினும் செயற்கை முறைகளையும் அழகுக் கலைகளையும் நாடி பயன் அடைய வேண்டும் என்று மகிரிஷி வாத்ஸ்யாயனர் கூறியிருக்கிறார்.

பொதுவாகவே வீட்டு வேலைகளே பெண்களுக்கு நல்ல உடற்பயிற்சி. ஆனால் இன்று ஆபீஸ் செல்லும் பெண்களே அதிகமாக இருக்கிறார்கள். ஆபீசிலும் உட்கார்ந்து, வீட்டிலும் வந்து உட்காருவதால் உடற்பயிற்சி அவசியம். பஸ் நிலையம் நோக்கி நடப்பது சிலருக்குத் தகுந்த உடற்பயிற்சி ஆகிவிடுகிறது. தினமும் நடப்பது மிகவும் நல்லது.

வேலைக்குச் செல்லாத பெண்கள் தங்கள் வீட்டு காம்பவுண்டுக்குள் நிறைய நடக்கலாம். நடை பழகலாம். தோட்ட வேலைகள் செய்யலாம். இது செலவில்லாத உடல் இளைக்கும் வழிமுறைகளில் ஒன்று. உணவில் அதிகம் காரம் சேர்த்துக் கொண்டாலும் உடல் அழகைக் குறைக்கும். கட்டி, பருக்கள் ஏற்படும். காரத்தைக் குறைத்துக் கொள்ளுதல் நல்லது. உடல் பருமன் குறைய மாத்திரை மருந்துகளை சாப்பிடுதல், மாதவிடாயை தன் விருப்பம் போல மாற்றிக் கொள்ள மாத்திரைகளை உட் கொள்ளுதல் போன்றவை உங்கள் முக, உடல் அழகை மட்டுமின்றி, ஆரோக்கியத்தையும் குலைத்துவிடும்.

வெய்யில் காலத்தில் எண்ணெய் பசை சுத்தமாக தெரியும். (சருமத் துவாரங்கள் விரிவடைவதால்.) அதேபோல் நிறைய பேருக்கு முகம், கழுத்துப் பகுதியில் திட்டுத் திட்டாக கறுப்பு, இல்லையென்றால் கருமையாக படர்ந்ததுபோல் இருக்கிறது. சருமத்தின் Zinc குறைபாடால் இவ்வாறு ஏற்படுகிறது.

சருமம் இயற்கையின் அம்சம். எனவே இயற்கை சார்ந்த பொருட்களே இத்துடன் ஒத்துப் போகும். அரோமோ ஆயில் மசாஜ் மூலம் முகம், கழுத்துப் பகுதியில் ஏற்படும் திட்டு, திட்டான கறுமையை நீக்கி, Zinc குறைப்பாட்டையும் நீக்க வேண்டும். சிறந்த மூலிகைகளைக் கொண்டு நான் தயாரிக்கும் மூலிகை பேக் சிறந்த பலனை அளிக்கிறது. சருமத்திற்கு

வேண்டிய ஊட்ட சத்துகளையும், மூலிகைகளையும் தருவதால் சருமம் பளபளப்பும், மினுமினுப்பும் ஆகிறது. வருகிற மாதம் ஜூன், நிறைய தாய்மார்கள் தங்கள் பிள்ளை, பெண் காலேஜ், பள்ளி என்று சேர்க்க நிறைய செலவாகும் இந்தச் சமயத்தில் தங்கள் உடம்பையும் கவனிக்கத் தவறவிடக் கூடாது. ஜூன் மாதம் பிறந்தாலே ஓரே டென்ஷன் என்பதை மாற்ற வேண்டும். உங்கள் உடம்பிற்குத் தேவையான family Health drink நீங்களே தயார் செய்து வைத்துக் கொள்ளுங்கள்.

இஞ்சி - 100 கிராம்

கேரட் - 500 கிராம்

கொத்தமல்லி பெரியகட்டு இரண்டு

சிவப்பு முள்ளங்கி ½ கிலோ

வெள்ளரிக்காய் ½ கிலோ

கொத்தமல்லி, இஞ்சி, கேரட், முள்ளங்கி வெள்ளரிக்காய் இவற்றை நன்கு அரைத்து வடிகட்டி ஒரு பாட்டிலில் பிரிட்ஜில் வைத்துக் கொள்ளவும். தினமும் காலை ஒரு ஸ்பூன் இந்தச் சாறும் தண்ணீர் நான்கு ஸ்பூனும் கலந்து குடிக்கவும். எந்த டென்ஷனும் இருக்காது. நாள் பூராவும் சுறுசுறுப்பாகவும் உற்சாகமாகவும் இருக்கலாம்.

இந்த வெய்யில் காலத்தில் எப்போதும் பருத்தி உடை அணிவதே நல்லது. முக்கியமாக சூட்டைத் தணிக்க மூலிகை மசாஜ் செய்து, ஹென்னா கண்டிஷனர் போட்டுக் கொள்ளலாம். நான் இதைத்தான் வெயில் காலங்களில் (தொலைபேசி - 4817157) என் வாடிக்கையாளர்களுக்குப் போடுகிறேன்.

கனமில்லாத வாயில் புடைவைகள், கோடை காலத்திற்கெனவே தயாரிக்கப்படுகின்றன. அதேபோல் வெயிலுக்கென்ற தரமான மேக்கப் பொருட்களை உபயோகிக்க வேண்டும். சத்துள்ள உணவு, தேவையான ஓய்வு, நல்ல சிந்தனை, நல்ல உறக்கம் இவை உடல் ஆரோக்கியத்தை எப்போதும் தரும்.

— ஹேமாலஷ்மண்,

*(அழகு மற்றும் சிகை அலங்கார நிபுணர்.)*

# ரம்யா



ஆபரேஷன் தியேட்டர் அதன் வாசலில் ராஜாவின் குடும்பமும், அருணாவின் குடும்பமும் கவலையுடன் காத்திருந்தது. ஆம் - சேகரும் அவன் மனைவியும்கூட செய்தி கேட்டு ஓடி வந்திருந்தனர்.

இந்த நேரத்திலும் காமினியின் முகத்தில் வெறுப்பு மாறவில்லை. இவர்கள் எப்படி வந்தார்கள்? ஏன் வந்தார்கள்? யார் அழைத்தது? எவ்வளவு உரிமையுடன் ஈஸ்வரனை நெருங்கிப் பேசுகிறாள் இந்த ராதா? மருமகள் என்ற உரிமையா?

'ஏற்கனவே நிசப்தமான அந்த்ச் சூழலில் அங்கு அவ்வளவு பேர் இருந்தும் பயங்கர அமைதி. எப்போதாவது அந்தப் பக்கம் போகும் நர்சுகள், ஆயாக்களின் செருப்புச் சத்தம்கூட பயங்கரமாகக் கேட்டது. அங்கு நிலவி இருந்த இறுக்கமான சூழ்நிலையைக் கலைப்பதுபோல், திடீரென்று டாக்டர்கள் அறையின் கதவு திறந்தது.

ஒரு நர்ஸ் வந்து 'டாக்டர் பேஷண்டின் கணவரைக் கூப்பிடுகிறார்' என்றாள் - ரவி போய் ராஜாவை அழைத்து வந்தான். அவர்களுடன், ஈஸ்வரனும் டாக்டருடைய அறைக்குள் போனார்கள்.

"வாங்க, உட்காருங்க - உங்ககிட்ட ஒரு முக்கியமான விஷயத்தைப் பத்திப் பேசணும்." என்றார் சீஃப் டாக்டர். அவரையே எல்லோரும் பயத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.



''அருணாவுக்கு வெளிப் படையா எந்த சேதமும் இல்லை. காலில் ஒரு சின்ன பிராக்சரைத் தவிர! பட், கம்பி கள் மேல் குப்புற விழுந்ததில் மென்மையான வயிற்றுச் சதை யைக் கிழித்துக் கொண்டு போய்க் கருப்பையைச் சிதைத்து விட்டன கம்பிகள்.

அதனால் அதை உடனே அகற்றியாக வேண்டிய கட் டாயத்தில் இருக்கிறோம். அதை விட்டு வைப்பது உயிருக்கு ஆபத்து என்பதால் வேறு வழி இல்லை. உங்கள் சம்மதம் தேவை என்பதால்தான்....'' அதிர்ந்துபோய் பேச வாயெழா மல் அவரைப் பார்த்தனர்.

"அருணா பெற்றோருக்கு மக ளாக, கணவனுக்கு மனைவியா பிழைக்கட்டும்! உங்களுக்குக் குழந்தை பிறக்காதுன்னு கவ லைப்பட வேண்டாம் ராஜா. நம் நாட்டில் எத்தனையோ குழந் தைகள் அனாதைகளாக ஆதர வில்லாமல் தவிக்கிறார்களே! மனசைத் திடப்படுத்திண்டு எனக்கு ஒரு நல்ல பதிலைச் சொல்லுங்க. தாமதமாகிற ஒரோரு வினாடியும்..."

தலைமை டாக்டர் முடிப் பதற்குள் - "டாக்டர், அருணா எனக்கு முழுசா கிடைச்சா போதும் டாக்டர் - அவள்தான் என் குழந்தை - அவள் போதும் டாக்டர்!"

தழுதழுத்த குரலில் ராஜா முடிவாகச் சொல்ல, எல்லாரும் "ஆமாம் டாக்டர்! அருணாதான் இப்ப முக்கியம்!"'என்று ஏகமன தாகச் சொல்லிவிட்டார்கள்....

மருத்துவர் குழு மீண்டும் உள்ளே சென்றது. மூன்று மணி நேரம் கழித்தே வெளியே வந் தார்கள்.

சிரித்தபடி ''ஆபரேஷன் சக்ஸஸ்! பட் பேஷண்டுக்கு உடனே இந்த விஷயம் தெரிய வேண்டாம். டிஸ்சார்ஜ் பண் ணும்போது பக்குவமா நாங்களே சொல்றோம்!" என்றார் டாக்டர்.

"டாக்டர் - சின்ன வயசு

கோதா பார்த்தசாரதி

தானே - கொஞ்ச நாள் பிறக்கும்கிற நம்பிக்கையோட நிம்மதியா இருக்கட்டுமே - பின்னாடி இல்லைனு ரொம்ப கஷ்டப்பட்டா அப்ப சொல்லலாமே!" என்றார் ஈசுவரன்.

"அப்பகூட என்கிட்டதான் குறை மாதிரி நம்ப வெச்சுட்டா, அப்ப அருணா அதைப் பெரிய குறையாகவே நினைக்க மாட்டா."

"கணவன் மனைவிக்கு நடுவே ஒளிவு மறைவுகூடாது ராஜா. இப்ப இந்த விபத்திலே கண்டிப்பா தான் எதையோ இழந்திருப்போம். அநேகமாக உயிர் பிழைத்து உங்களுடன் வாழ முடியும்னேகூட நெனைச்சிருக்க மாட்டாங்க. சூட்டோடு சூடா நானே பக்குவமா சொல்லி தயார் பண்ணிடறேன். உண்மையை நேருக்கு நேராக சந்திக்கிற தைரியம் வரும்" என்று ஆறுதல் சொல்லி விட்டுப் போனார் அவர்.

**வீ**ட்டு வாசலில் கார் வந்து நின்றது.

கிரிஜா ரம்யாவின் பின்னால் ஒட்டிக் கொண்டு பயந்து கொண்டே வந்தாள். "கிரி-கிரி" என்று புலம்பியபடி வனஜா ஓடி வந்து கட்டிக் கொண்டாள்.

"வாம்மா கிரிஜா - ஸ்வாமி புண்யத்துலே, நீ கிடைச்சியேம்மா!' என்று மதுரமும் விஜியும் கைகளைப் பிடித்துக் கொண்டு ஆதரவாக வரவேற்றனர்.

"நல்லபடியா வீடு சேர்ந்தாச்சு - வாசல்லேயே எல்லாம் பேசித் தீர்த்துடப் போறீங்களா? உள்ளே போய்க் குளிக்கச் சொல்லி வயத்துக்கு ஏதாவது கொடுங்க - குழந்தை மூஞ்சியும் உடம்பும் வாடிக் கிடக்கு!" என்றார் மகாதேவன்.



**கோடை காலத்தில் நீர் நிரம்பிய மண் பானையை சுற்றி இருக்கும் மணலில் தனியா (அ) வெந்தயத்தைத் தெளித்து வைத்தால் அவ்வப்போது சமையலுக்கு உதவும்**

**— ஜெயா**

கிரிஜாவுக்கு உடலும் உள்ளமும் கூசியது. 'எத்தனை நல்ல குடும்பம்! மன்னி மட்டும் இல்லாமல், அவள் குடும்பமே எதுவும் நடக்காதது போல் எப்படி இதமாக அன்பாக நடந்து கொள்கிறார்கள்?

இரவில், தனிமையில் சகோதரிகள் இருவரும் படுத்திருந்தபோது கிரிஜா, "அம்மா என் மேல ரொம்பக் கோபமாயிருக்காளா, வனி! என்னைப் பார்க்கக்கூட வரல்லையே. அப்படி ஒரு டிராமா போட்டான் வனி, அந்தக் கதிர் - அதுலே ஏமாந்து -" என்று துக்கம் பொங்கி வர எல்லாவற்றையும் சொன்னாள் கிரிஜா.

"நீ. சின்னவ - நீ ஏமாறுவதும் உன்னை ஏமாத்தறதும் அதிசயம் இல்லை. நா ஏமாந்தேன் பாரு - அதுதான்டி கஷ்டம். உன்னை மட்டுமில்லே - இப்ப நம்ப குடும்பமுமே சிதறாம மன்னி அப்பாதான் காப்பாத்தினார். நாமரெண்டு பேருமே நம்ம குடும்பத்துக்குக் களங்கம் வரும்படியா நடந்துண்டோம்.

இத்தனை சோதனையிலும் கறை படாம புடம் போட்ட தங்கம் மாதிரி, நீ தப்பிச்சிண்டு வந்துட்டே! ஆனா நான்..."

அழுதபடி தன் கதையைச் சொன்னாள் வனஜா. அவள் கதையையும், தன்னால் மனம் பேதலித்துவிட்ட அம்மாவின் நிலைமையையும் கேட்டு அழுதே விட்டாள் கிரிஜா.

கீழே ஏதோ பரபரப்பாக இருப்பதை அறிந்து, மாடிப்படி வளைவில் எட்டிப் பார்த்தாள் வனஜா.

"வனி - ரம்யாவுக்கு வலி ஆரம்பிச்சிடுத்து. நர்சிங்ஹோமுக்குப் போன் பண்ணேன். அழைச்சிண்டு வரச் சொன்னா. நானும் அம்மாவும் போறோம். கதவைச் சாத்திட்டுப் பத்ரமாக இரு. விது, ப்ரியா, ரமேஷும் இருக்கா. அப்பா எங்களோட வரார்!" என்று சொல்லிக் கொண்டு காரில் ஏறிக் கொண்டாள் விஜி.

கீழே இறங்கி ஓடி வந்த வனஜாவுக்கும் கிரிஜாவுக்கும் சிரமத்துடன் புன்னகைத்தபடி கையாட்டினாள் ரம்யா.

**வா**சலில் வந்து நின்ற காரைக் கண்டதும் வியப்பில் சிலையாக நின்றாள் ராதா.

காரிலிருந்து இறங்கியது காமி! பின்னாடியே டிரைவர் ஒரு அட்டைப் பெட்டியையும் பழக் கூடையையும் தூக்கி வந்தான்.

"வாங்கம்மா வாங்க" என்று பரபரப்புடன் அழைத்தாள் ராதா, அருகில் இருந்த சோபாவில் உட்காரச் சொல்லி நமஸ்கரித்தாள்.

தொலை பேசி எண்: 04144-22610
ஃபாக்ஸ்: 04144-22987

# அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
# தொலைதூரக் கல்வி இயக்ககம்
# திறந்த முறைப் பல்கலைக்கழக அமைப்பு

**1997-98 ஆம் ஆண்டுக்கான சேர்க்கை அறிவிப்பு முதுகலை, இளங்கலை மற்றும் பட்டய வகுப்புகள்**

தொலைதூரக் கல்வி இயக்ககம் கீழ்க்கண்ட வகுப்புகளைத் திறந்த முறைப் பல்கலைக்கழக அமைப்பின் கீழ் வழங்குகிறது.

## சேர்க்கைக்கு முறையான கல்வித் தகுதி தேவையில்லை

1. முதுகலை வகுப்புகள்: (இரண்டு ஆண்டுகள்)

   எம்.ஏ: வரலாறு* / பொருளாதாரம்* / சமூகவியல்* / ஆங்கிலம் / தமிழ் / பொதுத்துறை ஆட்சியல்

2. இளங்கலை வகுப்புகள்: (மூன்று ஆண்டுகள்)

   பி.ஏ: வரலாறு* / சமூகவியல்* / உளவியல் / பொருளாதாரம்* / அரசியல் அறிவியல்* / ஆங்கிலம் / தமிழ் / மக்கள் தொகையியல்* / பி.லிட்.(தமிழ்) / பி.காம்* / பி.எஸ்ஸி.(கணிதம்)

3. பட்டய வகுப்பு: (ஓராண்டு) சைவ சித்தாந்தம்*

(*இக்குறியிட்டவை அனைத்தும் ஆங்கிலம் மற்றும் தமிழ் வழி சார்ந்தவை)

**தகுதி:**

இளங்கலை, பட்டய வகுப்புகளில் சேர விரும்புபவர்கள் 01.07.1997 அன்று 18 வயது நிரம்பியவர்களாகவும், முதுகலை வகுப்புகளில் சேர விரும்புபவர்கள் 25 வயது நிரம்பியவர்களாகவும் இருக்க வேண்டும். விண்ணப்பதாரர்கள் நுழைவுத் தேர்வில் தேர்ச்சி பெற்ற பின்னர்தான் அவர்களுடைய வகுப்புச் சேர்க்கை நிரந்தரமாக்கப்படும்.

விண்ணப்ப வேண்டுகோள் கடிதத்துடன் Director, D.D.E., Annamalai University என்ற பெயரில் ரூ.50/க்கான வங்கி வரைவினை (Demand Draft) அண்ணாமலைநகர் அல்லது சிதம்பரத்தில் உள்ள எந்த வங்கியிலும் மாற்றக் கூடியதாக எடுத்து தனி அதிகாரி, திறந்த முறைப் பல்கலைக்கழக அமைப்பு, தொலைதூரக் கல்வி இயக்ககம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர் - 608 002 என்ற முகவரிக்கு தன் முகவரி உள்ள உறையுடன் அனுப்பி விண்ணப்ப படிவத்தையும் குறிப்பேட்டையும் பெற்றுக்கொள்ளலாம். காசோலைகள், பணவிடைகள் மற்றும் அஞ்சல் ஆணைகள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. 01.04.1997க்கு பிறகு எடுக்கப்பட்ட வரைவுகளே ஏற்றுக் கொள்ளப்படும்.

விண்ணப்பப் படிவத்தினை பெற விரும்பும் விண்ணப்பதாரர்கள் 07.04.1997 அன்றோ (அல்லது) அதற்குப் பின்னரோ ரூ.50/- ஐ தொலைதூரக் கல்வி இயக்ககத்திலும் மற்றும் படிப்பு மையங்களிலும் அலுவல் நேரங்களில் நேரடியாகவும் செலுத்தி விண்ணப்பப் படிவத்தினை பெற்றுக் கொள்ளலாம்.

அனைத்துச் செவ்வாய்க் கிழமைகளும், இரண்டாவது திங்கட் கிழமைகளும், மற்ற எல்லா பொது விடுமுறைகளும் படிப்பு மையங்களுக்கும் மற்றும் தகவல் தொடர்பு மையங்களுக்கும் விடுமுறை நாட்களாகும்.

விண்ணப்பப் படிவங்கள் 20.06.97 வரை அளிக்கப்படும். நிறைவு செய்யப்பட்ட விண்ணப்பங்கள் வந்து சேரக் கடைசி நாள்: 30.06.1997.

**நேரடிச் சேர்க்கை:**

நுழைவுத் தேர்வுக்கான நேரடிச் சேர்க்கை அனைத்து படிப்பு மையங்களிலும் 07.04.1997 முதல் அனுமதிக்கப்படும். 1995-96-ம், 96-97-ம் ஆண்டுகளில் நுழைவுத் தேர்வில் தேர்ச்சி பெற்று, வகுப்பில் சேர முடியாதவர்கள் இவ்வாண்டு நுழைவுத் தேர்வின்றி வகுப்பில் சேரலாம்.

விண்ணப்பப் படிவம் மற்றும் சேர்க்கை பற்றிய விவரங்கட்கு, மாணவர்கள் நேரடியாக படிப்பு மையங்களையும் நேரடியாகவோ அல்லது தபால் மூலமாகவோ தொலைதூரக் கல்வி இயக்ககத்தையும் அணுகும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். விண்ணப்பப் படிவங்கள் மற்றும் அனுமதிச் சேர்க்கை தனிப்பட்ட அமைப்புகள் அல்லது நபர்கள் மூலம் வழங்கப்படுவதில்லை. முறைகேடான விண்ணப்பங்கள் நிராகரிக்கப்படும்.

இடம்: அண்ணாமலைநகர்
நாள்: 01.04.1997

டாக்டர். எம்.பி. வெங்கட்ரங்கன்
இயக்குநர்

**படிப்புமையங்கள்**

கல்கத்தா: ☎ 4667215, கோயம்புத்தூர்: ☎ 234406, காரைக்குடி: ☎ 23417, சென்னை: ☎ 8555010, மதுரை: ☎ 741327, நாகர்கோவில் ☎ 30561, புது தில்லி: ☎ 6987638, சேலம்: ☎ 419660, திருநெல்வேலி: ☎ 322923, திருச்சி: ☎ 760950 வேலூர்: ☎ 27647



எந்தத் தொகையல்/ சட்னி அரைத்தாலும் சரி, மிக்ஸியில் இருந்து வழிக்கும் முன் ஒரு கைப்பிடி பொடிப் பொடியாக நறுக்கிய கொத்தமல்லியைச் சேர்த்து ஒரு ரவுண்ட் அரைத்து எடுக்க இன்னும் இரண்டு ரவுண்ட் சாதம் சாப்பிடத் தூண்டும்.

— லக்ஷ்மி ஸ்ரீனிவாசன்

"தீர்க்காயுசா தீர்க்க சுமங்கலியா இரும்மா!" என்று வாய் நிறைய ஆசீர்வாதம் செய்த காமு, "சேகர் எங்கேம்மா?" என்று சுற்றிலும் தேடினாள்.

"குளிக்கப் போனார்மா- இதோ போய்க் கூட்டிட்டு வரச் சொல்றேன்" என்ற ராதா குழந்தை கண்ணனை அழைத்தாள்.

"கண்ணா, இதோ பார் பாட்டி, நமஸ்காரம் பண்ணு!" கீழே விழுந்து நமஸ்கரித்த குழந்தையை அள்ளி அணைத்துக் கொண்டாள் காமு.

அட்டைப்பெட்டியல் இருந்து புது டிரஸ்-ஸ்வீட், பழங்கள் என்று கை கொள்ளாமல் இனித்தாள்.

'கண்ணா- பழத்தை ஸ்வாமி மேடையிலே வெச்சிட்டு, அப்பா பாத்ரூமில் இருந்தா, பாட்டி வந்திருக்கானு சொல்லிட்டு வா" என்று அனுப்பினாள் ராதா.

'டேடி!' என்று குளித்துவிட்டு வந்த சேகரின் கால்களைக் கட்டிக் கொண்டு, "குனிஞ்சுக்கோ டாடி! காதோட ஒரு சீக்ரட் சொல்றேன்' என்றான்.

"என்னடா - குளிச்சுட்டு வரதுக்குள்ள அப்படி என்ன அவசரமா ரகசியம்?" என்று குனிந்தவனின் காதில் "அன்னிக்கு ஹாஸ்பிடல்ல உம்'னு உட்கார்ந்திருந்தாள்தானே, அந்தப் பாட்டி வந்திருக்கா - அம்மா உங்களைக் கூப்பிட்டா." என்றான் கண்ணன்.

சேகரின் முகம் மலர்ந்தது. 'அம்மாவா? இங்கே வந்திருக்கா? அவ வீம்பையும் பிடிவாதத்தையும்விட்டு என்னைப் பார்க்க வந்திருக்கிறாளா?'

அருணாவின் விபத்து பற்றி ஈஸ்வரன் போன் செய்ததும் நொறுங்கிப் போய்விட்டான் சேகர். அவனைத் தேற்றி ஆஸ்பத்திரிக்கு அழைத்து வந்தாள் ராதா - ஒரே பெண் - ஆசையாகவும் செல்லமாகவும் வளர்க்கப்பட்ட பெண் - அவளுக்கு விபத்து என்றதும் மேலுக்கு தைரியமாக இருப்பதுபோல் தெரிந்தாலும் ஈஸ்வரன் ஆடிப்போய்விட்டது அவர் குரலில் தெரிந்தது.

அம்மாவைப் பார்த்ததும் மனம் இளகி வீம்பு தளர்ந்து கைகளைப் பற்றிக் கொண்டான். எரித்து விடுவதுபோல் ஒரு பார்வை பார்த்துவிட்டு, கைகளை உதறிக் கொண்டு போனாள் - இந்த முறை சேகர் தைரியமாகவே இருந்தான். அவனால் முடிந்த உதவி - சின்னச் சின்ன உதவிகள். அப்பாவுக்கும் அருணாவுக்கும் செய்வதில் திருப்தி அடைந்தான்...

"அம்மா!" விரைந்து ஹாலுக்குள் நுழைந்தான். "சேகர் - ராதா - ரெண்டு பேரும் என்னை மன்னிச்சுட்டீங்களா?" என்று இரு கைகளையும் நீட்டி இருவரையும் அணைத்துக் கொண்டாள்.

"என்னம்மா - மன்னிப்பு அது இதுனு பேசிகிட்டு - நாங்க உங்க குழந்தைங்கதானே?"

"சேகர் உங்களையெல்லாம் ஒரு வீம்புலே கஷ்டப்படுத்தினதுக்குக் கடவுள் எனக்கு எவ்வளவு பெரிய தண்டனையைக் கொடுத்துட்டார் பார்த்தியா, அருணா என்ன பாவம் செஞ்சா? அவளைப் பார்த்து நான் கஷ்டப்படணும்னு, எனக்குத் தண்டனையா அவ கஷ்டப்படறா..."

மேலே பேச முடியாமல் தேம்பிய காமுவை "வருத்தப்படாதீங்கம்மா - நீங்க ஒரு தப்பும் பண்ணல்லே- விதியை யார் தடுத்தது நிறுத்த முடியும்? வெறும்ம மனசைப் போட்டு அலட்டிக்காதீங்கம்மா!" என்று தேற்றினான் சேகர்.

"நீ சொல்றது சரிதான் சேகர்! ஆனா, எத்தனை கஷ்டம் வந்தாலும் அதைத் தாங்கின்டு மலை மாதிரி நிமிர்ந்து நிக்கற உங்கப்பா உடைஞ்சு போயிட்டார்டா! என் அகம் பாவத்தினாலும், வீம்பினாலும் அவரையும் இழந்திடுவேனோன்னு பயமா இருக்கு.

நேத்து ராத்திரி நெஞ்சு வலி வந்து துடிச்சுப் போயிட்டாருப்பா - டாக்டர் வந்து பார்த்

தேர்ந்தெடுக்கப்பட்ட எழுத்துக்களுக்கு

# ரூபாய் ஐந்து லட்சம் மதிப்புள்ள உஜாலா பரிசுகள்




## உங்களுடைய கருத்துக்களை எங்களுக்கு எழுதவும்

இப்போது உஜாலாவின் டாம்பர் - புரூஃப் மூடியும், ஃபில்ஃபர் - புரூஃப் டிராப்பரும் ஜோதி ஆய்வுக்கூடத்தில் டிசைன் செய்யப்படுகின்றன. உங்களைப் பாதுகாக்க அவை எவ்வாறு வேலை செய்கின்றன ?

இன்று, தின் லேயர் க்ரோமெடோகிராஃபி (TLC) மற்றும் காஸ் க்ரோமெடோகிராஃபி மாஸ் ஸ்பெக்ட்ரோமெட்ரி (GCMS) பரிசோதனைகளில் முன்னேற்ற நாடான ஜெர்மனியில் தடை செய்யப்பட்டுள்ள அமின்ஸ் இல்லாத ஒயிட்னர் உஜாலா-வுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டிருக்கிறது. சருமத்தில் எரிச்சல் மற்றும் வாயில் பட்டால் விஷத் தீங்கு இல்லை என்று பரிசோதனையில் தெரிகிறது. மேலும் விஷத்தன்மையற்றது. அதோடு, உஜாலா பல இதர தனித்தன்மை வாய்ந்த குணங்களைக் கொண்டுள்ளது. அவை என்ன ?

உஜாலாவை உபயோகிப்பதற்கு சரியான முறை என்ன ?

விஞ்ஞான ரீதியற்ற ஒயிட்னர்களை நீண்ட நாட்களுக்கு உபயோகிப்பது ஆரோக்கியத்திற்கும், உடைகளுக்கும் நல்லதல்ல. ஆகவே அதுபோன்ற தயாரிப்புகளை உபயோகிக்கத் துவங்கியவர்கள் மீண்டும் உஜாலாவையே உபயோகிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.

Write to : **Jyothy Laboratories (UJALA), 2- A, Singarayar Mansion,**
Abhirami Avenue, Meenambal Salai, K. Kannadasan Nagar, Madras - 600 118.

துட்டு 'அதிர்ச்சிதான் - ரெஸ்டா இருந்தா சரியாயிடும்னார் - எனக்கு தனியா இதையெல்லாம் தாங்கிக்க தைரியம் இல்லை சேகர்! உங்கப்பாகிட்ட அழுதேன். என் பிள்ளையை கூட்டிண்டு வா - எனக்கு அப்பதான் சரியாகும். நீ போய்க் கூப்பிட்டாதான் வருவான்னு சொன்னார்.

அவர் சொன்னதும் சரிதானே? நானா தேடிண்டதுதானே இந்த நிலைமை? நான்தான் அதையும் சரி பண்ணனும்னு புறப்பட்டு வந்துட்டேன். இப்பவே என்னோட புறப்பட்டு வரீங்களா? நீங்க வருவீங்கன்னு உங்கப்பா ஆவலோடு காத்து இருப்பார்!"

தன் வீம்பு, பிடிவாதம் எல்லாம் தளர்ந்து தன் முன் அன்புப் பிச்சை கேட்டு நிற்கும் தாயைப் பார்த்து பரிதாபமாக இருந்தது சேகருக்கு.

"அப்பாவுக்கு உடம்பு சரி இல்லை என்று ஏம்மா முன்னாடியே சொல்லல்லை? கிளம்பு ராதா - எழுந்திரும்மா போகலாம்!" என்று உடனே கிளம்பி விட்டான்.

காமுவிடம் அருணாவின் நிலை பற்றி முதலில் ஈஸ்வரன் சொல்லவில்லை. காமு அவர் அன்று ஆஸ்பத்திரியில் இருந்து வந்ததும் ஒரு பிடி பிடித்து விட்டாள்.

"எனக்குத் தெரியாமல் அவங்களோட உறவு கொண்டாடியாறதோ? அருணாவைப் பார்க்க என்ன உரிமையோட அவங்க வந்தாங்க? நீங்கதான் அவங்களுக்கு நியூஸ் ரிபோர்ட்டரா?"

"ஷட்அப்! இத்தனைநாள் உன்னோட ஏச்சுக்கும் பேச்சுக்கும் பயந்து என் பிள்ளையை விட்டுப் பிரிஞ்சு இருந்தது போதும்! இனியும் அப்படி இருக்க மாட்டேன்- இந்த பங்களா, பணம், சொத்து, சுகம், அந்தஸ்து எல்லாத்தையும் நீயே கட்டிண்டு அழு!

என் பிள்ளை என்னைப் பாத்துப்பான் - நா வேண்டிய அளவு சம்பாதிச்சாச்சு - இனிமே யாருக்காக உழைக்கணும்- கம்பெனி, பிசினஸ் எல்லாம் இழுத்து மூடிடறேன். உனக்குப் பணம் - அதனால் வர சுகம், அந்தஸ்து ஒண்ணுக்கும் குறைவிருக்காது.

எனக்குப் பிள்ளையே பிறக்கல்லை. பொண்ணு மட்டும்தான்னு நெனச்சுக்கறேன்னு அன்னிக்குக் கோபத்துலே சொன்னே. இன்னிக்கு அந்தப் பெண் வாழ்க்கையையும் பாழாக்கிட்டியேடி பாவி. நல்ல படியா ராஜா வீட்டு மனுஷங்களோட பழகி அவங்களை புரிஞ்சுக்கட்டும்னு அருணாவை விட்டுட்டுப் போனா, நீ அவ ராஜாவையே வெறுக்கற அளவு துர்போதனை பண்ணியிருக்கே.

அதன் பலன் ஆக்சிடென்ட் - உயிருக்கு ஆபத்து இல்லேன்னாலும் ஒரு உயிரைத் தாங்கி வளர்க்கிற பாக்யம் இல்லாம போயிடுத்துடி - இப்ப உனக்குத் திருப்தியா?"

அவன் தோளைப் பிடித்து உலுக்கினார் ஈஸ்வரன். காமியின் அகம்பாவம், வீம்பு, தற்பெருமை எல்லாம் அந்த ஒரு வார்த்தையில் பொடிப் பொடியாயிற்று. பழைய காமுவாக ஒருகணம் மாறினாள்.

"நீங்க என்ன சொல்றீங்க? அருணாவுக்கு என்ன ஆச்சு?"

குரல் நடுங்கக் காமு கேட்டாள்.

"ஆமாண்டி காமு! ஒரு குழந்தைக்குத் தாயாகிற பாக்கியத்தை அவ இழந்துட்டா. அய்யோ, அருணாவுக்கும் ராஜாவுக்கும் குழந்தையென்றால் எவ்வளவு ஆசை! இதை அருணா எப்படி தாங்கிக்கப் போறா? விபத்துலே கருப்பை சிதைஞ்சு போச்சு - எடுக்காட்டா அவ உயிருக்கே ஆபத்துனு டாக்டர் சொல்விட்டார் - அதுக்குத்தான் ஆபரேஷன்!"

குலுங்கிக் குலுங்கி அழுதார் ஈஸ்வரன். காமு அரண்டு போனாள். ராஜா வருவதற்கு



வடாம் செய்வதில்தான் எவ்வளவு தினுசு. அவல் வடாம் சூபர்டேஸ்ட். புளிப்பு மோரில் சுத்தம் செய்த அவலை ஊற வைக்கவும். பிறகு அதில் பச்சை மிளகாய் உப்பு இரண்டையும் மிக்ஸியில் அரைத்துப் போட்டு, நன்றாக ஊறியவுடன் அவலுடன் கலந்து, லேசாக உருட்டி வைக்கவும். நன்றாகக் காய்ந்ததும் எடுத்துப் பொரித்தால், கமகமவென்று நன்றாக உள்ளது. அடுப்பில் வைத்துக் கிளற வேண்டாம். ரொம்ப ஈஸி.

— சித்ரா ஸ்ரீதர்

அரிசி நாலு பங்கு, ப. பருப்பு, உ. பருப்பு, க. பருப்பு, து. பருப்பு நாலும் சேர்ந்து ஒரு பங்கு போட்டு, மிஷினில் நைஸாக அரைக்கவும். வேண்டும்போது, உப்பு, பெருங்காயத்தூள் போட்டுக் கரைத்து வார்த்தால், மெல்லிய ரோஸ்ட் மணத்துடன் கிடைக்கும்.

— ஆர். பார்வதி



முதல் நான் இரவு முழுவதும் 'நீ விட்டுக் கொடுக்காதே-பிடிவதாமா இரு. பொண்டாட்டி வேணும்னா வந்துதானே ஆகணும். ஏர்போர்ட்டுக்குப் போகாதே- தன்னாலே ஓடி வருவான்' என்றெல்லாம் போதனை செய்ததன் பலன் - ஏர்போர்ட்டுக்கு வரல்லை என்று ஆணவமாக முகத்தில் அடித்ததுபோல், ரவியிடம் பேசினான் அருணா.

நேரம் நெருங்க - நெருங்க அருணாவின் மனம் ராஜாவைப் பார்க்க வேண்டும் என்று பறந்தது. காரை எடுத்துக்கொண்டு, அவள் கிளம்பியபோது காமு ஏளனமாகச் சிரித்தாள்.

ரோஷத்துடன் 'நீ வேணா பாரு மம்மி! அவரை நா இங்கே அழைச்சிண்டு வரேனா இல்லையானு! அப்ப சொல்லு அருணா யாருன்னு- ராஜாவுக்கும் தெரியும்!' என்று சொல்லிவிட்டுப் போனாள் அருணா- உயிர்ப் பிழைத்து நல்லபடியா வந்துட்டாள்னு நெனைச் சோமே! இதென்ன பேரிடி!

முனகும் சப்தம் கேட்டு திரும்பிப் பார்த்தால் ஈஸ்வரன் மயக்கமாகி இருந்தார் - டாக்டர் பி.பி அதிகமாகி இருக்கிறது என்று தன்னுடைய நர்சிங்ஹோமில் அட்மிட் செய்து கொண்டார். மயக்கம் தெளிந்ததும் அவர் பேசிய முதல் வார்த்தை,

"காமு - சேகரை வரச் சொல்லி போன் பண்ணு! நம்பர் என் டயரியில் இருக்கு. நீ தனியா நிக்கறதைப் பார்த்தா கஷ்டமா இருக்கு. தலைக்கு ஒசந்த பிள்ளை இருக்க, நீ ஏன் தனியா தவிக்கணும்- எத்தனை நாள் இருக்கேனோ அது வரைக்கும் குழந்தைகளோட நிம்மதியா இருக்க ஆசைப்படறேன்!"

"ப்ளீஸ் - நீங்க எதையும் நினைச்சு மனசை அலட்டிக்காதீங்க - உங்களுக்கு ஒண்ணுமில்லைனு டாக்டர் சொல்லிட்டார் - சந்தோஷமா இருங்க - நான் போய்ச் சேகர், ராதா-குழந்தைகளை அழைச்சிண்டு வரேன். அந்தக் குழந்தைகளைச் சொல்லாலும் செயலாலும் சித்திரவதை படுத்தின நானே பாவமன்னிப்பு கேட்டு கூட்டிண்டு வரேன்!"

"காமு! நீ இப்பதாண்டி என் பழைய காமு- டிரைவருக்கு இடம் தெரியும் - சீக்கிரம் போய்க் கூட்டிண்டு வா!" என்று அவள் கைகளைப் பிடித்துக் கொண்டார்...

**வீ**ட்டுக்குப் போகலாம் என்று டாக்டர் சொன்னதில் அருணாவுக்கு ரொம்ப சந்தோஷம். கால் கட்டு மட்டும் பிரித்தாகி விட்டது. இரண்டு நாளாக நாஸ் கைத் தாங்கலாக அழைத்து வர ஆஸ்பத்திரியைச் சுற்றி நடக்கிறாள். இத்தனை நாள் படுத்திருந்ததில் கால் கொஞ்சம் நடுங்குகிறது.

கொஞ்ச நாள் வாக்கரின் உதவியுடன் நடந்தால் சரியாகிவிடும் என்று டாக்டர் சொல்கிறார் -

ராஜாவும் டாக்டரும் உள்ளே நுழைந்தார்கள்.

"என்னம்மா அருணா- இன்னிக்கு நீங்க வீட்டுக்குப் போகலாம். அதுக்கு முன்னாடி நான் உங்ககிட்டே கொஞ்சம் பேசணும்!" என்றார் டாக்டர்.

கேள்விக்குறியுடன் ராஜாவைப் பார்த்தாள். இன்னமும் இவர் சொல்ல, என்ன இருக்கிறது?

அவள் கண்களைச் சந்திக்க முடியாமல் தலையைக் குனிந்து கொண்டான். கண்களில் பொங்கும் நீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை அவனால்.

"வீ ஆர் சோ சாரி அருணா - விபத்துலே உங்கக் கருப்பை சிதைஞ்சு போயிட்டதாலே, அதை ரிமூவ் பண்ணும்படி ஆயிடுச்சு. அதை அப்படியே விட்டா உங்க உயிருக்கு ஆபத்து. அப்ப அதைத் தவிர வேறு வழியில்லை- உங்

SmithKline Beecham



குழந்தைங்க சாப்பிடாம **அடம்பிடிப்பாங்கதான்!**

எம் பையன் அர்ஜூன், வயிறு நிறைய சாப்பிட்டானா அதுவும் சரியானத சாப்பிட்டானான்னு எனக்கு எப்பவுமே கவலையாக இருந்தது.

நான், டாக்டரை பார்த்து இதுக்கு என்ன செய்யலாம்னு கேட்டது ரொம்பவே நல்லதா போயிடுச்சு.

அப்போதான் தெரிஞ்சது, 1-லிருந்து 3 வயசு குழந்தைங்களுக்கு **ஸ்பெஷல் ஊட்டச்சத்தோட தேவை** இருக்குன்னு. இந்த வயசுல அவங்க எவ்ளோ வேகமா வளர்றாங்க!

அப்புறம்தான் *Junior Horlicks* பத்தி எனக்கு தெரிய வந்தது.

பால், கோதுமை, மால்டட் பார்லி இதெல்லாம் சேர்த்து சின்ன குழந்தைகளுக்குன்னு தனித்தன்மையா, **இயற்கையான** முறையில இத தயாரிச்சிருக்கிறதால, **ஈஸியா ஜீரணமாகுது.**

அதோட, இதுல **எக்ஸ்ட்ரா கால்ஷியம், எக்ஸ்ட்ரா அயர்ன்,** முக்கிய விட்டமின், புரோட்டீன் எல்லாம் இருக்கு.

தயார் பண்றதா? ரொம்ப ஈஸிங்க! பால்ல கலந்து அப்படியே குடுக்கலாம். தெனமும் ரெண்டு தடவை.

**ஸ்பெஷல் 1·2·3 ஊட்டச்சத்து**

உண்மையா சொன்னா, மனசு சந்தோஷப்படறப்போ, எனக்கு இதத்தான் சொல்லத் தோணுது...




# க்யூ,

HTA.5512.97 TAM

களுக்கு நினைவு திரும்பல்லை.

அதனால அப்ப அதை உங்களிடம் சொல்ல முடியல்லை - உங்கள் ஹஸ்பெண்ட் மற்றவர்கள் அனுமதியோட செய்யும்படி ஆயிற்று - அவங்களும் நீங்க பிழைச்சா போதும்னு அனுமதி கொடுத்துட்டாங்க. இது வரை உங்க உடம்பு நிலை தேறட்டும்னு சொல்லல்லை.

ஆனா நீங்க இங்கிருந்து போறதுக்குள்ளே அதைச் சொல்ல வேண்டியது எங்க கடமை. உங்களிட்ட இப்பவே உண்மையைச் சொல்லி பக்குவப்படுத்தறது பெட்டர்னு தோணிச்சு. இதை பெரிய இழப்பா இருந்தாலும் அப்படி நினைக்காம தாங்கிக்கற சக்தியைக் கடவுள்தான் தரணும்."

டக்-டக் என்று ஷூக்கள் தாளமிட, அவர்கள் இருவரும் தனிமையில் இருக்கட்டும் என்று டாக்டர் வெளியே நடந்தார். ஸ்தம் பித்துச் சிலையாக நின்றாள் அருணா.

தளத்துடன் அந்த அறையே தன் மேல் விழுந்து விட்டதைப் போல் உணர்ந்தாள். ராஜா முகம் வாடி அலைவது இதனால்தானா?

ஒவ்வொருவராக எல்லார் முகமும் ஊர் வலம் வந்தது அவள் கண்முன். 'பேபி-ஹௌ டு யூ ஃபீல்?' என்று பழம், பிரட், புத்தகங் களுடன் வரும் அம்மா- 'இந்தாம்மா - கோவில் பிரசாதம்!' என்று தமிழ்நாட்டுக் கோயில் ஒன்று விடாமல் பூஜை பண்ணி நெற்றியில் குங்குமம் இடும் மாமனார்.

"அப்படியே படுத்துக்கோ, அம்மாடி- நா வாயில ஊட்டி விடறேன்- வாய்க்குப் பிடிச் சிருக்காம்மா!" என்று தான் பெற்ற குழந்தை போல் சீராட்டி சாதம் ஊட்டும் மாமியார். பெட்பேன் வைக்கணும் என்றால்கூட நர்சைத் தேடி ஓடாமல் விரைந்து உதவும் விஜி.

இன்னும் சிரிக்கச் சிரிக்கப் பேசி பொழுதை இன்பமயமாக்கும் விது, பிரியா, ரமேஷ்- உடன்பிறவாத தங்கைகள் போல் கூடவே இருந்து புத்தகம் படித்துக் காட்டி, உதவும் வனஜா - கிரிஜா.

"இப்ப எப்படிம்மா இருக்கு?" என்று தினம் ஒருமுறை வந்து அரைமணி நேரம் உட்கார்ந்து பேசி விட்டுப் போகும் ரவி - இன்னும் சேகர்-ராதா- குழந்தைகள்.

அந்த ஆஸ்பத்திரியிலே பிறந்த பெண் குழந் தையுடன் வந்து வந்து போகும் ரம்யா - அந்தப் பிஞ்சுக் குழந்தை, அதன் பூப்போன்ற கால் களையும் கைகளையும் அருகில் விடச் சொல்லி தொட்டுப் பார்த்து மகிழ்வாளே! அந்தப் பாக்கியம் இனி இவளுக்குக் கிடை யாதா? இனி அவள் உயிர் பிழைத்துத்தான் என்ன பயன்?

கதவைத் தாளிட்டுக் கொண்டு அவள் அரு கில் வந்து உட்கார்ந்தான் ராஜா. அப்படியே அவன் மடியில் படுத்துக் குலுங்கினாள். 'மனதில் உள்ள பாரம் கரையும்வரை அழுது தீர்க்கட்டும்!' என்று அவனும் மௌனமாக இருந்தான்.

"ராஜா- என்னைக் கல்யாணம் செய்து கிட்டு ஒரு சுகமும் இல்லை உங்களுக்கு. நான் உங்க வாழ்க்கையில் குறுக்கிடாமல் இருந்தால்- உங்க வாழ்க்கையாவது நன்றாக இருந் திருக்கும்"

அழுதபடி சொன்னாள் அருணா. அவள் வாயைப் பொத்தினான் ராஜா.

"அசடு மாதிரி பேத்தாதே அருணா- நீ இல்லாம ஒரு வாழ்க்கையே எனக்கு இல்லை. குழந்தை இல்லாட்டி என்னடா, எனக்கு நீ - உனக்கு நான் போதுண்டா - நீ உயிரோடு இருக்கியே, அதுக்கே கடவுளுக்கு தாங்க்ஸ் சொல்லணும்." என்று அவன் கண்ணீரைத் துடைத்தான்.

"ராஜா- நீங்க இன்னொரு கல்யாணம் பண் ணிண்டா என்ன?" என்றாள் திடீரென்று.

ராஜா சிரித்தான்.

"இப்படி ஏதாவது எனக்கு ஆகியிருந்து குழந்தை பிறக்க வாய்ப்பில்லேன்னா, நீ இன்னொரு கல்யாணம் பண்ணிக்கிட்டிருப் பியா? ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதியா அருண்? உனக்குனு பிறந்தா ஒன்னோ



நீங்கள் தலைக்கு எண்ணெய் தேய்த்து குளிப்பவராக இருந்தால், சீகைக்காய் பொடியுடன் ஒரு கரண்டி புளித்த தயிர் சேர்த்துக் கொள்ளுங்கள். தலைமுடி மிருதுவாக இருப்பதுடன், தயிர் சிறந்த கண்டிஷனரும்கூட!

— பி. ஜெயா

ரெண்டோதானே பிறக்கும்- உலகத்துலே இருக்கிற எல்லாக் குழந்தைகளையும் நம்ம குழந்தைகளா நெனைச்சுக்கோ - அப்ப வருத் தமே இருக்காது."

அருணா சிலிர்த்துப் போனாள். 'வாழ் வதில் என்ன பயன்னு நெனைச்சோமோ... இதோ இந்த ராஜாவுக்காக - கள்ளமில்லாமல் அன்பைச் சொரியும் கணவனுக்காக. சற்று முன்மனதில் ஊர்வலம் வந்த அத்தனை பேருக் காகவும் அவள் வாழ வேண்டும்.'

**ம**ங்களத்தின் நிலைமையில் நல்ல மாறு தல் தெரிந்தது.

ஆரம்பத்தில் கிரிஜாவைப் பார்த்ததும் எழுந்து கழுத்தை நெறிக்கவே வந்துவிட்டாள். நர்சும் மற்றவர்களும் வந்து கஷ்டப்பட்டு விடு வித்தனர்.

"பாவி! நீதானே நகையெல்லாம் கொண்டு போனே! சொல்லுடி! என்ன பண்ணினே? பாவம் ரம்யா - அவளோடதையும் கொண்டு போயிட்டியே!" என்று புலம்பினாள்.

"லாக்கரில் வைக்கச் சொல்லி நீதானேம்மா எங்கிட்ட கொடுத்தே - பத்ரமா இருக்கு - நா ஸ்கூல் கேர்ள்ஸோட வடக்கே பம்பாய், டில்லினு டூர் போகணும்னு சொல்லி நீ தானேம்மா பணம் கொடுத்து அனுப்பி வெச்சே!" என்று டாக்டர்கள் சொன்னபடி கிரிஜா சொல்ல கொஞ்சம் அமைதியானாள்.

வரவர நல்ல குணம் தெரிந்தது - இப்பொ தெல்லாம் அழுது புலம்புவதில்லை- சூழ்நிலை புரிகிறது.

"என்னை ஏன் இங்கே படுக்க வெச்சிருக்கு. எனக்கு ஒரு உடம்பும் இல்லை. நாம ஏன் மெட்ராசிலே இருக்கோம்? இன்னும் எத்தனை நாள் இருக்கணும்? அங்கே சங்கர் சாப் பாட்டுக்கு திண்டாடுவானே- கோபியும் ரமணி யும் என்ன செய்யறாங்களோ - பாவம்- நீயும் வந்துட்டியே" என்றாள் வனஜாவிடம்.

"சங்கருக்கு இங்கேயே மாத்தியாச்சும்மா - கோபியும் ரமணியும் வீட்டைப் பாத்துப்பாங்க. ரம்யா மன்னிக்கு பெண் குழந்தை பிறந்திருக்கு- அதைப் பார்க்கத்தான் நானும் சங்கரும் வந் தோம்- கிரிஜா டூரிலேயிருந்து நேரே இங்கே வந்துட்டா உன்னைப் பார்க்க!" என்றாள் வனஜா.

ரம்யா குழந்தையைக் கொண்டு காட் டியபோது தூக்கிக்கூட கொஞ்சினாள். வந்தவர்களை எல்லாம் அடையாளம் புரிந்து பேசினாள்.

"நல்ல முன்னேற்றம் தெரிகிறது. கொஞ்ச நாளைக்கு மருந்தை மட்டும் தொடர்ந்து சாப் பிட்டுக் கொண்டு அடிக்கடி வந்து பார்த்தால்



சாம்பார் பொடி அரைக்கும்போது, மற்ற சாமான்களுடன் கருவேப்பிலையையும் சேர்த்து அரைத்தால் சாம்பார் நல்ல மணமாக இருக்கும். உடலுக்கும் நல்லது. முற்றின கருவேப் பிலையை கழுவி உலர்த்தி, வெறும் வாணலியில் வறுத்துக் கொண்டு மற்ற சாமான்களுடன் சேர்க்க வேண்டும்.

— கீதா விஸ்வநாத்

போதும். பழசெல்லாம் மனசிலிருந்து அழிச்சாச்சு. அதை ஞாபகப்படுத்தற மாதிரி எதையும் பேசவோ, செய்யவோ வேண்டாம். வீட்டுக்கு அழைத்துப் போகலாம்" என்று டாக்டர் சொல்லிவிட்டார்.

சங்கருக்கு மாறுதல் கிடைத்து விட்டது. பக்கத்திலேயே ஒரு வீடு வாடகைக்குப் பார்க் கப்பட்டது. 'குழந்தை கொஞ்சம் பெரிதாகும் வரை, மங்களத்தின் உடல்நிலை கொஞ்சம் தேறும் வரை, வனஜாவின் பிரசவம்வரை எல் லாரும் ஒன்றாக இருந்துவிட்டுப் போகலாம்' என்று மதுரம் அபிப்ராயப்பட்டாள்.

**டி**.வியில் நிகழ்ச்சி பார்த்துவிட்டு, பேசிக் கொண்டிருந்தார்கள் சங்கர், கோபி, ரமணி, ரமேஷ் எல்லோரும்.

மதுரையில் இருந்து சாமான்களை லாரியில் போட்டுவிட்டுக் கையில் கொஞ்சம் சாமான்களுடன் சங்கர், சனி, ஞாயிறு இரண்டு நாள் லீவுடன் இன்னும் இரண்டு நாள் லீவு போட்டுவிட்டு கோபியும் ரமணியும் உதவி



**வெஸ்டர்ன் டாய்லெட் உள்ளவர்கள், ஃப்ளஷ் டேங்க்கின் உள்ளே தண்ணீரில் மூழ்குமாறு தேய்ந்த சோப் துண்டுகளை அடியில் துளையுள்ள சோப்புப் பெட்டியில் வைத்துக் கட்டித் தொங்கவிட்டால் டாய்லெட் "பளிச்" நறுமணமும் பாத்ரூம் முழுவதும்.**

**- அனுராதா**

செய்தனர். மங்களத்தைப் பார்த்துவிட்டு வரலாமென்று அவர்களும் வந்திருந்தனர்.

புது வீட்டில் சாமான்களை இறக்கி, செட்டில் பண்ணியாச்சு. படுப்பதற்கு முன் மொட்டை மாடியில் அமர்ந்து நால்வரும் பேசிக் கொண்டிருந்தபோது- எங்கெங்கோ பேச்சு சுற்றி வனஜாவிடம் திரும்பியது.

"நம்ம வனஜாகூட தெரியாம ஏமாந்து போயிட்டா. ஆனா உண்மை தெரிஞ்சா எவன் அவளைக் கல்யாணம் பண்ணிக்க முன் வருவான்? அவ என்னமோ குழந்தையையும் பெத்துண்டு அவளே வளர்க்கப் போகிறதா சொல்றா.

உண்மையைச் சொல்லி அதுக்கப்புறமும் தேவலைனு யாராவது குழந்தையோட அவளை ஏத்துக்க முன் வந்தா, அப்ப கல்யாணம் பண்ணிப்பாளாம்! நடக்கிற காரியமா இது?" என்றான் சங்கர் வருத்தத்துடன்.

"சங்கர்! வனஜா இஷ்டப்பட்டா நா அவளைக் கல்யாணம் பண்ணிக்கறேன். குழந்தையைப் பத்தி எனக்கு எந்த வருத்தமும் இல்லை" என்றான் ரமணி.

"உளறாதே - மாமாவுக்குத் தெரிஞ்சா கொன்னுடுவார் - நாங்கதான் எங்க பெண்ணை உன் தலையில கட்டறதுக்காக, கூடக் கொண்டுபோய் வெச்சுகிட்டோம்னு சத்தம் போடுவார்!"

"போடட்டுமே சங்கர்! நா உறுதியா இருக்கேன். சம்மதப்பட்டா வந்து ஆசீர்வாதம் பண்ணட்டும்! இல்லைன்னா அவர் வராமலே கல்யாணம் நடக்கும்!" என்றான் உணர்ச்சி பொங்க ரமணி. வனஜாவை இதுநாள் வரை அவளுக்கே தெரியாமல் தான் விரும்பியதும், இது ஏதோ அவசர முடிவு அல்லவென்றும், நல்லபடியாக அவளோடு வாழ்வேன் என்றும் உறுதிபடச் சொன்னான் ரமணி. வனஜாவிடம் சொல்லி அவளை சம்மதிக்க வைப்பதற்குள் போதும் போதுமென்றானது. குழந்தை பெறு முன் அனைவரின் ஆசியோடு வீட்டினுள் எளிமையாக திருமணம் செய்து கொண்டார்கள்.

"ரமணி, உன்னை மாதிரி ஒரு புருஷன் கிடைக்க ரொம்பக் கொடுத்து வெச்சிருக்கணும். காலடியில் இருக்கிற மாணிக்கத்தோட மகிமை தெரியாம, தூரத்தில் தெரியற கானல் நீரைத் துரத்திண்டு ஓடினேனே! அப்ப என் கண்ணை மறைச்சது காதல் மாயை - இப்ப உன்னை - உன் நல்ல மனசை- உன் உணர்ச்சிகளை எல்லாத்தையும் நா நேசிக்கிறேன், ரமணி!"

ரமணி நீட்டிய கைகளைத் தன் உள்ளங்கையில் பற்றி அடக்கிக் கொண்டாள். விம்மல் வெடித்துக் கொண்டு வந்தது.

"அசடு, எல்லாம் தான் நல்லபடியா முடிச்சாச்சே! இன்னும் எதுக்கு அழறே?" என்று சமாதானம் செய்தான் ரமணி!

"ரமணி- அந்தவேளை வந்துடுத்து போலிருக்கு- இடுப்பில் பளீர்னு வலி! அ-ம்-மா! ரமணி மன்னியைக் கூப்பிடேன்" என்று துடித்தாள்.

ரமணி போய்ச் சொன்னதும் விஜியும் மதுரமும் ஓடி வந்தார்கள். மகாதேவன் காருக்கு ஓட, விஜி நர்சிங்ஹோம் போக வேண்டிய சாமான்களை பேக் செய்ய, மதுரம் வனஜாவை மெதுவாக நடத்தி பூஜை அறைக்கு அழைத்து வந்து, "நமஸ்காரம் பண்ணிக்கோம்மா- ஸ்வாமி, உனக்கு ஒரு குறைவும் வைக்க மாட்டார்!" என்றாள்.

அழகிய ஆண் குழந்தையைப் பெற்ற வனி, மனமுவந்து அருணாவிற்கு அந்தக் குழந்தையை தத்து கொடுத்தாள். அனைவரின் அன்பிலும் மெய் சிலிர்த்துப் போன அருணா தன் வாழ்வின் பயனே அக்குழந்தைதான் என்பது போல அள்ளி அணைத்துக் கொண்டாள். கிரிஜா அனைத்தையும் மறந்து படிப்பைத் தொடர்ந்து அதில் மூழ்கிப் போனாள்.

பணம், போலி கௌரவம், தகாத ஆசை எனும் புயல்கள் எல்லாம் ஓய்ந்த நிலையில் அன்பையும், கருணையையும் மட்டுமே ஆதாரமாகக் கொண்டு அந்த மூன்று குடும்பங்களுமே அமைதியாக வாழ ஆரம்பித்தார்கள். அத்தனைக்கும் காரணமாக இருந்து அன்பினால் மட்டுமே அனைத்தையும் சாதிக்க முடியும் என்பதை வாழ்ந்து காட்டிய மகாதேவனும், மதுரமுமே அனைவருக்கும் கண்கண்ட தெய்வங்கள் ஆனார்கள்.

(முற்றும்)

# கல்வித்தலம் அனைத்தும் கோயில் செய்குவோம்!



• ஹேமா சின்னிகிருஷ்ணன்

**ஆச்சு, பள்ளிக்கூடங்கள் திறந்து கொண்டே இருக்கிறார்கள். குழந்தைகள் நன்றாகப் படித்து நிறைய மார்க் வாங்க அவர்களை விரட்ட நாம் தயாராகிக் கொண்டே இருக்கிறோம். சரிதான், தப்பில்லை. அதே சமயம் அவர்கள் நல்ல பண்புகளுடனும் வளர அதற்கும் அவர்களுக்குப் பயிற்சி கொடுப்போம்.**



• விஜயலட்சுமி

"நாங்கள் பத்தாவது, பதினோராவது வகுப்பு மாணவர்களிடம் பேசிக் கொண்டிருந்தோம். 'உங்களுடைய வாழ்க்கையின் லட்சியம் என்ன' என்று கேட்டபோது, 'வெகு சீக்கிரம் பணம் சம்பாதிக்க வேண்டும்' என்று சொன்னபோது அதிர்ச்சியாக இருந்தது."

என்கிறார் பாபா மெட்ரிகுலேஷன் ஹையர் செகண்டரி ஸ்கூல் என்ற கடலூரின் மிகப் பெரிய பள்ளியின் பொறுப்பாளரும் ஆலோசகருமான திருமதி விஜயலட்சுமி. 'ஏன் அப்படிச் சொன்னார்கள்?'

"அதையும் கேட்டேன். நிறைய பேர் கார், செல்லுலோர் என வைத்திருக்கிறார்கள். நாங்களும் அவற்றையெல்லாம் வாங்க வேண்டும் அதற்காகத்தான் என்றார்கள். நம்முடைய இளைய சமுதாயத்தினிடம் இன்றைய பொருளாதார தாராளமயமாக்கல் கொள்கை எத்தகைய பாதிப்பை ஏற்படுத்தி இருக்கிறது! ஆனால் எல்லோரும் பணத்தின் பின்னால் அலைபவர்களா என்று பார்த்தால் அதுவும் இல்லை. பலருக்கும் மிகத் தெளிந்த நோக்கங்கள் இருக்கின்றன. நாம் கூட அந்த அளவிற்குப் பக்குவப்பட்ட மனதுடன் சிந்திப்போமா என ஆச்சர்யப்படும் அளவிற்குத் தெளிவு இருக்கிறது..."

என்கிறார். கல்வித்துறையில் ஏதேனும் புதுமையைச் சாதிக்க வேண்டும் என்பதற்காகவே நிறைய கல்வி நிலையங்களைப் பார்ப்பது, தானும் பயிற்சி எடுத்துக் கொள்வது, ஆசிரியர்களுக்குப் பயிற்றுவிப்பது என கல்வி நிறுவனங்களை ஒரு தவச்சாலையாகவே



தயங்கியவர்கள் இப்போது மாதம் ஒரு கூட்டம் போதாது எனச் சொல்லும் அளவு வந்து விட்டார்கள்.

இந்தக் கலந்துரையாடல் அவர்களுக்கு மிகுந்த பயனைக் கொடுக்கிறது. பல பிரச்னைகள் அங்கு அலசப்படும். படிக்காத குழந்தையை எப்படி படிக்க வைத்தார் என்பதிலிருந்து கணவன் மனைவி பிரச்னைகள் வரை எல்லாம் பேசுவார்கள். இதனால் பல விஷயங்களை அவர்கள் தெரிந்து கொள்வதால் குடும்பத்தையும் சீராக வைத்துக் கொள்கிறார்கள். குழந்தைகளின் படிப்பிலும் இவை பிரதிபலிப்பதைக் காணலாம்."

"கம்ப்யூட்டரின் மூலமாகவே பாடம் நடத்துவது எங்கள் பள்ளிதான்" என்கிறார் இப்பள்ளியின் 'கரெஸ்பாண்டெண்ட்' திருமதி ஹேமா சின்னிகிருஷ்ணன்.

"எல்லா வகுப்பு மாணவர்களுக்குமே இந்தப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இது அவர்களுக்கு சுவாரஸ்யமாக இருப்பதால் படிக்கும் திறன் அதிகமாகிறது" என்கிறார் இவர்.

நினைத்து பாடுபட்டு வருகிறார் இவர்.

"வேல்யூ பேஸ்ட்" எஜுகேஷன் இருக்க வேண்டும் என்பதுதான் எங்கள் கொள்கை. அதனால்தான் கோவையின் புகழ்பெற்ற சின்மயானந்தா பள்ளி நிறுவனர்களின் சிந்தனையாளர்களிடம் பயிற்சி பெற்ற சண்முகானந்தத்தை எங்கள் பள்ளியின் முதல்வராக்கினோம்.

இப்போது சிறு குழந்தைகளுக்கு ஒரு கிலோவிற்கு மேல் பாடச்சுமை இருக்கக்கூடாது என அரசு உத்தரவு போட்டுள்ளது. நாங்கள் புத்தகச் சுமையே இல்லாத பள்ளிக் கல்வியை இந்த ஆண்டு முதல் அறிமுகப் படுத்துகிறோம். அதாவது அவர்கள் வீட்டிலிருந்து புத்தகங்களை எடுத்து வரவோ, கொண்டு செல்லவோ வேண்டாம். பள்ளியிலேயே பாடங்கள் அனைத்தையும் படிக்க வேண்டும். புத்தகங்கள் அனைத்தும் பள்ளியில் இருக்கும். ஹோம் ஒர்க் கிடையாது. ஆனால் இந்தப் புதுமையை எல்லோரும் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள் என்பதால் தனிசெக்ஷனாக ஆக்கி உள்ளோம்" என்கிறார் விஜயலட்சுமி.

"குழந்தைகளை நல்ல பள்ளியில் சேர்த்து விட்டால் பெற்றோர்களின் கடமை முடிந்து விட்டது என நினைக்கிறார்கள். ஆனால் வீட்டில் பிரச்னைகள் இருக்குமானால் குழந்தைகள் பள்ளியில் எப்படி நிம்மதியாக படிக்க முடியும்? அதனால்தான் மாதம் ஒருமுறை தாய்மார்களை வரவழைத்து அன்று எது வேண்டுமொனாலும் பேசலாம் என வைத்தோம். ஆரம்பத்தில் வரத்

"இளைய தலைமுறையினரிடம்தான் இந்தியாவின் எதிர் காலம் இருக்கிறது. அவர்களுக்கு ஆதர்சமாக இருப்பது பள்ளிகளும், ஆசிரியர்களும்தான். அவர்கள் சரியாக வழிகாட்டுவார்களேயானால் குழந்தைகள் நல்ல பண்புகளின் அடிப்படையில் வளருவார்கள். எனவேதான் பள்ளிக் கூடங்கள் தெய்வீகம் நிறைந்த ஆலயங்களைப் போல இருக்க வேண்டும்.

இதனால்தான் நாங்கள் ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும் போதும் குழந்தைகள் படிப்பதோடு, நாட்டின் மிகச் சிறந்த குடிமகனாக வளர என்னென்ன எல்லாம் செய்ய வேண்டும் என்று சிந்தித்து அதற்கேற்ப எங்கள் பணிகளைத் திட்டமிடுகிறோம்! 'பட்ஸ் அண்ட் ப்ளாசம்' என கிண்டர்கார்டன் பள்ளி வைத்து 'மாண்டிசோரி' முறையில் சொல்லிக் கொடுப்பதெல்லாம் இந்த முயற்சிகளின் ஒரு பகுதியே" என்கிறார் விஜயலட்சுமி.

பேட்டி : **சியாமளா**

# சொல்ல விரும்புகிறோம்...

# சுஜிக்குட்டி ஞாபகம்தான் வரும்!

❖ 'பண ஆசையினால் மனித மனங்கள் பாழ்பட்டுப் போகின்றன.... ஆடம்பர அவலம் அன்புதனைக் கொன்று வருகின்றன' என்ற கருத்தை உணர வைத்த ஆசிரியர் மஞ்சுளா ரமேஷ் அவர்களுக்கு நன்றி பாராட்டி மகிழ்கிறேன். மனித நேயம் வளர பாடுபடுவோம்.

திருவல்லிக்கேணி, எல்.எம். மங்கை.

❖ 'அழகுக்கு அழகு' செய்ய என்ற தலைப்பில் அழகு மற்றும் நகை அலங்கார நிபுணர் ஹேமா லக்ஷ்மண் எழுதிய கட்டுரையை படித்து மகிழ்ந்தேன். உடலுக்கும் மனதிற்கும் தேவையான உடற்பயிற்சியை செய்து கொண்டு நல்ல சத்துள்ள உணவை சாப்பிட்டுக் கொண்டு எப்படி நம் உடல் அழகை மேலும் அழகு படுத்திக் கொள்ளலாம் என்பதை மிக அழகாக எடுத்துரைத்துள்ளார்.

தாத்தையங்கார்பேட்டை, எஸ். புவனேஸ்வரி.

❖ ரயில் பயணங்களில் கட்டுரை உபயோகமானது. விடுமுறை என்பதால் இந்த மாதம் நிறைய பயணங்கள் நிகழலாம். ரயில் பயணத்தின்போது நாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும், நம் வசதிகளை எப்படி அதிகரித்துக் கொள்ள வேண்டும் என்பதை அனுபவ பூர்வமாக ஆக்கப்பூர்வமாக எழுதியுள்ளார். மிகவும் பயனுள்ள விதத்தில் அமைந்திருந்தது.

லால்குடி, கெஜலெட்சுமி ராஜேந்திரன்.

❖ பி.ஜே. ரவிராஜின் 'வாஸ்து எனும் புதையல்' மிகச் சிறப்பாக உள்ளது. ஃபென் சுயி வரைப்படம் விளக்கும் பகுதிகளையும் பலன்களையும் பார்க்கும் போது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. பழமையும், புதுமையும் இணைந்து கை கோர்த்துக் கொண்டால் நம் நாட்டில் பொருளாதார பிரச்னை, சமூக பிரச்னை பெரிதளவில் குறைந்து விடுமே.

சென்னை-41, ராணி உலகநாதன்.

❖ இளமைப் பருவ கால பெண் மனம் விரசமாய் அலையாமல், இச்சைக்குக் கட்டுப் பட்டு வேலி போட்டு திடமாக உருவாக வழி சொன்ன டாக்டர் எஸ். ஜெயராம் அவர்களுக்குக் கரம் கூப்பிய நன்றிகள்.

சென்னை-20, மெ. அபிராமி.

❖ இன்றைய காலகட்டத்தில் பைனான்ஸ் செய்யும் கம்பெனிகள் அழியும் நிலையில், ரெடிமணி போன்ற நல்ல நிறுவனங்கள் மக்களை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்கிறது. கவலைப்படாமல் சேமியுங்கள் சேமிப்பதற்கு நல்ல கட்டுரை.

அம்பத்தூர், ந. செந்தில் குமார்.

❖ "வெண்ணிலவும், சுஜிக்குட்டியும்" மிகவும் எளிமையான அதே சமயம் வினாடிக்கு வினாடி ஆர்வத்தை அதி கரித்துப் படிக்கத் தூண்டியது. கதை என்று பார்த்தால் எதுவுமில்லை என்று சொல்லி விடலாம். ஆனால் சம்பவங்களின் தொகுப்பை ம்ருது பாஷினி கோர்வையாகச் சொல்லிக் கொண்டு போகிறார். ஒருவேளை அவர் ஒரு புதுமுக எழுத்தாளராக இருப்பின் அவருக்கு என் இரட்டை வாழ்த்துக்கள். இனிமேல் நான் வெண்ணிலவே பாட்டு கேட்க நேர்ந்தால் எனக்கு சுஜிக்குட்டியின் ஞாபகம் தான் வரும்.

மதுரை-3, எஸ். சுந்தரராஜன்.

❖ "பணம் காய்ச்சி மரம்" படித்தேன். வெளிநாட்டில் சென்று பணம் ஈட்டும் இளைஞனின் மன உணர்ச்சிகளை வெளிக் கொணர்ந்தது அருமை.

ஆனால் அதிலும் சில பேர்கள் இருக்கிறார்களே அலட்டல் பேர்வழிகள். தாங்கள் ஏதோ வெளிநாட்டிலேயே பிறந்து வளர்ந்தது போலவும், நம் ஊர் வெயிலையே அனுபவித்ததில்லை போலவும் அவர்கள் செய்யும் பந்தா, சில நேரங்களில் மிகவும் எரிச்சலை ஏற் படுத்துகிறது என்பதும் உண்மை.

விளாத்திகுளம், ஏ. ஜஹ்பர் காதர்.

❖ 'என்னத்தை எதிர்பார்க்கறீங்க' என்ற சிறு கதையைப் படித்ததும் பயந்து ஓடும் போது துரத்துபவர்கள் நின்று நிதானித்து பிரச்னையை தன்னம்பிக்கையுடன் எதிர்கொள்ளும்போது மிரண்டு துரத்துதலை நிறுத்துவார்கள் என்ற நிதர்சனமான உண்மை தெளிவாகப் புரிந்தது.

பாண்டிச்சேரி-4, ஆர். காயத்ரி.




Margo®
Natural freshness talc
மின்னும்
வியர்வைக்குப்
பதிலாக
உஷ்ணம்! பிசுபிசுப்பு! வியர்வை! இவ்வளவும் இருந்தாலும் நீங்கள் புத்துணர்ச்சியுடன் மின்னுகிறீர்கள். அழகுடனும் உற்சாகத்துடனும் இருப்பதை உணர்வீர்கள்.
காரணம், புதிய மார்கோ டால்க்கம் பவுடரும் நீமும் தான். மற்ற பவுடர்களைப் போல் இல்லாமல் மார்கோ டால்க்கில் ர்வையை அகற்றும் ஆன்டிபாக்டீரியல் நீம் சேர்ந்துள்ளதால் துர்நாற்றத்தை ஏற்படுத்தும் பாக்டீரியாவைக் கொல்கிறது. உங்களை குளிர்ச்சியுடன் வைத்துக்கொள்வதுடன் உங்களுடைய சருமத்தை மென்மையாகவும் பாதுகாக்கிறது. நாள் வதும் உங்களை புத்துணர்ச்சியுடனும் நறுமணத்துடனும் வைத்துக்கொள்கிறது. ஆதலால் மார்கோ டால்க்கின் புத்து ர்ச்சியுடன் உஷ்ணத்தை எதிர்கொள்ளுங்கள். உங்களைச் சுற்றியுள்ளவர்கள் முழுமனதுடன் உங்களைப் பாராட்டுவதை ள் உணர்வீர்கள்.
ர்கோ டால்க். எப்பொழுதும் புத்துணர்ச்சி தருவது, இயற்கையானது.

# மரத்தை வெட்டினால் மழையில்லை!



பணம் காய்ச்சி மரம் படித்தேன். நாண யத்துக்கு இரு பக்கம் உண்டல்லவா? அந்த மறு பக்கத்தையும் நான் பார்த்தேன்.

முதலில் ஒரு 'ப்ளாஷ்பேக்' 1995 வாக்கில் ஆனந்தவிகடனில், 'அமெரிக்கா அழைக் கிறது' என்று கட்டுரை வந்தது. எழுதியவர் மேடம் காந்திமதி என்பவர். அதில் அவர் கண்ட அமெரிக்க வாழ்க்கையை, பார்த்து, அவர் வேலை பார்த்த யுனிவர்சிடியில் நடந்த விஷயம் என்று படுசுவாரஸ்யமாக எழுதியிருந்தார். இதை நான் மத்தியான வேளையில் (8வது படிச்சகிட்டு இருந்தேன். கட் ஸ்கூல் அன்று) படிப்பேன். கேட்பதற்கு அடுத்த வீடு, எதிர் வீடு, அத்தை, பாட்டி, அம்மா ஒரு கும்பல் கூடும். இப்படி ஒரு வருடம் கட்டுரை வந்தது. இதில் எல்லா அம்மாக்களுக்கும் ஆர்வம். நம் குழந்தைகளுக்கும் அமெரிக்கா போக வாய்ப்பு கிடைக்குமா? என ஏக்கமே வந்துடுத்து.

இப்போ விஷயத்துக்கு வருவோம். எங்கள் அத்தான், அத்தான் மன்னி 2 பிள்ளை, 2 பெண், பையன்களை நன்றாக படிக்க வைத்தார் அத்தான். நல்ல சூட்டிகையான பிள்ளைகள். நன்றாக படித்து டாக்டர் படிப்பும் முடித்து விட்டான் பெரியவன் சுரேஷ். சின்னவன் சதீஷ் எம்.எஸ்ஸி படித்தான். இத்தனைக்கும் மத்திய தர குடும்பம் தான்.

இப்ப மாதிரி விபரங்கள் தெரிவிக்க எந்த பத்திரிகையும் அப்போ இல்லை. யார் போனா, யார் போய் வர பாக்கிறா என்று கவனித்து சுரேஷ் ஒரு தெரிந்தவரிடம் போய் விவரம் கேட்டான். அவர் பிள்ளை அமெரிக்கா சென்றிருக்கான். அந்த பெரியவர் பாஸ் போர்ட் வாங்கி, விசாக்கு அப்ளை பண்ணனும். எப்போ குடுப் பாளோ. இண்டர்வியு மாதிரி ஒன்று நடக்கும். விசா குடுக்கும் ஆபீஸரே நடத்துவார். டாக்டர் சர்டிபிகேட் வாங்கனும். நிறைய உல்லன், கோட், சூட் வாங்கனும். அங்கே தெரிந்தவர் யாரும் இருந்தால் தங்கலாம் பேயிங் கெஸ்டாக. ஏதோ ஏழு மலைகள் தாண்டி கிளியை பிடித்து கொண்டு வா என்று கதை இருக்குமே அது மாதிரி ஒரே மலைப்பாக இருந்தது சுரேஷுக்கு. வீட்டில் வந்து அப்பாவிடம் அம்மா விடம் சொன்னான். சரி பார்ப்போம் வேறு இடத்தில் அப்ளை செய்வோம் என்று அலைந்து திரிந்து ஒரு கவர்மெண்ட் ஆஸ்பத்திரியில் டாக்டர் வேலை கிடைத்தது.

சில வருடங்கள் ஆன பிறகு பிள்ளைக்கு பெண் பார்த்து திருமணம் செய்ய முனைந்தார்கள் பெற்றோர்.

ஹிந்து மேட்ரிமோனியல் பகுதி பார்த்து ஒரு பெண் டாக்டராக இருக்கிறாள் என்றும் அவளுக்கும் மணமகன் டாக்டராக வேண்டும் என்றும் வந்தது. எழுதி போட்டு ஜாதக பொருத்தம் முடித்து போட்டோ பார்த்து பிடித்து பெண் புறப்பட்டு வந்து அவன் பெற்றோர் களுடன் நேரே பார்த்து பேசி 2 தரம் டிரைவ் இன் ஓட்டல் போய் சாப்பிட்டு இருதரப் புக்கும் பிடித்தமானது. 15 நாளில் நிச்சயம் ஆகி 15 ம் நாளில் திருமணம் ஆகி திருப் பதிக்கு தம்பதிகள் போய் வந்து பிரியா விடை பெற்று பெண் கிளம்பிப் போனாள் கலிபோர்னியாவுக்கு.



அப்புறம் மளமளன்னு அவன் மாமனார் அமெரிக்கா செல்ல மாப்பிள்ளைக்கு செய்ய வேண்டியது, வாங்க

வேண்டியது படுகுஷியாக செய்து அனுப்பி வைத்தார் ஆறே மாசத்தில்! வெறும் எம்.பி.பி.எஸ். ஆக இருந்த சுரேஷ் அங்கு போய் மேல் படிப்பு படித்து ஒரு ஆஸ்பத்திரியில் டாக்டராகி விட்டான். கை நிறைய சம்பளம். அன்பான மனைவி சங்கீதாவுக்கு முதல் பிரசவம் அங்கேயேதான். லெட்டரில் அவன் எழுதியிருந்தான். அம்மா ஆஸ்பத்திரியில் நீட்டா வச்சருக்கா. எல்லோரும் உள்ளே வரக்கூடாது ஸ்டெரிலைஸ் செய்த டிரஸ் குடுப்பா. ஒரே ஒருத்தர் வரலாம் குழந்தையை தொடக்கூடாது கிருமி தாக்கும் என்று. நல்ல கவனிப்பு குழந்தைக்கும் தாய்க்கும். யாரும் பார்க்க ஆசைப் பட்டால் கண்ணாடி தடுப்பு வழியாத்தான் பாக்கணும்.

முன் காலத்தில் பிரசவித்த பெண்ணையோ, குழந்தையையோ தீட்டு என்று சொல்லி உள்ளே விடவே மாட்டார்கள் நம்ம வீட்டுலே அத்தை, பாட்டி எல்லாம். யாரும் வெளியே நின்னுதான் பாக்கணும். நமக்கு வெளியேதான் பேசணும். கண்டிப்பு அத்தனை காட்டுவா பெரியவா. இப்பதானே ஒண்ணடி மண்ணடியாகி போச்சு. இங்கே பெற்றோர்க்கு ஒரு பக்கம் பெருமைதான். ஆயினும் பிள்ளையை பார்க்கும் ஏக்கம் நிறையவே இருக்கு. ஒரு தடவை சுரேஷ் வந்தான் 2 குழந்தைகள் மனைவியுடன். 6 வருடம் பிரிவு.

அம்மா உன் சமையல்தான் பெஸ்ட். வீடே மணக்கிறது. இன்னும் அவியல் போடு, பால் பாயசம் போடு இப்படி வாயார புகழ்ந்தான். அத்தான் மன்னிக்கு ஒரே சந்தோஷம். எங்க சுரேஷ் நல்லா கலரா ஆயிட்டான். ராஜா தான். அவன் குழந்தைகள் எவ்வளவு ஸ்டைலா அமெரிக்க இங்கிலீஷ் பேசறது. இப்படி பெருமை பேசி பிள்ளை புகழ் பாடினான் அத்தான் மன்னி.

2 பெண்களுக்கு லதா, சுதா பிள்ளைகளை பார்த்து திருமணம் முடித்து விட்டான் சுரேஷ். லதா கல்கத்தா வாழ்க்கை. சுதா மதுரை வாழ்க்கை. ஒரு மாத லீவ் முடிந்தது. அதற்குள் அவன் தம்பி சதீஷுக்கு மாமனார் மூலமாக விசா ஏற்பாடு செய்து மேல் படிப்பு என்று சொல்லி அழைத்து சென்று விட்டான் சுரேஷ். இப்ப அத்தானும், மன்னியுந்தான் வீட்டில். பெண்கள் பிரசவம், ஆண்டு நிறைவு ஆனபின், வீட்டில் கலகலப்பு இல்லை. ஒருவர் முகத்தை பார்த்துண்டு ஒருவர் என வாழ்க்கை. பெண்களுக்கும் அவர்கள் வீடு, குழந்தைகள் அல்லாடி போறது அதனால் ரொம்ப வருவதில்லை.

வீடு நிறைய பாரின் சாமான்கள். பாங்க்லே பணம் உண்டு. பென்ஷன் வருது. பெரிய பங்களா சொந்தமானது. எல்லாம் இருந்தும் அத்தான் மன்னிக்கு மனம் சந்தோஷமில்லை.



தினசரி செய்தித்தாளை பக்கங்கள் மாறாமல் தொலையாமல் இருக்க காலையில் செய்தித்தாள் வந்தவுடன் அதன் இடதுபுறம் ஓட்டை செய்து நூலால் கட்டவும். இனி பக்கம் மாறாமல் இருக்கும். பழைய செய்தித்தாள் தேடி எடுக்கும் போது சுலபமாக எடுக்கலாம். செய்து பாருங்களேன்.

— வி. ரமாலக்ஷ்மி

• • • • • • • • • • • • • • • • • • • • • • •

ஒரு தடவை இந்தியாவுக்கு சுரேஷ் வந்தவன் அம்மா, அப்பா இருவரையும் யு.எஸ் அழைத்துப் போனான். எதற்கு? இவர்களுக்கு சொன்னது அங்கும் வந்து பாருங்களேன். எத்தனை பேருக்கு சான்ஸ் கிடைக்கும் என்பது. ஆனால் அங்கு பல இடங்களையும் காட்டி விட்டு அமெரிக்க வாழ் இந்தியர் ஒருவரின் பெண்ணை சதீஷ் விருப்பப்பட்டான் என்று திருமணம் முடித்து அதை பெற்றோர் பார்க்கவும் இந்த ஏற்பாடு. பலே கெட்டிக்காரன். சதீஷ் சாந்தினி தம்பதிகளை வாழ்த்தி விட்டு இந்தியா வந்தார்கள். அத்தானும், அத்தான் மன்னியும் உடம்பு தேறி வந்தார்கள், மருந்தாலும் பிள்ளையின் அன்பாலும்.

85 வயது வாழ்ந்த அத்தான் 3 மாதம் உடம்புக்கு முடியாமல் கிடந்து காலமானார். பிள்ளைகள் வந்து கர்மா நடத்தி விட்டு சென்றார்கள்.

இத்தனை ஆனதும் அத்தான் மன்னி இப்போ ஒண்டியாக மனிதர்களுக்கு ஏங்கி இருந்துண்டு இருக்கான். நான் அடுத்த தெருவில் வசிக்கும் அம்மங்கா உறவு முறை. எல்லாம் பார்த்துண்டு இருந்தேன். அவர்கள் வாழ்க்கை உசந்ததும் இன்று கவனிக்க ஆள் இல்லாமல் இருப்பதும் எனக்குத் தெரிந்ததே.

தினமும் போய் பார்க்கிறேன். நாலு நல்ல வார்த்தை பேசி உள்ளே போய் காப்பி போட்டு கொடுத்து, சமையல் செய்யாட்டா செஞ்சு உக்காத்தி வச்சு சாப்பாடு போட்டு, கடிதம் எழுத, வந்த கடிதம் படிக்க, வெளியில் அழைத்து



தயிர்வடை செய்யும் போது தயிர் சற்று நீராக இருப்பின் ½ மூடி தேங்காய்த் துருவல் ½ டீஸ்பூன் கடுகு, 4 பச்சைமிளகாய் தகுந்த உப்பு சேர்த்து மிக்ஸியில் நைசாக அரைத்து ½ டீஸ்பூன் சர்க்கரையும் சேர்த்து ரெடியாக்கவும் பின் பொரித்த வடைகளை ஊற விட்டு எடுத்தால் தயிர் வடை மேலே தேங்காய் கோட்டிங் குடன் ருசியாக இருக்கும்.

— லக்ஷ்மி ஸ்ரீநிவாசன்

---

செல்ல இப்படி முடிந்த மட்டும் உதவி செய்கிறேன். சுரேஷ் சொல்கிறான் 'அம்மங்கள் ஸீரியஸ் என்றால் எனக்கு போன் பண்ணு வருகிறேன் என்கிறான்.

எத்தனை நாள் வாழ்க்கையோ அவளுது. நானும் பெரிய குடும்பத்தலைவிதான். என் பிள்ளைகள் டில்லி, பம்பாய்லே இருக்கா. பாரின் போக வேண்டாம்னு என் மனது நினைக்கிறது. ஆனால் பிள்ளைகளின் மனசு! மரத்தை வெட்டினால் மழை இல்லை. மக்களை வெளிநாட்டுக்கு அனுப்பினால் முதியவர்க்குக் காப்பு இல்லை. வெளிநாடு போகலாம். நிறைய சம்பாதி. நம் நாட்டுக்கு திரும்பி வா, யார் கேக்கறா? அங்குதான் சுகம். வசதி இப்படி நினைப்பு. நான் லாம்பின்க்கு ஒன்று சொன்னேன். இது மாதிரி நிறைய வீடு களில் நடக்கிறது.

கனடா, லண்டன் அரேபியா, ஆஸ்திரேலியா என்று போய் இருக்கா. இது நல்ல தல்ல. நல்ல படிப்பாளி, ஜீனியஸ் மாணவர்களை இந்திய கவர்மெண்டு இங்கேயே தங்க வைத்து அவர்களுக்கு எல்லா ஊக்கமும் தர வேண்டும். அப்பதான் நம்நாடு முன்னேறும். பாரு பாரு அமெரிக்காவை பாரு பாரு ருஷ்யாவை, ஜப்பானை என்று பாட வேண்டாம்.

— திருமதி சாரு

# குழந்தையில்லா தம்பதியருக்கு புதிய நம்பிக்கை

இந்தியா, மக்கள் பெருக்கத்தால் அவதிப்படும் நாடுதான் என்றாலும், இந்த நாட்டிலும் திருமணமாகியும் பல்லாண்டுகள் மகப்பேறு இல்லாமல் குழந்தைக்காக தவம் கிடக்கும் பல்லாயிரக்கணக்கான தம்பதிகளும் இருக்கத்தான் செய்கின்றனர். திருமணமான ஒவ்வொரு பெண்ணும் தாய்மை நிலையை அடைய வேண்டுமென்று ஏங்குவது இயற்கையே. குழந்தை இல்லாத குறையினால் குடும்பத்தில் மன வேறுபாடும் சமூகத்தில் தாழ்வு மனப்பான்மையும் வாழ்க்கையில் விரக்தியும் ஏற்படுகின்றன. இந்திய நாட்டில், திருமணமான தம்பதிகளில் 10 முதல் 15 சதவிகிதம் பேர் குழந்தைச் செல்வம் இல்லாமல் தவிக்கின்றனர். குழந்தைகளின் மலட்டுத்தன்மை 40 முதல் 45 சதவிகிதம் வரை இருக்குமென்று மதிப்பிடப்பட்டுள்ளது. இதில் வேதனை தரும் வேடிக்கை என்னவென்றால், குழந்தை இல்லாத பெண்தான் சமுதாயத்தில் மலடியென பட்டம் சூட்டப்பட்டு பழிக்கப்படுகிறாள். இவ்வாறு அவதிப்படும் பெண்களில் பலர் உடற்கூறு ரீதியில் குழந்தை பெறும் பாக்கியம் பெற்றவர்களேயானாலும் இவர்களின் கணவர் உடலில் விந்தணு உற்பத்தி ஆகாமலோ அல்லது விந்தணு எண்ணிக்கையில் குறைந்தோ இருப்பதால்தான் குழந்தைப் பெற முடியாத நிலை ஏற்படுகிறது. அண்மைக்

Intracytoplasmic sperm Insemination(ICSI)



Ovum held in Micropipette — Micro injection of sperm into the ovum

காலம் வரை ஆண்களுக்கே உரிய வறட்டுப் பெருமை காரணமாக கணவன்மார் மகப்பேறு பரிசோதனைக்குத் தங்களை உட்படுத்திக் கொள்ள முன்வரவில்லை. ஆனால் இப்போது, திருமணமாகி ஓராண்டு ஆகியும் குழந்தை பிறக்காத பெண்களைத் தீவிரப் பரிசோதனைக்கு உட்படுத்துவதற்கு முன்னர், கணவனின் உடல் பரிசோதனையும் விந்தணு பரிசோதனையும் அவசியம் என்று மகப்பேறு நிபுணர்கள் கட்டாயப்படுத்துகின்றனர்.

பெறுவதற்காக இவர்கள் பல்லாயிரக்கணக்கான ரூபாய் செலவிட தயாராக இருக்கின்றனர். சிலர், நல்ல மருத்துவர்களை அணுகி நடைமுறை ரீதியான ஆலோசனையைப் பெறுகின்றனர்; மற்றும் பலர் போலி மருத்துவர்களிடம் சிக்கி பணத்தைப் பறி கொடுக்கின்றனர். குழந்தைப் பேறு இன்மைக்கு 40 சதவிகிதம் பெண்ணின் மலட்டுத்தன்மையும், 40 சதவிகிதம் ஆணின் மலட்டுத்தன்மையும் 20 சதவிகிதம் இருவரின் மலட்டுத்தன்மையும் காரணம் என்று மதிப்பிடப்பட்டு இருக்கிறது.

## பெண்ணை மட்டும் குறை சொல்லுவதா?

இந்தியாவைப் பொறுத்தவரை, ஆண்



நிறைய மினரல் வாட்டர் பாட்டில்கள் வீட்டில் சேர்ந்து விடுகின்றன. அவற்றை என்ன செய்வது?

மினரல் வாட்டர் பாட்டிலின் அடிப்பாகத்தில் ஊதுபத்தி தணலைக் கொண்டு இரண்டு துளைகள் செய்தேன். அதில் தண்ணீரை நிரப்பி செடிகளின் வேர் பாகத்திற்கு அருகில் வைத்து விட்டேன். செடிகளின் வளர்ச்சிக்குத் தக்கவாறு இரண்டு பாட்டில்கள் கூட வைக்கலாம். இப்படிச் செய்வதால் என் செடிகள் இந்தக் கோடை வெயிலிலும் வாடாமல் செழு செழுவென வளர்கின்றன.

— சுந்தரா ரவீந்திரன்

## விந்தணு, சினை முட்டை :

ஆண் மற்றும் பெண் பாலரின் அடிப்படை இனப் பெருக்கக் காரணிகளான விந்தணு மற்றும் சினை முட்டையின் முக்கியத்துவத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். ஆணின் விந்தணுவின் தலை பாகத்தில், பாரம்பரிய குணாதிசயங்களை நிர்ணயிக்கும் க்ரோமோசோம்கள் எனும் மரபணுக்கள் இடம் பெற்றிருக்கின்றன. மனிதனின் உடலில் இருக்கும் இதர அணுக்கள் ஒவ்வொன்றும் 46 க்ரோமோசோம்கள் இருக்கும்போது, விந்தணுவில் மட்டும் 23 க்ரோமோசோம்கள் மட்டுமே இடம் பெற்றிருப்பது விந்தைதான். ஆணின் விந்தணு, பெண்ணின் சினைப் பையிலிருந்து வெளிவரும் சினை முட்டையுடன் இணையும் போது விந்தணுவில் இருக்கும் 23 க்ரோமோசோம்களும் சினை முட்டையில் இருக்கும் 23 க்ரோமோசோம்களும் ஆக மொத்தம் 46-ம் சேர்ந்து குழந்தையின் குணாதிசயங்களை நிர்ணயிப்பதுதான் ஆண்டவன் படைப்பின் அதிசயமாகும். ஆகவேதான், குழந்தைக்காக ஏங்கும் தம்பதிகள் தங்கள் சொந்த விந்தணுவும் சினை முட்டையும் சேர்ந்து கரு உற்பத்தி ஆகவேண்டும், அதுவே தங்கள் சொந்த ரத்தமாக இருக்க முடியும் என்று நினைப்பது நியாயம்தானே.

## சோதனைக் குழாய் குழந்தைகள்

பல பெண்களுக்கு சினை முட்டை உருவாகியும், அவை வந்தடையும் குழாயில் அடைப்புகள் இருப்பதால் அவர்களால் குழந்தை பெற முடிவதில்லை. இவர்களில் ஒரு சிலரே அறுவை சிகிச்சை மூலம் பயன்பெற முடியும். 1978 ம் ஆண்டில் கேம்பிரிட்ஜைச் சேர்ந்த ஸ்டெப்டோ, எட்வர்ட்ஸ் என்ற நிபுணர்கள் கண்டு பிடித்த ஐ.வி.எஃப் எனும் இன் விட்ரோ ஃபெர்டிலைசேஷன் என்ற கண்டுபிடிப்பு, இப்படிப்பட்ட பெண்களுக்கு வரப்பிரசாதமாக அமைந்தது. இதுவே பின்னர் சோதனைக் குழாய் குழந்தை முறை என்று பிரபலமாகியது. இந்த முறையில், ஊசி மூலம் பெண்ணின் சினை முட்டையை வெளியே எடுத்து ஆய்வுக் கூடத்தில் தக்க வெப்ப நிலையில் கணவனின் விந்தணுக்களை அதனுடன் சேர்த்து கருவுறச் செய்கிறார்கள். இப்படி உருவான கருவினை மீண்டும் மனைவியின் கர்ப்பப்பையில் செலுத்தி, குழந்தையை வளர வைத்து விஞ்ஞான சாதனை புரிந்தார்கள். இதைத் தொடர்ந்து உலகெங்கும் பல்லாயிரக் கணக்கான குழந்தைகள் நல்ல முறையில் பிறந்து குழந்தையில்லாத பலரது மனக்குறையைத் தீர்த்து வைத்தன.

## ஆண் மலட்டுத்தன்மைக்கு ஐ.சி.எஸ்.ஐ. :

சோதனைக் குழாய் முறையானது பெரும்பாலும் மலட்டுத்தன்மை கொண்ட பெண்களுக்கே பெரிதும் பயன்பட்டது. ஆண் மலட்டுத்தன்மையை நீக்க இது பயன்படவில்லை. ஏனென்றால், சோதனைக் குழாய் மூலம் குழந்தை பிறக்க வேண்டுமானால் ஆணின் விந்தணுக்கள் எண்ணிக்கையில் ஏராளமாகவும் உயிரோட்டம் மிக்கவையாகவும் இருக்க வேண்டும். மலட்டுத்தன்மை கொண்ட ஆண்களைப் பரிசோதிக்கும் போது உயிரணுக்கள் 40 கோடி என்ற எண்ணிக்கை இருப்பதற்குப் பதிலாக 4 அல்லது 5 அணுக்களே இருப்பது தெரிய வந்தது. அது மட்டுமல்லாமல், உயிரோட்டம் பெற்று வேகமாக நீந்திச் செல்ல வேண்டிய நிலையில் இருக்க வேண்டிய உயிரணுக்கள், இத்தகைய ஆண்களுக்கு நெளிந்தும் அசைந்தும் செல்லும் நிலை காணப்படுகிறது. ஹார்மோன் மருந்து சிகிச்சை மூலம் இந்த நிலையை சரி செய்ய முடியாது. இவர்களைப் பொறுத்தவரை ஐ.வி.எஃப். அல்லது

சோதனைக் குழாய் முறை பயனளிப்பதில்லை.

## புதிய கண்டுபிடிப்பு :

இந்தச் சூழ்நிலையில்தான் 1992 ம் ஆண்டில், பெல்ஜியம் நாட்டைச் சேர்ந்த டாக்டர் வான் ஸ்டெயிர்டெஜெம் என்பவர் தலைமையிலான நிபுணர்குழு, இன்ட்ரா சைடோப்ளாஸ்மிக் ஸ்பெர்ம் இன்ஜெக்ஷன் (ஐ.சி.எஸ்.ஐ.) எனும் புதிய முறையை உலகுக்கு அறிமுகப்படுத்தியது. இந்த முறையில், பயிற்சி பெற்ற நிபுணர்கள், மிக நுட்பமான சாதனங்களைப் பயன்படுத்தி ஒரே ஒரு ஆண் விந்தணுவைப் பெண்ணின் சினை முட்டைக்குள் ஊசி போன்ற கருவியின் மூலம் செலுத்துகின்றனர். கரு உண்டானதும் அதனை மறுபடியும் பெண்ணின் கருப்பைக்குள் செலுத்தி குழந்தை வளரச் செய்கின்றனர்.

சோதனைக் குழாய் முறைபோல் அல்லாமல் ஐந்து விந்தணுக்கள் மட்டுமே உடைய, மலட்டுத்தன்மை கொண்ட ஆண்கள், விந்தணுவின் உயிரோட்டம் குறைந்தவர்கள் கூட இம்முறையில் குழந்தை பெற வாய்ப்பளித்துள்ளனர். இன்னொரு விஷயம் சில வகை மலட்டுத்தன்மை உடைய ஆண்களுக்கு ஆண் விதையில் உயிரணுக்கள் உருவானாலும் விந்து வெளிப்படும்போது அதில் உயிரணுக்கள் காணப்படாததால் இப்படிப்பட்டவர்கள் தங்கள் மனைவியைக் கருத்தரிக்கச் செய்ய முடிவதில்லை. இத்தகைய நிலையில் உள்ளவர்களுக்கும் ஒரு நல்ல செய்தி. இவர்களுடைய ஆண் விதையிலிருந்து ஊசிமூலம் நேரடியாக உயிரணுக்களை வெளியே எடுத்து, ஆய்வுக் கூடத்தில் பெண்ணின் சினை முட்டைக்குள் செலுத்தி கருத்தரிக்கச் செய்ய ஐ.சி.எஸ்.ஐ. முறை வழி வகுத்திருக்கிறது. இவர்களுடைய உயிரணுக்களில் வால் பகுதி இல்லாமல் போனாலும் பரவாயில்லை. தலைப் பகுதி மாத்திரம் உருக்குலையாமல் இருந்தால் போதும்.

உலகிலுள்ள பல பெரு நகரங்களில் ஐ.சி.எஸ்.ஐ. முறையைப் பயன்படுத்துவதற்கு நவீன சாதனங்கள் உருவாகி பல ஆராய்ச்சி நிலையங்கள் செயல்பட துவங்கிவிட்டன. பெல்ஜியம் நாட்டில் மட்டும் 1994 ஆகஸ்ட் மாதம் வரையில் 400-க்கும் மேற்பட்ட குழந்தைகள் இந்த வகையில் பிறந்திருக்கின்றன. ஆணின் விதையில் உண்டாகும் உயிரணு, பாதையில் அடைப்பு காரணமாக வெளிவர முடியாமலும், அறுவை சிகிச்சை பயன்படாமலும் இருப்பவர்களுக்கும் விந்தணு எண்ணிக்கை மிகக் குறைவாக இருப்பவர்களுக்கும் ஐ.சி.எஸ்.ஐ. முறை ஒரு வரப்பிரசாதமாக அமைந்திருக்கிறது.

ஆண் மலட்டுத்தன்மையை நீக்கும் இந்த அரிய மகப்பேறு சிகிச்சை இப்போது சென்னையில் கிடைக்கத் துவங்கியிருக்கிறது. ஆண் மலட்டுத்தன்மை ஆராய்ச்சி மற்றும் சிகிச்சை முறையின் முன்னோடியாக இருப்பவரும் சென்னையில் உள்ள மார்க்-2 நிறுவனத் தலைவருமான டாக்டர் ஏ. ராஜசேகரன், ஐ.சி.எஸ்.ஐ. முறை மூலம் மகப்பேறு சிகிச்சை அளிக்க ஒரு லட்சம் ரூபாய் வரை செலவாகும் என்றும் இதில் சுமார் 30,000 ரூபாயை மருந்துக்கென்று ஒதுக்க வேண்டும் என்றும் கூறுகிறார். இந்த சிகிச்சை நிறைவு பெற சுமார் ஒன்றரை மாதம் பிடிக்கும்.

— **ஜோசப் சந்திரகுமார்**

**பத்திரிகை தகவல் அலுவலகம்,**

**இந்திய அரசு**

என் வீட்டிலுள்ள வேப்ப மரத்துக் கொத்தைப் பறித்து அதன் தண்டை சாய்வாக நறுக்கிவிட்டு, ஒரு கண்ணாடி ஜாரில் மஞ்சள் பொடி சேர்த்த தண்ணீரை நிரப்பி அதன் நடுவில் வேப்பங் கொத்தை வைத்து இடையில் செம்பருத்தி மலர்களை அழகாக வைத்து ஹாலில் வைத்தேன். இந்த மலர் அலங்காரம் அழகுக்கு அழகாகவும், மஞ்சள் நீர், வேப்பிலை இரண்டும் கிருமி நாசினியாகையால், சுற்றுப்புறத்தை தூய்மைப் படுத்துவதாகவும் அமைந்தது.

— ஜெயலட்சுமி ஸ்ரீநிவாசன்



# கலியாணத்தில் சாக்லேட் குட்டி

திருமணசீர் செய்வதில் பல புதுமையான, வித்தியாசமான பக்ஷணங்கள் – பருப்பு தேங்காய் குட்டி, ஆசீர்வாதக் குட்டி என்ற லாடு, மனோஹரம், மிட்டாய், முந்திரி பருப்பு - பலவகை செய்வதுண்டு.





உங்கள் வீட்டுக் கலியாணத்தில் "சாக்லேட் குட்டி" செய்யுங்களேன். அல்லது "சாக்லேட் ஸாரி" (புடைவை) செய்து வைத்து விடுங்கள்.

கலியாணப் பெண்ணின் நாத்தனார் விளையாடல் என்று ஒரு சம்பவத்தில், சீப்பு, கண்ணாடி, சோப், ஹேர் ஆயில் என்று ஒரு தட்டில் பல வகை சாமான்கள் கொடுப்பது வழக்கம். இப்பொழுது மேக்கப் சாதனங்கள் 'லிப்ஸ்டிக்' வகையாறா - ஸல்வார்-கமீஸ், நைட்டி என்றும் கொடுக்கிறார்கள். அதில் 'சாக்லேட்' ஸாரியையும் வைக்கலாம்.

(பரிசுப் பொருட் களை, தின்பண்டங்களை மற்றவருக்குக் கொடுக்கும் பொழுதும், விருந்தில் வைக்கும் பொழுதும் நம் கலைத் திறனை பயன்படுத்தி அழகுடன் அலங்கரித்து ஒரு புதுமையாக செய்தால் அதுவே ஒரு வித உற்சாகத்தைக் கொடுக்கும்).

## சாக்லேட் குட்டி

கன்டென்ஸ்ட் மில்க் - 1 டின்
பிஸ்கெட் பொடி செய்தது - 1 கப்
சர்க்கரை பொடி - 2 கப்
மைதா அல்லது பொட்டு கடலைப் பொடி - ¾ கப்
வெண்ணை - 1 கப்
சாக்லேட் ஃப்ளேவர் உள்ள ஏதேனும் பொடி, போர்ன்விட்டா, மைலோ, ட்ரிங்கிங் சாக்லேட், பூஸ்ட் போன்றவை - 1 கப்
வேர்க்கடலை பொடி செய்தது - ½ கப்
இன்ஸ்டென்ட் காப்பி தூள் - ½ கப்
பால் - 1 கப்

மேலே கொடுத்துள்ள பொருட்களை எல்லாம் ஒரு பெரிய வாணலியில் கொட்டி, 'காஸ்' அடுப்பில் வைத்துக் கிளறவும். 'காஸ்'ஸை ஹையிலும், சிம்மிலும் அவ்வப்பொழுது வைத்துக் கொண்டு, வாணலியின் பக்கங்களில் இருக்கும் கலவையை, சேர்த்து கிளறி, கெட்டியாகி, இறுகும் தறுவாயில் வாணலியை அடுப்பில் இருந்து இறக்கி வைத்து கைவிடாமல் கழற்றிக் கிளறவும். கலவை ஒட்டாமல் சப்பாத்தி மாவு போல ஆகும் வரை செய்யவும்.



• கெட்டியான சார்ட் பேப்பரின் மேல், 'பட்டர்' பேப்பரையும் வைத்து இரண்டையும் சேர்த்து 'கோன்' வடிவில் செய்யவும். இதனுள் நெய்யை தடவி, 'சாக்லேட்' மாவை நீள வாக்கில் உருட்டி அடைக்கவும். நன்றாக 'செட்' ஆனதும், மஞ்சள், சிகப்பு, வெள்ளை, பச்சை என்று 'ட்ரான்ஸ் பேரன்ட் பேப்பர்' கொண்டு (இதில் ஏதாவது ஒரு கலர்) சுற்றி 'பாக்' செய்யவும்.  ரிப்பனை கொண்டு பூபோல் செய்து 'கோனை' சுற்றிக் கட்டலாம். இல்லையேல் 'மல்லி'ப்பூ மாலையையே சுற்றி

ாவைக்கலாம். பேப்பரை 'செல்லோடேப்'
ாவைத்து ஒட்டவும்.

## சாக்லேட் ஸாரி :

புடைவை கடையில் கிடைக்கும் அட்டைப் பெட்டியை எடுத்துக் கொள்ளுங்கள். 'பட்டர் பேப்பரில்' நெய்யை தடவி "சாக்லேட்' கலவையை கொட்டி சமமாக பரப்பவும். கத்தி ால் அடிவரை வெட்டாது, மேலாகக் கோடு ள் இழுத்து கட்டங்களாக போட்டுக் கொள்ள வும். கட்டங்களின் நடுவே அரிசி வடிவில் உள்ள ஜீரக மிட்டாய் வைத்து அழுத்தவும். பிஸ்கெட் பொடியினால் கட்டங்களை உரு வாக்கவும். 'டெம்பிள்' பார்டர் போல் சாக் கலர் பொடியினால் போட்டுக் கொள்ளவும். அதன் அடியில் பிஸ்கெட் பொடியால் அழுத்துப் போடவும். பெட்டியின் ஓரத்தில் ஒட்டாமல் கலவையை பரப்பவும்.

பெட்டியின் மேல் கலர் பேப்பர், அல்லது [illegible] gift paper ஐ கொண்டு கவர் செய்யவும். இதிலும் satin ரிப்பனை கொண்டு பெட்டியை [illegible] அலங்கரிக்கவும்.



இதே சாக்லேட் கலவையை பல விதங் களில் பல விசேஷங் களில் வித்தியாசமாக செய்து பார்க்கலாம்.

ஐஸ்கிரீம் மரக் குச்சிகள் நீளமாக கிடைக்கிறது. அதில் லாலிபாப்பை போல் செய்து கலர் பேப் பரில் சுற்றி வைக்க லாம்.



ஓவல் வடிவத்தில் சிறு சிறு உருண்டை களாக்கி (நடுவில் ஒன்றி ரண்டு வேர்க்கடலை யையோ, முந்திரி பருப் பையோ வைத்து) கலர் பேப்பர் அல்லது ஜிகினா ஸில்வர், கோல்டன் பேப்பர் வாங்கி சுற்றி கடைகளில் கிடைக்கும் மிட்டாய் போல் செய்யலாம்.



நீளமாக 2" தடிமனாக செய்து கோல்ட் பேப்பரால் சுற்றி வைக்க லாம்.

"காட்பரீஸ் மில்க் சாக் லேட்" போல் செய்து சில்வர் பேப்பரில் சுற்றி வைக்கலாம்.

குழந்தைகளின் பிறந்த நாள் கொண்டாட் டத்தில் செய்யலாம்.

பிறந்த நாள் பரிசாக, வயதானவர்களை பார்க்க போகும் பொழுது கொடுக்கலாம்.

பிள்ளைதாய்ச்சி (பிரசவத்திற்கு முன்பு) 'மசக்கை' பலகாரமாக செய்து கொடுக்கலாம்.

## விரைவில் உடனடியாக சிறிய அளவில் செய்யும் சாக்லேட் 'சட்பட்' அல்லது 'ஃபட்டாஃபட்'.

சாக்லேட் - 2 கப்
மேரி பிஸ்கட் - 1 பாக்கெட் (பொடி செய்யவும்)
சர்க்கரை பொடி - 2 கப்
குளுக்கோஸ் பொடி - ½ கப்
பொட்டுக்கடலை பொடி - ¼ கப்
வேர்க்கடலை பொடி - ¼ கப்
சாக்லேட் ஃப்ளேவர் கூடிய போர்ன்விடா, பூஸ் etc... - ½ கப்
பால் பவுடர் - ¾ கப்
வெண்ணை - சிறிய அளவு

எல்லா பொடிகளையும் பெரிய தாம்பாளத் தில் இட்டு சிறிது வெண்ணையைப் போட்டுப் பிசைந்து வேண்டிய வடிவில் செய்து ஒரு மூடிய பாத்திரத்தில் இட்டு 'ஃப்ரீஸரில்' வைத்து விடவும். நன்றாக இறுகிய பின் பேப் பரில் சுற்றவும்.

* பள்ளி விடுமுறை நாட்களில் உங்கள் குழந் தைகளே உங்களுக்கும் சேர்ந்து செய்து தந்தால் ஆச்சரியப்படாதீர்கள்.

விருந்தினர்களுக்கு சுவையுடன், உணவு ஜீரணிக்கவும், வாய் மணக்க, நாவினிக்க, சிவக்க வெற்றிலை பீடா, ஸ்வாதிஷ்டிக் பீடா செய்து கொடுங்கள்.

வாசனைப் பாக்கு - 1 கப்
ஏலக்காய் - 10
சோம்பு - 1 கப்
கிராம்பு - 20 (அ) 25
ஓமம் - 3, 4 டீஸ்பூன்

வாணலியில் இட்டு மொறமொறப்பாக வறுத்து 'மிக்ஸி'யில் இட்டுப் பொடி செய்து கொள்ளவும்.

'மின்ட்' கலந்த வெண்ணை 'எக்ஸ்ட்ரா-ஸ்ட் ராங்' மிட்டாயையும் பொடி செய்து கலந்து வைக்கவும். சர்க்கரை பொடி - ½ கப் சேர்க் கவும். பேரீச்சம்பழம் - பொடியாக நறுக்கி வைத்துக் கொள்க. 'கிஸ்மிஸ்' உலர்ந்த திராக்ஷை.



அகலமான பெரிய சைஸ் துளிர் வெற்றிலை (பெனா ரஸி பான் போல்) ஒவ் வொரு பீடா விற்கும் 2 வெற்றி லைகள் தேவைப்படும்.

கண்ணாம்பு
பல்குத்தும் குச்சி
(இதற்கு சிக்கு வாசனை வந்த உலர்ந்த தேங்காய் துருவல் சேர்க்காதீர்கள்.)

வெற்றிலையைக் கழுவி, தண்ணீரை துடைத்து, கண்ணாம்பை லேசாக தடவி, நெட்டியை கிள்ளி வைத்துக் கொள்ளவும். 'கோனை'ப்போல் சுருட்டி, உள்ளே மேலே கூறியுள்ள பாக்குடன் கலந்த பொடி, கிஸ்மிஸ், பேரீச்சை பழம் 2 சிறிய துண்டுகள் எல்லாம் சேர்த்து கோனை உள்புறமாக மடக்கவும். இதன் மேல் 'பல்குத்தும்' குச்சியை செருகவும். இதனால் பீடா திறந்து கொள்ளாது. குச்சியினால், பீடா சாப்பிட்ட பின் பல் இடுக்கில் சிக்கிய பொருளை குத்துவதற்கும் உபயோகப் படுத்தலாம்.

உங்கள் வீட்டில் 'தீபாவளி லேகியம்' இருக்குமே? ஒரு சிறு உருண்டையை வெற்றிலை கோனில் அடைத்து பீடா செய்து வாயில் அடைத்து விடுங்கள்.

**பூ மாலை போல் ஒரு வித்தியாசமான அழகான, வண்ண வண்ண நிறத்துடன், ஜொலிக்கும் மாலை -**



'ராவல்கான் மிட்டாய்', ஜிகினா பேப்பரில் சுற்றியுள்ள சாக்லேட், மிட்டாய்கள்.

நைலான் மெல்லிய நூல்.

நைலான் நூலைக் கொண்டு பூ தொடுப்பது போல் தொடுக்கலாம். அல்லது கோர்க்கலாம். இரண்டு பக்கமும் தொடுக்க வேண்டும். மணமக்கள் மாலை மாற்றும் பொழுது, இந்த ஸ்வீட் மாலையையும் போடலாமே?

கலியாண தாம்பூல பைகளில் உலர்ந்த தண்ணீர் வற்றிய சாத்துக்குடியும், குரும்பை தேங்காயும்தான் போட வேண்டுமா? இதில் ஒரு மாற்றம் கொண்டு வந்தால் என்ன? தேங்காய் விலையில் சிறிய அளவு பிஸ்கெட் பாக்கெட்டுகள் கிடைக்கிறதே? எல்லோரும் ருசித்தும் சாப்பிடலாமே? ஒன்றிரண்டு எக்ஸ்ட்ரா ஸ்டாராங்' மின்ட் மிட்டாய் கருப்புகளை போடலாமே? (ஒரு உருளையில் மிட்டாய் உண்டு).

கலியாண முறுக்கு, முத்துசாரை எல்லாம் தின்று அலுத்து விட்டதா அல்லது அவை நமுத்து விட்டதா? அம்மி குழவியினால் ஒன்றிரண்டாக பொடி செய்து, 'மிக்ஸியில்' இட்டு நன்றாக பொடிக்கவும். இத்துடன் சிறிது சுக்குப் பொடி ஏலக்காய் பொடி சேர்க்கவும். வெல்லத்தை பாகு வைத்து இந்தப் பொடியை கலந்து உருண்டைகளாக செய்து வைக்கலாம். (பொருள் விளங்கா உருண்டை - இதில் என்ன பொருளை சேர்த்து செய்தீர்கள் என்று மற்றவர்கள் நினைத்துக் குழம்புவார்கள்).

கூட்டு, கறி, பொரியலில் இப்பொடியைத் தூவினால் ருசியாக இருக்கும்.

கட்லெட் செய்யும் பொழுது ப்ரெட் தூளில் ஒற்றுவது போல் ஒற்றி செய்யலாம்.

'எமர்ஜென்ஸி' உப்புமா செய்யலாம்.

**— விசாலம் நாராயணஸ்வாமி**

---

**ரோட்டி செ·ப் வாங்கிவிட்டு அதில் சரியாக வராவிட்டால் பூரி ப்ரெஸ்ஸர் ஆக உபயோகிக்கலாம் என்று ஒரு சகோதரி எழுதியிருந்தார். சரியானபடி சப்பாத்தி வருவதற்கான முறையை, பல தினுசாக செய்து பார்த்து, கண்டு பிடித்து விட்டேன்.**

**1. மாவை நன்கு தளர பிசைந்து வைத்துக் கொள்ள வேண்டும்.**

**2. ஒவ்வொரு உருண்டையையும் இரண்டு கையிலும் எண்ணெய் தடவிக் கொண்டு உருட்ட வேண்டும்.**

**3. மூடியை அளவாக அமுக்க வேண்டும்.**

**இப்பொழுது விளம்பரத்தில் காட்டுவது போலவே 'புஸ்'ஸென்று மூடியைத் தள்ளிக் கொண்டு சப்பாத்தி வரும்!**

**— விஜயா ராஜன்**



Printed and published by K. Rajendran on behalf of Bharathan Publications Private Limited.
Editor : MANJULA RAMESH
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097
Telephones — Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621
Annual Subscription : India Rs. 120/-; Overseas : Rs. 700/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 60/-; Overseas : Rs. 350/- (Air Mail)

# மங்கையர் மலர்



## திருமண ஸ்பெஷல்!

ஜூன் '97 இதழுடன்
இணைப்பு

கோட்டி விட்டாகேரிடமிருந்து விசேஷ பயன்படுத்திப்பார்க்கும் சலுகை (சலுகை ஜுன் 30 வரை)
உங்களுக்கு அருகிலுள்ள ஸ்டோரில் இந்த கூப்பனைக் கொடுக்கவும், & ரூ. 35/- சலுகை பெறுங்கள். முகச்சுருக்கங்களு
சிகிச்சை அளிக்கும் ஃபார்முலா அல்லது கண்ணின் கீழ்ப்பகுதி சிகிச்சை க்ரீம்.



# பாருங்கள்

## உங்கள் கண்களுக்கு கீழே இது செயல்புரியும் ஆற்றலை.

உங்கள் கண்களின் கீழ்ப்புற சருமம் மிகவும் மென்மையானதாகும். எனவே அதை காத்திட, கூடுதல் பாதுகாப்பு அவசியமாகிறது. முதுமை நெருங்கிவிட்டதின் அடையாளத்தை **முதன் முதலாக காட்டுவது இதுவே**. கோட்டி வழங்குகிறது. இந்தியாவில் முதன் முறையாக, புதிய அண்டர் ஐ ரிப்பேர் க்ரீம். இது, முதுமை தோற்றத்தை மாற்றும் விசேஷ செயல் திறன் கொண்டது.

மேலும் இதில் உள்ளது, **அல்ஃபா ஹைட்ராக்ஸி ஆஸிட்** (ஏஎச்ஏ) காம்ப்ளக்ஸ். இது **நுண்ணிய அந்த சுருக்கங்களை மென்மையாக்கி, கண்களுக்கு கீழே தோன்றும் கருவளையங்களை மாற்றி**, சருமம் இளமைத் தோற்ற பொலிவை அடைய உதவுகிறது. இதன் விசேஷ சேர்க்கைப் பொருட்கள், கண்களின் கீழ்ப்புறத்தில் தோன்றும் **தடிமனான வீக்கத்தை குறைத்து**, நீங்கள் எப்போதும் விரும்பும் ஒளிவீசும் அழகிய கண்களையும், இளமை தோற்றத்தையும் அளிக்கின்றன. பலவிதமான விட்டமின்களின் கலவையான விட்டாஸோம்ஸ்கூட இதிலுள்ளது. இது சருமத்தினுள் ஊடுருவி, அதற்கு போஷாக்கு தருகிறது.

இதோடு மட்டுமல்லாமல், கோட்டி விட்டாகேர் வழங்கும் இதர தயாரிப்புகளான ரிங்கிள் ட்ரீட்மெண்ட் ஃபார்முலா மற்றும் ஒவர்நைட் ரிப்பேர் க்ரீமும் கிடைக்கின்றன. **விசேஷ பயன்படுத்திப்பார்க்கும் சலுகைக்காக மேற்கண்ட கூப்பனை படித்துப்பார்க்கவும்.**




ABC AE AHA | COTY VitaCare

முதுமை தோற்ற அடையாளங்களை, விஞ்ஞானம் தாமதப்படுத்தும் என்பதற்கு சான்று.

# திருமணம் ஒரு வியாபார நிகழ்ச்சி அல்ல!

திருமணத்தில் உச்சரிக்கப்படும் மந்திரங்களின் மூலமே பிற்கால வாழ்க்கை என்பதை எப்படி வாழ வேண்டும் என்று நம் முன்னோர்கள் கூறியுள்ளார்கள். ஆனால் அவற்றைப் பற்றி இன்று பெரும்பாலோர் கவலைப்படுவதில்லை. ஒரு பக்கம் நண்பர்களின் கை குலுக்கல், இன்னொரு பக்கம் சொன்னபடி சீர்வரிசை சரியாக வந்ததா, சம்பந்தி மரியாதை சரியாக இருந்ததா என்பதைப் பற்றித்தான் கவலைப்படுகிறார்கள். இவையெல்லாம் அந்தத் திருமணம் செய்து கொள்ளப் போகும் தம்பதிகளுடன் வாழ்க்கை முழுவதும் வரப்போவதில்லை. வாழ்க்கையை எப்படி வாழ வேண்டும் என திருமண மந்திரங்களின் மூலம் பெரியோர்கள் சொல்லியுள்ள அறிவுரையே அவர்களுடன் கூடவே வந்து அவர்களுக்கு வழிகாட்டும்.

எனவே திருமணச் சடங்குகளின் அர்த்தங்களை, நம்முடைய மக்கள் புரிந்து கொள்ள வேண்டும். திருமணத்தைப் புனிதமான விஷயமாகக் கருத வேண்டும். திருமணம் வியாபாரமல்ல, இனிமையான வாழ்க்கையின் தொடக்கம்.

இங்கு திருமணச் சடங்குகள் சிலவற்றின் அர்த்தங்களை விளக்குகிறார் விவேகானந்தா கல்லூரியின் சமஸ்கிருதப் பேராசிரியரும், பல மொழிப் புலமை கொண்டவருமான டாக்டர் எஸ். இராமரத்தினம்....

பாணி க்ரஹணம் என்றால் திருமணத்தைக் குறிக்கிறது என்று எல்லோருக்கும் தெரிந்திருக்கும். இவ்வார்த்தையின் வெளிப்படையான பொருள் என்னவென்றால் "பற்றுதல்" என்பதாகும். திருமணத்தில் எவ்வளவோ சடங்குகள் இருக்க இந்த 'பாணி க்ரஹண'த்திற்கு மட்டும் ஒரு சிறப்பு அந்தஸ்து கொடுப்பானேன் என்றால் அதில் விஷயமிருக்கிறது.

மனித உறுப்புகளில் கைக்கு ஒரு தனி இடம் தரப்பட்டிருக்கிறது. நமக்குப் பலவிதங்களில் உதவி செய்பவரை நம் வலது கை போல என்கிறோம். ஒவ்வொரு புலனுக்கும் ஒவ்வொரு தனித்துவம் உண்டு. மூக்குக்கு நுகரும் சக்தி, கண்ணுக்குப் பார்வை என்பது போல. தொட்டு அறியும் சக்தி என்றால்





• எஸ். ராமரத்தினம்

அதைப் பொதுவாக தோல் என்று சொல்லி விடுகிறோம். ஆனால் குறிப்பாகச் சொன்னால் தொட்டு அறியும் உணர்வை கைகளினாலேயே பெறுகிறோம். விரல்களின் நுனியில் நுண்ணிய நரம்புகள் ஓடுவதால் இது சாத்தியமாகிறது.

ஒருவரின் கையைப் பிடித்துப் பார்த்தே அவரது குணாதிசயங்களை நிர்ணயிக்க முடியும். உள்ளங்கை சூடாக இருந்தால் அவர்கள் முன்கோபிகளாக இருப்பார்கள். கையில் சொதசொதவென்று வியர்வை பரவியிருந்தால் அவர்கள் எளிதில் உணர்ச்சிவசப்படுகின்றவர்களாக இருப்பார்கள். விரல்கள் கோணல்மாணலாக இருந்தால் அவர்கள் எதையும் திட்டமிட்டுச் செய்ய முடியாதவர்களாக இருப்பார்கள். முறம் போன்ற பெரிய கைகளைக் கொண்டவர்கள் மற்றவர்களை அடக்கி ஆள நினைப்பவர்கள். குளிர்ச்சியான உள்ளங்கையும் நேரான விரல்

களையும் கொண்டவர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருப்பார்கள்.

முழங்கால் வரை நீண்ட கைகளைக் கொண்டவர்கள் சத்திய சந்தர்களாகவும் பெரும் ஞானிகளாகவும் இருப்பார்கள். ஸ்ரீ இராமபிரானின் கைகள் அப்படி இருந்ததாகத்தான் கவிகள் வர்ணித்திருக்கிறார்கள். காந்தி அடிகள் அம்மாதிரி நீண்ட கைகள் கொண்டவராக விளங்கினார். இது தவிர கையில் ஓடும் ரேகைகளைக் கொண்டு ஒருவரின் வாழ்க்கையையே கணித்துச் சொல்லும் கலை உலகின் பல இடங்களிலும் பரவி உள்ளது. கைக்கு இவ்வளவு சிறப்பு அம்சங்கள் இருப்பதால்தான் 'கை பற்றுதல்' என்பது திருமணத்தையே குறிக்கும் அளவுக்கு ஒரு முக்கிய சடங்காக விளங்கி வருகிறது.

கணவன் தன் மனைவியின் கையை முதன் முதலில் பிடிக்கும்போது உச்சரிக்கும் மந்திரங்களில் சிறந்த கருத்துக்கள் அடங்கியிருக்கின்றன.

*"க்ருஹ்ணாமி தே சுப்ரஜாஸ்த்பாய ஹஸ்தம்*
*மயா பத்யா ஜரத்'ஷ்டிர்யதா'ஸ: !*
*ப'கோ அர்யமா ஸவிதா புரந்தி'ர்*
*மஹ்யம் த்வாது'ர் கா'ர்ஹபத்யாய தே'வா: !!"*

"ஓ கன்னிகையே நல்ல சந்ததிகள் நமக்கு உண்டாவதற்காகவும் என்னுடன் இணைபிரியாது வாழ்நாள் முழுதும் வாழ்வதற்காகவும் உன்னுடைய கையை நான் பிடிக்கின்றேன். ப'கன், அர்யமா முதலிய தேவர்கள் அனைவரும் எனக்கு க்ருஹஸ் தாஸ்ரமத்தை ஏற்படுத்துவதற்காக உன்னைக் கொடுத்திருக்கின்றனர்."

எல்லா ஜீவராசிகளுக்கும் பொதுவான குணங்கள் இரண்டு - ஒன்று சுயபாதுகாப்பு. இரண்டாவதாக இனப்பெருக்க உணர்வு. கணவனும் மனைவியுமாக இருவர் இணைவதும் இந்த அடிப்படையில்தான். திருமணம் தம்பதிகளுக்கு ஒரு பாதுகாப்பை அளிக்கிறது. இரண்டாவதாக, திருமணம் என்ற சடங்கு ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே கண்மூடித்தனமான மோகத்தைக் குறைத்து, ஆரோக்கியமான உறவை ஏற்படுத்துகிறது. கணவனும் மனைவியும் இணையும் பொழுது என்ன மனநிலையில் இருக்கிறார்களோ அந்த அடிப்படையில்தான் அவர்களின் குழந்தைகளின் மனோபாவமும் நடவடிக்கைகளும் அமையும் என்று விஞ்ஞானரீதியாக நிரூபித்திருக்கிறார்கள். வெறும் காமத்திற்காக இல்லாமல் சிறந்த ப்ரஜைகளை பெற்றெடுக்க வேண்டும், அவர்களால் நாட்டுக்கும் வீட்டுக்கும் நன்மை ஏற்பட வேண்டும் என்ற எண்ணத்துடன் கணவனும் மனைவியும் இணைந்தால் நிச்சயமாக அப்படியே சிறந்த குழந்தைகளை அவர்கள் பெறுவார்கள். அதனால் நாடே சிறப்புறும். அதற்காகத்தான் திருமண மந்த்ரங்களில் அடிக்கடி 'சிறந்த ப்ரஜைகளை' பெறவேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது.

பாணிக்கிரஹணத்தின் போது உச்சரிக்கப்படும் இன்னோர் மந்த்ரத்தையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

*ஸரஸ்வதி ப்ரதே3மவ ஸுப'கே' வாஜினீவதி!*
*தாம் த்வா விர்வஸ்ய பூ4தஸ்ய ப்ரகா3யா - மஸ்யக்'ரத : !!*

"நல்ல பாக்யம் பெற்றவளும் அன்ன ஸம்ருத்தியை பெற்றவளுமான ஓ ஸரஸ்வதி தேவியே! நாங்கள் இருவரும் எல்லா நலன்களையும் அடையும் பொருட்டு உன்னைத் துதிக்கிறோம்."

நற்காலத்தில் ஸரஸ்வதியை கல்விக்கான தேவதையாக வணங்குகிறோம். ஆனால் வேத காலத்தில் ஸரஸ்வதியை 'அன்னம் நிரம்பியவள்' (வாஜினீவதி) என்றே குறிப்பிட்டு வந்தனர். பாணிக்கிரஹணத்தில் ஸரஸ்வதியைப் பற்றிக் குறிப்பிட வேண்டிய அவசியம் என்னவென்றால் குடும்பப் பொறுப்பை ஏற்கவிருக்கும் மணப்பெண்ணும் ஸரஸ்வதியைப் போல் 'அன்னபூரணி'யாக விளங்க வேண்டும் என்பதேயாகும். அன்னமிடுவதாலேயே அவள் அன்னை ஆகிறாள். அன்னத்தைக் கடவுளாகப் பார்க்கின்றன உபநிடதங்கள் - 'அன்னம் ப்ரஹ்மேதி வியஜானாத்' அந்த அன்னத்தை ஆக்கி அனைவருக்கும் அளித்து பசியைப் போக்கும் அன்னையும், தாரமும் கடவுளுக்குச் சமம். இத்தகைய கருத்துக்கள் நமது பண்பாட்

**மார்ச், ஏப்ரல், மே மாதங்களில் பிற்பகலில் வெய்யில் சுளீரென்று அடிக்க (கண்ணாடி ஸ்லைடிங் ஜன்னல்கள்) திரைச்சீலை போட்டாலும் கூட, (ஒரே வாரத்தில் வெளுத்து விடுகிறது) தூங்க முடிவதில்லை. வாஷிங் மெஷின் வாங்கியபோது கிடைத்த பெரிய கார்டுபோர்டு அட்டைப் பெட்டியை படிமானமாகச் செய்து பால்கனிக் கம்பி வலைக்குள் செருகி விட்டேன். வீட்டிலுள்ளவர்கள் டி.வி. பார்க்கும்போது 'கிளேர்' அடிக்காமலும் குளுமையாகவும் நன்கு ஓய்வெடுக்க முடிகிறது.**

**- லக்ஷ்மி சுந்தரம்**



# நனவாகும் கனவுகள் இந்த பரிசிலே




இதில் அடங்கியுள்ளவை: 1 தவா, 1 ஃப்ரைபேன், 2 சாட்டே பேன்கள், 3 சாஸ் பேன்கள் மற்றும் 3 மூடிகள்.
பிரெஸ்டீஜ் விற்பனை நிலையங்களிலும் தேர்ந்தெடுத்த டிபார்ட்மெண்ட் ஸ்டோர்களிலும் ரூ. 2495/- க்குக் கிடைக்கிறது.

'துறுதுறு' வென்று சுட்டிப்பையனாக இருந்த உங்கள் ராஜகுமாரன் தன் ராஜகுமாரியை உங்கள் அரண்மனைக்கு அழைத்து வரப்போகிறான். இருவரும் தங்கள் வாழ்வின் இனிய பயணத்தைத் துவங்க இருக்கும் இந்நேரத்தில், உங்கள் ஆசியுடன் அவர்களுடைய வாழ்க்கைப் பயணம் இன்னும் ஆனந்தமாக இருக்க உதவும் ஓர் அன்பளிப்பை அளித்திடுங்கள்.

பிரெஸ்டீஜ் கிச்சன்-இன்-எ-பாக்ஸ். இவர்கள் வாழ்வும் தேவலோகக் கதைகள் போல இன்பமயமானதாக இருக்க உதவும் மிகச் சிறந்த தரமுள்ள பத்து நான்-ஸ்டிக் குக்வேர் பாத்திரங்கள். நிஜவாழ்விலும் என்றென்றும் சந்தோஷமாக வாழ உதவப்போகும் துணைகள்.

**Prestige**
PREMIUM
NON-STICK COOKWARE

அன்புக்குரியவருக்கு ஓர் அன்புப் பரிசு.

181-97

A TTK Product

டில் கலந்து நிலவியதாலேயே நமது நாட்டுப் பெண்கள் கற்பின் சிகரங்களாக விளங்கி வந்திருக்கின்றனர். பூகோளரீதியாகவும், உணவு, உடை முதலிய பல்வேறு விஷயங் களிலும் வேறுபட்டிருந்தாலும் பண்பாடு ரீதி யாக இந்திய மக்கள் ஒன்றுபட்டிருந்ததற்கு இத் தகைய கருத்துக்களே காரணம்.

பாணிக்கிரஹணத்தில் உச்சரிக்கப்படும் மற்றோர் மந்த்ரம் வாயுதேவனைக் குறித்து. "எல்லாவற்றையும் சுத்தி செய்கின்றவரும், எல்லா இடங்களிலும் சமமாகப் பரவி நிற் கின்றவரும் தனது கையில் தங்கத்தை வைத்துக் கொண்டிருப்பவரும் அக்னிக்கு நண்பருமான வாயுதேவன் உன்னை, என்னிடம், பற்றுள்ளவ ளாகச் செய்யட்டும்" என்று மணமகன் பிரார்த் திக்கும் விதத்தில் அமைந்திருக்கிறது.

இயற்கையில் காற்று தூய்மையானது. நாம்தான் அதை மாசுபடுத்துகிறோம். அசுத் தத்தை நீக்கும் தன்மையும் காற்றுக்கு உண்டு. காற்றின் முன் எல்லா ஜீவராசிகளும் சமம். காற்று ஒருவனுக்கு உஷ்ணத்தையும் மற்றொரு வனுக்குக் குளிர்ச்சியையும் அளிக்காது. அனைத்து ஜீவராசிகளையும் வாழவைக்கும் தங்கம் போன்ற பிராணவாயுவைத் தாங்கி வரு கிறது காற்று. தவிர உயிர்ச் சக்தியையும், வளர்ச்சி சக்தியையும் சேர்த்து வைக்கும் திறன் காற்றுக்கு உண்டு. மரத்தின் விதைகளை அடித் துச் சென்று வளரக்கூடிய இடத்தில் சேர்த்து இனப்பெருக்கத்தை விருத்தி செய்கிறது. காற்றைப் போலவே பெண்ணும் தூய்மையான வள். குடும்பத்தில் உள்ள அனைவரையும் சம மாக பாவித்து வளர்க்கிறாள் அவள். குழந்தை களைப் பெற்று வளர்த்து சந்ததியை உருவாக்கு கிறாள் அவள். எனவே அவளும் பத்தரைமாற் றுத் தங்கத்திற்கு ஒப்பானவள் என்ற உட் கருத்துக்களைக் கொண்டதாக அமைந்திருக் கிறது மேற்குறிப்பிட்ட மந்த்ரம்.

திருமணத்தில் பல சடங்குகள் குறியீடுகள் என்ற முறையில் அமைந்திருக்கின்றன. எனவே அவற்றின் உட்கருத்தை அறிந்து அதன்படி நாம் நடக்க வேண்டும். அப்படி அமைந்த சடங்குகளில் ஒன்று "சப்தபதி" அதாவது கண வனும் மனைவியும் கைகோர்த்தவாறு ஏழு அடி எடுத்து வைத்தல். ஏழு அடி இணைந்து நடப்பது ஒரு குறியீடாக நட்பைக் குறிக்கிறது.

இந்த ஏழு அடிகளும் முறையே அன்ன சம்ருத்தி, வாழ்க்கையில் முன்னேற்றம், நன் னெறி, இன்பம், செல்வம், இயற்கை அனு கூலம், சான்றோர்களின் நட்பு இவற்றை அடையும் பொருட்டு கணவனும் மனைவியும் எடுத்துக் கொள்ளும் உறுதியை எடுத்துக்காட்டு கிறது. கணவன் மனைவி ஆகிய இருவரி டையே உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பேதம் கிடையாது. இருவருக்கும் சம உரிமை உண்டு என்பதை 'சப்தபதி' மந்த்ரம் வலியுறுத்துகிறது. நாமிருவரும் நல்ல நண்பர்கள் போன்று இணைபிரியாமல் இருப்போம். உடலாலும் உள்ளத்தாலும் இணைந்து இல்லறத்தின் இன்பங்களை நுகர்வோமாக. குடும்ப விஷயங் களில் கலந்தாலோசித்து முடிவு எடுப்போமாக.

*'த்'யௌரஹம் ப்ருத்'வீ த்வம்*

*மனோஹமஸ்மி வாக்த்வம்*

"நான் ஆகாயம், நீ பூமி. நான் மனம் நீ சொல்' என்கிறான் கணவன். அதாவது நீயின்றி நானில்லை. எனவே நாமிருவரும் ஒரு வரை ஒருவர் நன்கு புரிந்து கொண்டு சிறப் பாக வாழ்வோமாக என்கிறான்.

அடுத்து வரும் சடங்கு அம்மி மிதித்தல். நீ கல்லைப் போல் உறுதியாக இருக்க வேண் டும் என்பது இங்கு கூறப்படும் மந்த்ரத்தின் பொருள். குடும்ப நிர்வாகத்தில் எவ்வளவோ பிரச்னைகள் வரலாம். அவற்றை எதிர் கொண்டு உறுதியுடன் சமாளிக்க வேண்டும் என்பதை குறிப்பாக உணர்த்துகிறது இச் சடங்கு.

வசிஷ்டரின் தர்மபத்னி அருந்ததி. அருந்த தியைப் போல் ஒரு பெண் கற்பில் சிறந்து விளங்க வேண்டும் என்பதைக் குறிக்கும் சடங்கு அருந்ததி பார்த்தல். 'த்'ருவ' என்றால் உறுதி என்று பொருள். அதன் பொருட்டு த்ருவ நக்ஷத்திரம் மணப்பெண்ணுக்குக் காட் டப்படுகிறது. குடும்ப பந்தத்தையும் அதனால் ஏற்படும் பொறுப்புகளையும் குறிக்கும் பொருட்டு முறுக்கிய தர்ப்பைக் கயிறு பெண் ணுக்குக் கட்டப்படுகிறது. அது போலவே பெண்ணின் தலை மேல் 'நுகத்தடியை' வைத் துச் செய்யப்படும் சடங்கிற்கும் நிறைய உட் பொருள் இருக்கிறது. நுகத்தடி என்பது பாரத்தை சுமக்கும் தன்மையை குறிக்கிறது. திருமணமாகும் பெண்ணுக்கு ஏற்படவிருக்கும் புதிய பொறுப்புகளை குறிப்பாக உணர்த்து கிறது இச் சடங்கு.

இப்படி ஒவ்வொரு மந்த்ரத்தின் பொரு ளையும் உணர்ந்து கைத்தலம் பற்றி அருமை யான வாழ்க்கையை வாழ்வோமாக.

பேட்டி : **கீதாமோஹன்**



**முக அழகு க்ரீம்களை ப்ரிட்ஜிலேயே போட்டு வைக்கலாம். முகத்தில் தடவும்பொழுது ஜில்லென்று இருக்கும்.**

**- சித்ரா சுரேஷ்**



# இது நம்ம வீட்டுக் கல்யாணம்

தங்கள் மகளுக்குத் திருமணம் நிச்சயமானதும், மனம் சிறகடித்துப் பறந்தாலும், பிள்ளை வீட்டாரின் மனம் கோணாமல் நடந்து அவர்களை மகிழ்விக்க வேண்டுமே, சம்பந்தி சண்டை வராமல் நல்லபடியாகத் திருமணம் நடக்க வேண்டுமே என்று பெண் வீட்டார் கவலை கொண்ட நாட்கள் அன்று. இன்றைய கம்ப்யூட்டர் காலத்தில், பெண், பிள்ளை வீட்டார் என்ற பாகுபாடுகள் மறைந்து, சம்பிரதாயங்கள் குறைந்து விட்டதோடு ஒரு கல்யாண கான்ட்ராக்டரை ஏற்பாடு செய்து கொண்டு சுமைகளை, பாரத்தை (மனபாரத்தையும் தான்) குறைத்துக் கொண்டு பரஸ்பரம் மகிழ்ச்சியுடன் திருமணத்தை முடிக்கும்



காலமாகி விட்டது இன்று!

திருமணத்துக்குத் தேவையான சாப்பாடு, சீர் பட்சணங்கள் மட்டுமின்றி கோலம் போடுவது முதல் மேளம், வீடியோ, போட்டோ கட்டுசாதக் கூடை வரை அனைத்துக்கும் பொறுப்பேற்று நடத்தித் தரும் கல்யாண கான்ட்ராக்டர்கள் "அங்கிங்கெனாதபடி எங்கும்" பரவியிருந்தாலும், வியாபார ரீதியாக மட்டும் திருமணத்தை நடத்தித் தராமல் 'இது என் மகன் கல்யாணம்' என்று ஈடுபாட்டுடன், சிரத்தையுடன் நடத்தி சந்தோஷப்படும் வெகு சிலரில் வளசரவாக்கம் ஜானகி நகரைச் சேர்ந்த ரகுபதி அவர்களும் ஒருவர் என்பதுடன், பாரம்பரியமிக்க, மிகவும் பிரபலமான திருச்சி மலைக்கோட்டை அம்பி அய்யர் ஹோட்டல் நடத்திய சமையல் கலை நிபுணர்களான சகோதரர்கள் குடும்பத்திலிருந்து வந்தவர் என்ற பெருமையும் பெற்றவர்.



• ரகுபதி

"கடந்த பல வருடங்களாக நான் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளேன். திருச்சி மலைக்கோட்டையில் என் பெரியப்பா அம்பி அய்யர், என் தந்தை மணி அய்யர், அவரது தம்பிகள் நீலகண்டன், வைத்தியநாதய்யர் நால்வரும் பாலக்காட்டில் கொல்லங்கோட்டில் இருந்துவிட்டு திருச்சி வந்தனர். அம்பி அய்யர் ஹோட்டலை ஆரம்பித்தனர். அம்பி அய்யர் ஹோட்டலில் தன் ஆரம்ப காலத்தைத் தொடங்கியதாக ஆனந்தவிகடனில் 'அறுசுவை' நடராஜன் அவர்கள் எழுதியிருந்தது எங்களுக்கு மிகப் பெருமையாக இருந்தது. விடியற்காலை நான்கு மணி முதல் எட்டரை வரையும், மதியம் இரண்டரை மணி முதல், மாலை ஆறு மணி வரையும் வியாபாரம் பிய்த்துக் கொண்டு போகும்.

மலைக்கோட்டையின் கீழ் பிள்ளையாருக்கு முதல் விளக்கு ஏற்றி விட்டு கடையைத் திறப்பார் பெரியப்பா. அரைமணி நேரம் முன்னதாகவே வந்து கடை முன் வரிசையில் நின்று திறந்தவுடன் உள்ளே ஓடி அமருபவர்களுடன், கொல்லைப்புற வழியாக நுழைந்து இடம்பிடிப்பவர்களும் எங்களது




Reclamation

டிகிரி காப்பியை சுவைக்க வருபவர்களே! பட்டணம் பக்கோடாவுக்குத் தொட்டுக் கொள்ள பம்பாய் சட்னி (கடலை மாவு சட்னி) இருக்கும் என்பதால் விரும்பி வருபவர்கள் பலர். பிரபல ஸ்வீட் ஸ்பெஷலிஸ்ட் சிவராமகிருஷ்ணய்யர் அவர்களிடம் கற்றுத் தேர்ந்த என் சித்தப்பா நீலகண்டய்யரும் நிபுணராக இருந்ததால் இனிப்புக்குப் பெயர் பெற்றதாகவும் ஆனது.

என் தந்தைக்கு நாங்கள் மூன்று மகன்கள். சரீர உழைப்பும், கடினமான அடுப்படி வேலையுமான சமையல் தொழிலில் தங்கள் பிள்ளைகள் ஈடுபட்டு, கஷ்டப்படுவதை விரும்பாததாலும், படித்துவிட்டு உத்தியோகத்தில் வரவேண்டும் என்ற தந்தைக்கே உரிய நியாயமான ஆசையாலும் எங்களை ஹோட்டல் தொழிலில் ஈடுபடுத்தாமல் படிக்க வைத்தனர். நான்கு சகோதரர்களின் பிள்ளைகளும் படித்துப் பட்டம் வாங்கியதும், நான்கு பேருக்கும் வயதாகிவிட்டதால் ஹோட்டல் தொழிலை முடித்துக் கொண்டு சென்னைக்குக் குடிபுகுந்தோம்.

ஒவ்வொருவரும் நல்ல உத்தியோகத்தில் அமர்ந்தனர். '71-ல் எனக்குத் திருமணமும் நடந்தது. நான் மருந்துக் கம்பெனியில் சேல்ஸ்



மேனாக, மெடிகல் ரெப்பாக வேலை செய்தேன். எத்தனை கஷ்டப்பட்டு வியாபாரம் செய்தாலும் மேலும் மேலும் உச்சவரம்பை அதிகமாக்கிக் கொண்டேயிருந்தது எனக்கு அலுப்பைத் தந்தது. அதனால் வேறு வேலை செய்ய நினைத்தபோது, என் அண்ணாவும் மன்னி ஜெயம் வேதநாராயணனும் நம் குடும்பத் தொழிலில் ஈடுபட்டால் சுதந்திரமாக செயல்படலாம். இன்றைய காலக்கட்டத்தில் உனக்கு நல்ல வருமானம் தரக்கூடிய தொழிலாகவும் இருக்கும் என்று உற்சாகப்படுத்தி



என்னை இதில் ஈடுபடச் செய்தனர். அப்போது நான் தியாகராயநகர் முன்னார் ரெட்டி தெருவில் இருந்தேன். என் வீட்டருகே கல்யாணங்களுக்கு முறுக்கு சுற்றும் மாமியும், ஹெட்குக் ஒருவரும் இருந்தனர். என் அண்ணா சொன்ன அறிவுரைப்படி அவர்களுடன் கூடச் சென்றேன். உடனிருந்து தொழிலை கவனிக்க ஆரம்பித்தேன். ஹோட்டல் தொழிலுக்கும் கல்யாண காண்ட்ராக்ட் எடுத்துச் செய்வதற்கும் உள்ள வித்தியாசத்தை, நெளிவு, சுளிவுகளை நுணுக்கங்களை கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தேன். என் உடலிலும் குடும்ப ரத்த சம்பந்தமான சமையல், ஹோட்டல் துறை அனுபவமும் இருந்ததால் என்னால் கற்பூரம் போன்று சடக்கென்று தொழிலை விரைவில் குறுகிய காலத்தில் பலராலும் பேசப்படும்படி செய்ய முடிந்தது.

86-ம் ஆண்டு தனியாகக் கல்யாண காண்ட்ராக்ட் எடுத்துச் செய்ய ஆரம்பித்தேன். மிகுந்த கவனத்துடன் செய்ய வேண்டிய தொழில் இது. ஒருமுறை தவறு ஏற்பட்டால் கருத்து வேறுபாடுகள் தோன்றினால், கெட்ட பெயராகிவிடும். தொழிலில் முன்னுக்கு வரவே முடியாது என்பதை கவனத்தில் கொண்டு செயல்பட்டேன். எங்கே? எப்படி தவறு நேர்கிறது? திறமையும், கடின உழைப்பும் உள்ளவர்களைத் தேர்ந்தெடுப்பதுதான் வெற்றிக்கு முதல் படியாகிறது. நமக்கென்று சில நபர்களை வைத்துக் கொண்டு வேலை செய்யாமல், அந்தந்தத் தொழிலில் நிபுணராக இருப்பவர்களைத் தேர்ந்தெடுத்து அழைத்து வைத்துக் கொள்ள வேண்டும். என்னிடம் உள்ள ஹெட்குக், ஸ்வீட் செய்பவர் சரியாக செய்யாவிட்டால் கெட்ட பெயர் எனக்குத்தானே! சாம்பார், ரசம், கறி, கூட்டு செய்யவும், பாயசம் செய்யவும், ஸ்வீட்டுகள், வடஇந்திய உணவு வகைகளை செய்யவும் தனித்தனியாக அந்தந்தத் தொழிலில் நிபுணத்துவம் வாய்ந்தவர்களை அழைத்து வருகின்றேன். ருசியில் எந்தக் குற்றமும் வராது இல்லையா? பூரி என்று மெனுவில் இருந்தாலும் சோலாப்பூரி சென்னாவும், அல்லது நான், மட்டர். பன்னீர் எனும் ஹோட்டல் அயிட்டங்களைத் தயார்



பால் வெகுநேரம் கழித்து உரையூட்டும்படி இருந்தால் திரிந்து விடுமோ என்று சந்தேகம் கொண்டு காய்ச்ச வேண்டாம். அந்தப் பாலில் சூடான வெந்நீரை ஊற்றி வெதுவெதுப்பாய் வந்ததும் உரையூற்றினால் நன்றாகத் தோயும். பாலும் திரியாது. தயிரும் கசக்காது. (ஆவின்பால் போன்ற பதப்படுத்தப் பட்ட பாலுக்கு இது பொருந்தும்)

– கி. மஞ்சுளா

செய்து அசத்துவேன். பூரிக்கும் சோலா பூரிக்கும் வித்தியாசம் செலவில் மிகக் குறைவாகத் தான் இருக்கும். அவர்கள் தந்தாலும் சரி, தரா விட்டாலும் சரி நான் கேட்டதில்லை. லாபத்தில் சிறிது குறைந்தாலும் பிரமாதம் என்று வாயாரப் புகழ்வது தரும் மகிழ்ச்சிக்கு ஈடு இணையில்லை.

சமையலில் மட்டுமல்ல, முதல் நாள் சத்திரத்தில் வந்து கோலம் போடக் கூட அக்கலையில் தேர்ச்சி பெற்றவர்களை அழைத்து வருகிறேன். அவர்கள் மடி சமையல் செய்பவர்களாகவும் இருப்பதால் சில வீட்டார் விருப்பப்படி குளித்து, மடிசார் கட்டிக் கொண்டு தனி சமையலும் செய்வதில் வல்லவர்கள். முறுக்கு, சீர் பட்சணங்கள், பருப்புத் தேங்காய் இவற்றைப் பல வருடங்கள் அனுபவப்பட்ட திருவல்லிக்கேணி ராஜம் மாமி, மயிலாப்பூர் சரஸ்வதி மாமி இவர்கள்தான் செய்கிறார்கள். கலர் போட்டு, பல டிசைன்களிலும் முறுக்கு செய்து அலங்கரிக்க வைப்பார்கள்.

என் மனைவி லக்ஷ்மி, மூத்த மகள் ஜானகி (தற்போது திருமணமாகி விட்டது) பி.காம். படிக்கும் மகன் வெங்கடாஜலம், இன்ஜினியரிங் படிக்கும் இளைய மகள் சந்தியா அனைவரும் அழகாக, தனித்தனியாக பிளாஸ்டிக் கவரில் போட்டு சீல் செய்து, கெட்டியான அட்டைப் பெட்டியில் பேக் செய்து, இரண்டு கலர் பேப்பர்களை ஒட்டி, ஒன்று பிள்ளை வீட்டாருக்கும், மற்றொன்று பெண் வீட்டாருக்கும் பெயரெழுதி தயாராக வைப்பார்கள். என் மனைவி (வேலைக்கும் போய்க் கொண்டு) சரியான வேலைக்காரி கிடைக்காததால் (நான் வேலையை விட்டு இந்தத் தொழில் ஆரம்பிக்கு முன் இடைப்பட்ட காலத்தில் பி.எஸ்ஸி., பட்டதாரியான என் மனைவி வேலைக்குப் போக ஆரம்பித்து குடும்பத்தை நிர்வகித்தாள்) பாத்திரங்கள் தேய்த்து, பட்சணம் செய்யும் நாட்களில் மாமிகளுக்கு காப்பி, டிபன், சாப்பாடு செய்து தந்து பல வழிகளிலும் எனக்கு உதவுவதை நான் சொல்லியே ஆக வேண்டும்.

"சில காண்டராக்டர்கள் மண்டபத்தை புக் செய்து கொண்டு, தங்களிடம் காண்ட்ராக்ட் தரவேண்டும். அப்போதுதான் சத்திரமே கிடைக்கும் என்கிற நிலை இன்று உள்ளதே? அது சரியானதா?"

''தவறுதான். நான் அப்படிச் செய்வதில்லை. நிர்ப்பந்தப்படுத்தி ஒரு வேலையைப் பெற்றுக் கொண்டால் பரஸ்பரம் திருப்தி இருக்காது. சிறு குறை இருந்தாலும் பெரிதாக்கப்படும். கருத்து வேறுபாடுகள் அதிகம் வரும். நாம் கல்யாணம் செய்யும் முறையை அடுத்தவர்கள் பாராட்டி அதன் மூலம் நமக்கு வேலை கிடைப்பதுதான் நிலையானது. காலப் போக்கில் இந்நிலை மாறிவிடும் என்றே நினைக்கிறேன். ஒருவர் ஏற்கெனவே பேசிய வேலையை சற்று பணம் குறைத்துக் கொண்டு செய்வதாகச் சொல்லி இடையில் புகுந்து கெடுப்பதும் இல்லை. ஒருவர் வயிற்றில் அடித்து மற்றவர் மேன்மையாக வாழ முடியாது. ஒரே தொழில் செய்பவர்கள் நாங்கள் ஒற்றுமையுடன் செயல்பட்டால்தான் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளவும், தொழில் தேவைகளை கருத்துப் பரிமாற்றங்களை செய்து கொள்ளவும் முடியும்.

கல்யாணம் ஏற்பாடு செய்பவர்களுக்கு முழு திருப்தியும் ஏற்படும்படி நடத்து கொள்ள முடிந்த அளவு பிரயத்தனப்பட்டாலும் சிறு குறைகள் ஏற்படத்தான் செய்கிறது. ஒவ்வொரு கல்யாணமும் அனுபவரீதியான பாடங்களைக் கற்றுக் கொடுப்பதால் வெற்றிப் படிக்கட்டில் ஏற, அக்குறைகளை திரும்ப நடக்காமல் நிவர்த்தி செய்து எச்சரிக்கையுடன் நடப்பதாலும், அன்பு, மரியாதை, பணிவு, பொறுமை (பெண்களுக்கு நாலு குணம் போல்) எனும் சிறந்த குணங்களாலும், பிள்ளை வீட்டாரின் கோபத்தை மாற்றி, சமயோசிதமாக செயல்படுவதாலும் மட்டுமே இத் தொழிலில் முன்னேற முடியும் என்பது என் வாழ்க்கைப் பாடம். விளம்பர யுகத்திலே, இன்று யார் சமையல்? என்று கேட்டு பாராட்டி மகிழ்பவர்களும், கடிதம் தந்து என்னை கௌரவிப்பவர்களும்,

GURUDEV

# சுராணா! சுராணா!

இரும்பு போன்ற உறுதி,
தங்கம் போன்ற
நாணயம் கொண்ட
குழுமத்தின்
ஒரு அங்கம்.

## சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்

## அளிக்கும் முதலீடு திட்டங்கள்

# ஆண்டுக்கு வட்டி விகிதம் 15%

CARE
மதிப்பீட்டாளர்களால்
"போதுமான பாதுகாப்பு"
சான்றிதழ் பெற்றது.
(BBB+)

சுராணா நிறுவனங்கள் 1971 முதல் இயங்கி வருபவை. 25 ஆண்டு அனுபவம் பெற்றவை.

சுராணா நிறுவனங்கள் இரும்பு உற்பத்தி, இரும்பு வியாபாரம் முதலிய தொழில்களில் ஈடுபட்டுள்ளன. இக்குழுமம் தென்னகத்தில் இரும்பு வியாபாரத்தில் முதலிடம் வகிக்கிறது.

குழுமத்தின் மொத்த விற்பனை அளவு ரூ.125 கோடி.

சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட் (SFCIL), ஹயர் பர்ச்சேஸ், லீசிங், பில் டிஸ்கௌண்டிங், ஃபாரின் எக்ஸ்சேஞ், பப்ளிக் டிபாசிட் போன்ற பல வகைப்பட்ட நிதி நிர்வாகத்தில் ஈடுபட்டுள்ளது.

### SCHEME 1 - FIXED DEPOSITS

| Period (Months) | Rate of Interest per annum |
|---|---|
| 12 | |
| 24 | 15.00% (Monthly) |
| 36 | 15.19% (Quarterly)* |
| 48 | 15.48% (Half-yearly)* |
| 60 | |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Minimum Amount of Deposit for Monthly Interest is Rs.10,000/-
* Interest at 15% Compounded at Monthly rests.

### SCHEME 2 - GURUDEV CERTIFICATE
(Cumulative Deposit)

| Period (Months) | Minimum Amount (Rs.) | Maturity Value (Rs.) | Maturity Value for Rs. 1,000/- | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|---|
| 12 | 3,000 | 3,482 | 1,161 | 16.06 |
| 24 | 3,000 | 4,042 | 1,347 | 17.36 |
| 36 | 3,000 | 4,692 | 1,564 | 18.80 |
| 48 | 3,000 | 5,446 | 1,815 | 20.38 |
| 60 | 3,000 | 6,321 | 2,107 | 22.14 |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Addition in Multiples of Rs.1,000/-
3. Interest at 15% Compounded at Monthly rests.

### SCHEME 3 - SURYODAY CERTIFICATE
(Cumulative Deposit)

| Period (Months) | Principal (Rs.) | Maturity Value (Rs.) | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|
| 12 | 862 | 1,000 | 16.01 |
| 24 | 742 | 1,000 | 17.38 |
| 36 | 639 | 1,000 | 18.83 |
| 48 | 551 | 1,000 | 20.37 |
| 60 | 474 | 1,000 | 22.19 |

Interest at 15% Compounded at Monthly rests.


**சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்**

குரூப் ஆப் சுராணா

நெ. 16, ஒயிட்ஸ் சாலை, இரண்டாவது மாடி,
சென்னை - 600 014.

போன் : 8543145 / 8522684 / 8525596 / 8525396 / 8525694

ஃபாக்ஸ் : (044) - 8520587.

**கிளைகள்** : திருச்சி போன்: 461821, கொச்சிட்டம் போன்: 77454, சங்கராந்தம் போன்: 85423, 85536, பெங்களூர் போன்: 2281143, எர்ணாகுளம் போன்: 374617, கோயம்புத்தூர், ஆகிய இடங்களில் உள்ளன.


29.9.96 தேதியிட்ட மக்கள் குரல், Trinity Mirror நாளிதழ்களில் வெளியான சட்டபூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சி

ADWAVE/SFC/5420

உங்கள் உடம்பு

எப்போதும்

# கொதிக்கிறதா?

## காச நோய்

## உங்களுக்கு இருக்கக்கூடும்.

**இ**ந்தியாவில் ஒவ்வொரு இரண்டு பேர்களில் ஒருவர் காசநோய்க் கிருமிகளை கொண்டிருக்கிறார்கள். அதிர்ஷ்டவசமாக, அவர்களில் பெரும்பாலானோர் அந்த கொடிய நோயைத் தடுக்கக்கூடிய நோய் எதிர்ப்பு சக்தியைப் பெற்றுள்ளனர். மறுபுறம், நோய் எதிர்ப்பு சக்தியை தாக்கக்கூடிய எய்ட்ஸ் நோய்க்கிருமிகள், காச நோயினால் மரணமடைவோரின் எண்ணிக்கையை உயர்த்துகிறது.

**ஆ**னால் கவனத்துடன் உடனடியாக சிகிச்சை எடுத்துக் கொண்டால் காசநோய் 100% குணப்படுத்தக்கூடியதே.

**எ**னவே அதிக காய்ச்சல் தொடர்ந்து இருக்குமானால், மருத்துவரை அணுகி பரிசோதித்துக் கொள்ளுங்கள். அலட்சியப்படுத்தாதீர்கள். ஏனெனில் சாதாரண காய்ச்சல் நீங்கள் நினைத்துப் பார்த்திராத பெரிய பாதிப்பை ஏற்படுத்தக்கூடும்.

***ஒன்றுபட்டு செயல்படுவோம். காசநோயை ஒழித்திடுவோம்.***

**தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாட்டு அமைப்பு**
417, பாந்தியன் சாலை, எழும்பூர், சென்னை - 600 008.
போன் : 8255261 / 8255467 / 8254917
24 மணி நேரமும் இயங்கும் ஹாட் லைன் : 8256882 / 8256864





# பெண் சீதனத்தில் பொன் நகைகள்

"ஒரு காலத்தில் பொருளாதார சுதந்திரமில்லாதவள், படிப்பறிவற்றவள், சொத்து உரிமை இல்லாதவள் என்கிற காரணங்களினால் கல்யாணச் செலவில் ஒரு பெருந் தொகை பொன் நகைகள் சீதனமாக பெண்ணிற்கு அளிக்கப்பட்டு வந்தது. ஆனால் இன்றைக்கு அந் நிலைமையில் பெரும் மாற்றம். படித்த, பொருளாதார மேம்பாடு அடைந்த இன்றைய பெண், நகைகளை வாங்குவதை ஒரு சிறந்த சேமிப்பாகக் கருதுவதோடு அதில் 75% தன்னை அழகுபடுத்தி கொள்வதற்கு என்கிற கண்ணோட்டமுடையவளாக இருக்கிறாள்.

'நம்பிக்கையை' மட்டும் அடிப்படையாகக் கொண்ட தொய்வே வராத இந்த வியாபாரத்தில் படிப்படியாக ஏற்பட்ட மாற்றங்களைக் கூறுகிறார்கள்- பிரபலமான வழக்கறிஞர் ரமாமணியின் துணைவியார் திருமதி ஹேமலதா ரமாமணி. (இவர் மூன்று தலைமுறைகளைக் கண்டதோடு அக்கால இக்கால நகைகளின் தரத்திலும், வகையிலும் வேலைப்பாட்டிலும் விஷய ஞானமுடையவர்) 30 வருடங்களாக தங்க வியாபாரத் துறையிலிருந்து கொண்டு தென்னிந்தியாவில் மட்டுமின்றி வடநாட்டு வாடிக்கையாளர்களைக் (பெரும் பாலும் 'ஏ' இரேடு வாடிக்கையாளர் 'ஏ' இரேடு என்றால் விளக்கம் கட்டுரையினுள்ளே) கொண்ட திரு சுரேந்திர ஜெயின் மற்றும் நாம் போன அன்று தற்செயலாக தன் கல்யாணத்திற்கு நகைகள் வாங்க வந்திருந்த உளவியல் பட்டதாரியான குமாரி பூர்ணிமா :-



"பெண் பிறந்தவுடனேயே அவளது கல்யாணத்திற்கென்று சிறுக சிறுக நகைகளை வாங்கி சேமிக்கும் பழக்கம் தென்னிந்தியர்களிடையே தொன்றுதொட்டு இருந்து வருகிறது என்று ஆரம்பித்த திரு சுரேந்திர ஜெயின் தொடர்ந்து, "இது வட இந்தியர்களிடம் அவ்வளவாகக் கிடையாது என்றுதான் சொல்ல வேண்டும். பண்டிகை, விழா, விசேஷ நாட்கள் போன்ற நவைகள் வந்தால் மட்டுமே நகைகள் வாங்குவது அவர்களது வழக்கம். நகைகளில் போடப்படும் மூலதனம் என்பது எக்காலத்திலும், எவ்விடத்திலும் உலகின் எந்த மூலையிலும் செல்லுபடியாகக்கூடியது. தங்கத்தில் மூலதனம் செய்து ஒருவன்





• சுரேந்திரா

நஷ்டமடைந்தான் என்பது சரித்திரத்திலேயே கிடையாது. 'விற்கலாம், வைக்கலாம்.'

"தங்க நகைகள் சேமிப்பைப் பற்றி என் மாமியார் அடிக்கடி சொல்லும் வார்த்தை இது" என்று தொடங்கிய திருமதி ஹேமலதா,

"அந்தக்கால கல்யாணங்களிலெல்லாம் எவ்வளவு சேர் வெள்ளி, எவ்வளவு கோலார் தங்கம் பெண்ணிற்கு சீதனம் என்றுதான் கேட்பார்கள். சமுதாயத்தில் பெண்ணின் நிலைமையைக் கருதி சீதனத்தில் பெரும்பங்கு பொன் நகைகளுக்காக செலவிடப்பட்டது. பொருளாதார நிலையிலும் பிறரைச் சார்ந்திருந்த பெண்ணிற்கு நேரிடையாக சொத்துக்களை எழுதாமல் அவள் வயிற்றில் பிறந்த ஆண் வாரிசிற்குத்தான் எழுதி வைப்பார்கள். எனவே பெண்ணின் கௌரவம் கருதி பாதுகாப்புக் கருதி பொருளாதார ஒத்துழைப்பிற்காக காசு மாலை, ஒட்டியாணம், ஆரம், அட்டிகை போன்றவற்றில் பெருந்தொகை பணத்தை முடக்குவார்கள். வசதி படைத்தவர்கள் சுத்தமான சொக்கத் தங்கத்தில் பாத்திரங்களும் செய்து தருவார்கள். "Accumulation of Wealth' என்கிற மனப்பான்மை தங்கத்தைப் பொறுத்த வரை எக்காலத்திலும் பொருந்தும் என்றாலும் அக்காலத்தில் 'சேமிப்பு' என்கிற நோக்கில் மட்டுமே தங்க நகைகளில் பணம் செல விடப்பட்டது'' என்கிறார்.

• ஹேமலதா



அதிகம் பொடி வைத்த நகைகளானாலும் விதவிதமான டிசைன்களுக்கு முக்கியத்துவம் தருபவர்கள் வட இந்தியர்கள் என்கிறார் சுரேந்திரா. "எளிமையான அதே சமயத்தில் கொஞ்சம் கனமான நகைகளுக்கு தெற்குப் பக்கத்தில் மவுசு அதிகம். தங்க, வைர வியாபாரிகளை விட தென்னிந்தியாவில் குறிப்பாக சென்னைப் பட்டிணத்தில் பெரிய வீட்டுப் பெண்மணிகள் பலர் வைரங்களை ரகவாரியாக பிரிப்பதிலும் புதிய, புதிய டிசைன்களை உருவாக்குவதிலும் கைதேர்ந்தவர்களாக இருந்தார்கள். சிலர் அதற்காக தகுந்த வெகுமதியையும் தொடர்ந்து பெறுவதுண்டு. நானே அக்காலத்தில் பிரபல வக்கீலான திரு ராமானுஜத்தின் தாயாரின் வைர நகை அனுபவங்களையும், அவரது கற்பனைத் திறனையும் கண்டு வியந்திருக்கிறேன். கல்லின் தன்மைக்கேற்ப டிசைன்களை உருவாக்குவதிலும் கற்பனை அதிகமுள்ளவர்கள் அக்காலத்தில் நிறைய பேர் இருந்தனர்.

அன்றைக்கு 100 பவுனில் செய்த காசு மாலை இன்றைக்கு மூன்று பவுனில் செய்ய முடிகிறது. தொழில்நுட்ப முன்னேற்றங்களினால் நகைகளின் வடிவமைப்பிலும் இன்றைக்கு வியத்தகு மாற்றம் ஏற்பட்டுள்ளது. கல்யாணம் என்றாலே காசு மாலையும் கல் அட்டிகையும் தான் என்கிற நிலை மாறி இன்று மிகக் குறைந்த சவரன்களில் தக்கை போலிருக்கும் பெரிய சைஸ் நகை வகைகள் சந்தைகளில் ஏராளமாக விற்பனையாகின்றன. தானே வடிவமைத்து அதிக கூலி கொடுத்து செய்த நகைகளை பிறருக்கு அதே போல் செய்து தரக்கூடாது என்று கட்டளை போடுபவர்களுமுண்டு. இத்தகைய 'ஏ' கிரேடு வாடிக்கையாளர்களில் பெரும்பாலோர் நடிகைகளும், பெரிய தொழிலதிபர்களின் மனைவிமார்களும் அடங்குவர். கல்யாணத்திற்கு வைரத் தோடு போடும் வழக்கம் இங்கே ஒரு அந்தஸ்தை



பறைசாற்றுவதற்காகவே ஏற்பட்டுள்ளது. ஆனால் இக் காலப் பெண்கள் 'எங்களுக்கு பழைய மாதிரியே இருக்கின்ற தோடு வேண்டாமே, புதிய டிசைன் போட்டுத் தாருங்கள்' என்று வற்புறுத்துவார்கள். இவர்களுக்கு நான் சொல்வதெல்லாம் இதுதான். 'பழமை வகை எக்காலத்திலும் எப்படி வேண்டுமானாலும் உபயோகித்துக் கொள்ளலாம். அதனை கையாள்வதும் எளிது. நீங்கள் மற்றொன்று செய்யும் போது புதிய முறையில் செய்து கொள்ளுங்கள்' என்பேன்.

## 'ராக்கொடி, திருக்குப்பூ, கப்ளின் கடுக்கன்'

அந்தக் காலத்திலே காது நகைகள் என்று எடுத்துக் கொண்டால் தோடு, முருகு, கத்திரி பாவலி, கொப்பு என்று ஆரம்பித்த திருமதி ஹேமலதா தன் நினைவலைகளை திரும்பிப் பார்த்து,

"சுத்தமான தங்கத்திலே பலச்ச வைரம் (வெட்டப்படாத வைரம் இதனை வளந்தா வைரம் என்றும் கூறுவார்கள்) பதித்த வங்கி (படத்தில்) நாகர், ராக்கொடி, திருக்குப்பூ, மனோஹரமாலை, மாங்காய் மாலை, ஜடை கொத்சு, அட்டிகை, ஆரம் என்று அவரவர் தகுதிக்கேற்ப பெண்ணிற்கு சீதனமாகக் கொடுத்தால் மாப்பிள்ளைக்கும் கப்னிங் (வைர-பட்டன் சட்டைக்கு) செயின், தோடா, சாலிகர் கல்லில் கடுக்கன் (சாலிகர் – 50 சென்ட்டுக்கு மேலே உள்ள வைரத்தை இப்படித்தான்



பிளாஸ்டிக் சல்லடையில் தட்டுக்கள் பழையதாகி விட்டால் ஃப்ரேமை மட்டும் எடுத்து சுத்தம் செய்து தண்ணீர் தவலை வைக்கும் ஸ்டேண்ட் ஆக பயன் படுத்த உபயோகமாக இருக்கிறது.

— உஷாநாராயண்

அழைப்பார்கள்) செய்து தருவார்கள். இப்படி, அப்படியென்று மாப்பிள்ளைக்கும் கணிசமாக தங்கம் சேர்ந்து விடும் அந்நாளில். ஆனால் அதுவே இன்றைக்கு நகைகளில் போடும் முதலீடு பல ரூபங்களாக மாறியிருக்கிறது. கல்யாண நகை வகைகளில் மட்டுமல்லாது வருடச் சீர் வரிசையிலும் தங்க நகைகளில் பணம் போடாது பொங்கல், தீபாவளி, முதற் குழந்தை பிரசவம், புண்ணியாவசனம் போன்ற காலங்களில் தங்க நகைகளில் பணம் போடாமல் மிக்ஸி, கிரைண்டர், ப்ரிஜ், வாஷிங் மெஷின் என்று இன்றைய தேவைக்கேற்ப ரசனையை மாற்றிக் கொள்கிறார்கள். அது மட்டுமல்லாமல் பெண்ணை படிக்க வைத்து விடுவதால் பொன் நகைகளில் போடும் பணத்தின் அளவும் இன்றைக்குக் குறைவே" என்கிறார்.

## 'சினிமா ஸ்டார் கிளாமர் மாதிரி'

"என் மாமியார் பெண் குழந்தை பிறந்த நாளா, பண்டிகை, பருவம் என்றால் 'இந்தா ஒரு சவரன்' என்று தங்கத்தை சேர்ப்பதில் குறியாய் இருப்பார்" என்கிறார் ஹேமலதா. '25 ரூபாய்க்கு வைர ஊசி பாவாடை வந்தாலும் அதனை வாங்காது நாளைக்கே குரங்கு குட்டி மாதிரி உன் பெண் 'குப்'பென்று வளர்ந்து விடுவாள்' என்று அறிவுரையைச் சொல்லிச் சொல்லி கல்யாணத்திற்குள் கணிசமான நகைகள் சேர்ப்பதில் குறியாய் இருந்தார்கள். ஆனால் இன்றைய சூழலில் இளசுகளுக்கு அழகு படுத்திக் கொள்வதில் எத்தனையோ வழி. சந்தைக்கு வரும் நகைகளும் பொடி வைத்து ஊதி பத்த வைச்ச வகைகளும்தான் அதிகம் புழங்கிக் கொண்டிருக்கிறது. இவை யாவுமே சினிமா ஸ்டார் கிளாமர் மாதிரிதான். சிறிது காலத்திற்குப் பளபளத்து விட்டு அடுத்த முறை சந்தையில் காணாமல் போய் விடுகிறது."

இப்படிக் கூறிய திருமதி ஹேமலதாவின் கூற்றினை மறுப்பது போல் இருந்தது குமாரி பூர்ணிமாவின் கருத்து "என்னைப் பொறுத்த வரை கல்யாணத்திற்கென்று அதிக எடையுள்ள நகைகள் வாங்குவதை மிகவும் விரும்புகிறேன். காரணம்? அவை நல்ல முதலீடுகள். என்னதான் உடைகளின் நிறத்திற்கேற்ப மெடல், வெள்ளி ரக நகைகளை அணிந்து கொண்டாலும் நல்ல நாளில் ஒரு கண்ணியமான தோற்றத்தோடு மனத்திற்கு திருப்தி தருவது நம் பரம்பரை நகைகள்தான்."

மொத்தத்தில் திருமணங்களில் ஒரு காலத்தில் தங்கள் அந்தஸ்தை நிர்ணயிக்கும் தராசாகவும், சொத்தாகவும் காண்பிக்கப்பட்டு வந்த நகைகள் இன்றைக்கு அழகுபடுத்திக் கொள்வதற்காகவும் வாங்கப்படுகின்றன.

- கீதாமோஹன்

# திருமண மண்டபங்கள்

# மேலும் மேலும் வசதிகள்!



"திருச்செந்தூரிலே இருக்கும் எங்க வீட்டிலேயே தான் எனக்குத் திருமணம் நடந்தது. இப்படிக் கூறும் ராஜபாண்டியனின் திருமணம் வேண்டுமானால் எளிமையாக நடந்திருக்கலாம். ஆனால் இன்று சாஸ்திரி நகரில் உள்ள திருமணச் சத்திரம் ஒன்றுக்கு உரிமையாளராக இருக்கும் இவரிடம், என்னென்ன வசதிகளையெல்லாம் சத்திரத்தை புக்கிங் செய்ய வருகிறவர்கள் கேட்கிறார்களாம் தெரியுமா?

முன்பெல்லாம் சத்திரத்தின் பரப்பளவைத்தான் பார்ப்பார்கள். இப்போது வண்டிகள் நிறுத்துவதற்கான இடம் போதிய அளவு இருக்கிறதா என்பதையும் கவனிக்கிறார்கள். இது மட்டுமல்ல.

"எங்க சத்திரத்திலே பெண் வீட்டாருக்கு மூன்று அறைகளும், பிள்ளை வீட்டாருக்கு மூன்று அறைகளும் உண்டு. "ஒரு ரூம்கூட ஏ.சி. இல்லையா?" என்று சிலர் கேட்டாங்க. இதனாலே மணப்பெண்ணின் அறை, மாப்பிள்ளையின் அறை ஆகியவற்றிலும், சாந்தி முகூர்த்தத்துக்கு ஒதுக்கப்பட்டுள்ள அறையிலும் ஏ.சி. வசதியை அறிமுகப்படுத்தியிருக்கிறோம்.



• ராஜபாண்டியன்

பாத்ரூமிலே ஹீட்டர் இருந்தா வயசானவங்களுக்கு சௌகரியமாக இருக்குமேன்னு பல பொதுமக்கள் கருத்து தெரிவிச்சாங்க. நியாயம்தானேன்னு சில குளியலறைகளில் ஹீட்டர் வசதி செய்து கொடுத்தோம். போரிலிருந்து வரும் தண்ணீர் போதாது. மெட்ரோ வாட்டர்தான் குடிக்க ஏற்றது என்கிற கருத்தை கிட்டத்தட்ட எல்லோருமே கூறுகிறார்கள். எனவே லாரியில் குடிநீரை வரவைக்கிறோம். ஒரு லாரி தண்ணீர் வாங்கினால் இரண்டு நாள் திருமணத்திற்கு அது போதுமானது.

ஊஞ்சல், பன்னீர் சொம்பு, ட்ரே போன்றவற்றை நாங்களே ஏற்பாடு செய்து விடுகிறோம்.

இப்போதெல்லாம் எச்சில் இலைகளை பார்க்கக்கூட பலருக்கும் பிடிப்பதில்லை. அவற்றைக் கண்ணில்படாமல் பின்புறமாக எடுத்துச் சென்று லாரியில் ஏற்றி அனுப்பி விடுகிறோம்."

சத்திரத்தை புக் பண்ண வந்திருப்பவர்கள் இதையெல்லாம் எதிர்பார்க்க, ராஜபாண்டியன் அவர்களிடம் வேறொன்றை எதிர்பார்க்கிறார். புக் செய்யும்போதே சத்திரத்திற்கான முழு வாடகைத் தொகையையும் பெற்றுக் கொள்கிறார். "வேறென்ன செய்வது? அமெரிக்க மாப்பிள்ளைன்னு பார்க்கறாங்க. முதலில் சத்திரத்தை ஃபிக்ஸ் செய்தபிறகுதான் பெண் பார்க்கும் படலமே ஆரம்பமாகிறது. வரன் குதிரவில்லையென்றால் சத்திரத்திற்காக செலுத்திய குறைந்த முன் பணம் போனால் போகிறதென்று விட்டு விட்டு மாயமாக மறைந்து விடுகிறார்கள். அதனால்தான் முழுத் தொகையையும் பெற்றுக் கொள்கிறோம்" என்றார்.

ஏழைகளுக்கும், கீழ்நடுத்தர மக்களுக்கும் சத்திரத்தை பொறுத்தவரை என்ன பெரிதான எதிர்பார்ப்பு இருந்துவிடப் போகிறது என்ற எண்ணத்துடன் சி.பி. ராமசாமி தெருவில் இருக்கும் சமுதாயக்கூடம் ஒன்றை அணுகினோம். அதன் ஒரு நாளைய வாடகை ஆறாயிரத்து சொச்சம் என்று

கேள்விப்பட்டபோது மலைப்பாக இருந்தது.

"கார்ப்பரேஷன் கட்டிய இடத்திலேயே இவ்வளவு கேட்டா எப்படி?" என்று கணிச மாணவர்கள் கேட்கிறார்களாம். சற்றே பெரியதாகக் காட்சி தரும் இந்த சமுதாயக்கூடம் சுத்தமாகவும் பராமரிக்கப்படுகிறது என்பது ஆறுதலான விஷயம்.

பெரும்பாலான கல்யாண சத்திரங்களில், முஸ்லிம்கள் திருமணத்திற்கு அனுமதியில்லை. காரணம் மதம் அல்ல. உணவுப் பழக்கம். அவர்கள் திருமணத்தில் அசைவ உணவு இருந்தாக வேண்டும். இவர்களுக்கு சமுதாயக் கூடம் சௌகரியமாக இருக்கிறது.

இது போன்ற திருமண இடங்களிலும் வேறு சிலவற்றை எதிர்பார்க்கிறார்கள் மக்கள். "சத்திரத்திற்கு அழகாக ஒரு பெயர் வைக்காமல் இப்படி சமுதாயக் கூடம்னு போட்டா நல்லாவா இருக்குது?" என்கிறார்களாம் பலர்.

இன்விடேஷனில் "மாநகராட்சி சமூகக் கூடம் என்று அச்சடிப்பது கௌரவக் குறைச்சலாக இருக்கும்" என்று கூறி தங்கள் பிள்ளையின் திருமணத்தை இங்கு நடத்துவதற்கு கடும் எதிர்ப்பைத் தெரிவித்தார்களாம் சில பெற்றோர்கள்.

ஆழ்வார்ப்பேட்டையில் உள்ள ஒரு ஹைகிளாஸ் கல்யாண மண்டபத்தில் நுழைந்தோம். ஸ்ரீ நாராயண குருவய்யா சாரிடிஸ் ட்ரஸ்ட் என்ற அமைப்பு இதை நடத்தி வருகிறது. ஜார்ஜ் டவுனில் உள்ள வரதா முத்தையப்பன் தெருவில் உள்ள தங்கள் எளிய சத்திரத்துக்கு இவர்கள் வசூலிப்பது வெறும் ஐநூறு ரூபாய்தான். ஆனால் ஆழ்வார் பேட்டை சத்திரத்துக்கு இவர்கள் டிமாண்ட் செய்வது அதைப் போல சுமார் ஐம்பது மடங்கு.

இப்படியொரு எக்கச்சக்கமான தொகையை வசூலிக்கலாமா என்ற கேள்வியுடன் அணுகியபோது, ட்ரஸ்டின் கௌரவச் செயலாளர் பத்ரி நாராயணனும், கல்யாண மண்டபத்தின் மேனேஜர் சுவாமிநாதனும் தங்கள் சத்திரத்தின் வசதிகளைப் பட்டியலிட்டார்கள்.

"இப்போதெல்லாம் கல்யாண மண்டபத்தை புக் செய்ய வருபவர்கள் எத்தனை அறைகள் உண்டு என்பதை மட்டுமே கேட்டுவிட்டு நிறுத்திக் கொள்வதில்லை. அட்டாச்டு பாத்ரூம் இருக்கிறதா என்றும் கேட்கிறார்கள். இதனால் எங்கள் கல்யாண மண்டபத்தில் உள்ள பதினோரு அறைகளுக்கும் அட்டாச்டு பாத்ரூம் வசதி செய்திருக்கிறோம். அறை முழுவதும் பளிங்குக் கற்கள். குளியலறையில் வெந்நீருக்கான கெய்ஸர் பொருத்தியிருக்கிறோம்.

இப்போதெல்லாம் மர நாற்காலிகளையோ, வழக்கமான இரும்பு நாற்காலிகளையோ பார்த்தால் முகம் சுளிக்கிறார்கள். எனவே ப்ளாஸ்டிக் மோல்டட் நாற்காலிகளை வாங்கியிருக்கிறோம். பார்ப்பதற்கு அழகு. கல்யாண மண்டபத்துக்கும் கம்பீரம்.

பொதுவாக விறகடுப்பில் சமைக்கும்படிதான் கிச்சன் அமைக்கப்பட்டிருக்கும். இப்போதெல்லாம் காஸ் அடுப்பில் சமைக்க வசதி வேண்டும் என்கிறார்கள். (பூரி மற்றும் தந்தூரி அயிட்டங்களோ சமைத்து சூடாக பரிமாற வேண்டியிருக்கிறதே!)

பெரிய மனிதர்கள் வீட்டுக் கல்யாணமென்றால் டைனிங் ஹாலில் மிகுந்த கவனம் செலுத்துகிறார்கள். இதனால் அந்த ஹாலின் கான்க்ரீட் சுவரில் முழுவதுமாக செராமிக் ஓடுகளைப் பதித்து விட்டோம்.

ரிசப்ஷனில் மெல்லிசைக் குழுக்கள் இடம் பெறும் என்பதால் அதற்கான பல்வேறு மின் இணைப்புகளுக்கும் ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கிறதாம்.

இவ்வளவு இருந்தும் சமீபத்தில் ஒருவர் குறைபட்டுக் கொண்டாராம். "கல்யாண மண்டபம்னா எஸ்.டி.டி வசதியோடு கூடிய ஒரு தொலைபேசி இணைப்பாவது வேண்டாமா!"

**- ஜி.எஸ்.எஸ்**

**இந்த வெய்யில் காலத்தில் முகம், உடம்பெல்லாம் வேர்க்குரு வந்து விடுகிறது. எவ்வளவு பவுடர் போட்டாலும் போவதில்லை. ஜில்லென்று பன்னீர் தெளித்த சந்தனத்தைப் பூசிக் கொண்டு, இரவில் தூங்கினால், காலையில் எழுந்து பார்த்தால் நல்ல 'ரிலீஃப்' இருக்கிறது.**

**— சித்ரா ஸ்ரீதர்**

# உணர்ச்சிப் பூர்வமாக முடிவெடுக்காதீர்கள்!

சின்னத் திரையில் மிகவும் பிரபலமான அந்தப் பெண்மணியை பேட்டி கண்டபோது, "காதலித்துத் திருமணம் செய்து கொள்வது தான் புத்திசாலித்தனமானது. நான் மட்டும் பிரதமரானால் 'காதல் திருமணங்களுக்கு மட்டும்தான் நம்நாட்டில் இனி அங்கீகாரம் உண்டு' என்று சட்டமே போடுவேன்" என்று பளிச்சென்று சொன்னார். ஜாதி, மதம் போன்ற அத்தனை பாகுபாடுகளையும் மீறி நடந்த காதல் திருமணம் அது என்பதால் அவரது கருத்தின் ஆழத்தை நம்மால் புரிந்து கொள்ள முடிந்தது.

பிரபல நடிகை ஒருவர். இசைக் குடும்பத்தில் வந்தவர். அம்மாவின் ஆலோசனைகளையும் தடுப்புகளையும் மீறி வேறு மதத்தைச் சேர்ந்த ஒருவரைக் காதல் திருமணம் செய்து கொண்டார். இன்று கணவனும் மனைவியும் தனித்தனியாக வாழ்கிறார்கள். "அவரது மதமான கிறித்தவ முறைப்படி திருமணம் செய்து கொண்டோம். இந்த முறையில் திருமணம் செய்து கொண்டால் ஒரு பெண்ணால் விவாகரத்து கேட்க முடியாதாம். நான்



பாடுபட்டு சேமித்த பணத்தில் உருவான பங்களாவிலிருந்து என்னை விரட்டி அடித்துவிட்டு, அந்த வீட்டை படப்பிடிப்புக்கு விட்டு பணம் சம்பாதிக்கிறார். சட்டப்படி அவர் என் கணவர் என்பதால் காவல்துறையினராலும் ஒன்றும் செய்ய முடியாத நிலைமை" என்று ஒரு பேட்டியின் போது நம்மிடம் அவர் குமுறியதுண்டு. "ஏன்தான் காதலித்தோமோ?" என்று அவர் நொந்து கொள்வதை உணர முடிகிறது.

மற்ற திருமணங்களை விட காதல் திருமணங்கள் அதிகம் தாக்குப்பிடிப்பவையா? இந்தக் கேள்விக்கான விடை சம்பந்தப்பட்ட இருவரிடம் மட்டும் அல்ல, அவர்களைச் சுற்றியுள்ள சமூகத்தையும் பொறுத்தே அமைகின்றது.

ஆங்கிலோ இந்திய சமுதாயத்தில் திருமணத்திற்கு முன்பே ஒரு பெண் ஆணோடு பழகுவது சகஜம். இந்தக் காலகட்டத்தில் ஒருவருக்கொருவர் ஏற்றவரில்லை என்று கருதினால் பிரிந்து விடுவதும், வேறொருவரை டேட்டிங்கிற்கு தேர்ந்தெடுப்பதும் கூட அவர்களிடையே புதுமையல்ல. சொல்லப்போனால் அந்தப் பெண்ணின் அம்மாவே கூட இந்தப் போக்கை எதிர்ப்பதில்லை. காரணம் அவர்கள் சமூகத்தில் இது தவறல்ல.

அதே சமயம் "உன் மாமன் மகளை மட்டும் நீ கட்டிக்கலேன்னா, உன் குடலை அறுத்துத் தள்ளிடுவேன்" என்று பையனின் அப்பா கையில் அரிவாளோடு பேசும் இனங்களுக்கும் நம் நாட்டில் குறைவில்லை.

இந்த இரண்டுவித அதீத சமூகப் பிரிவுகளையும் விட்டு விட்டு மற்றவற்றை எடுத்துக் கொள்வோம்.

எனக்குத் தெரிந்த ஒரு குடும்பத்தில் இருபது வயது பெண்ணொருத்தி தான் பணி புரிந்த நிறுவனத்திற்குப் பக்கத்தில் உள்ள வியாபார கேந்திரத்தில் வேலை செய்த ஒருவனைக் காதலித்தாள். இருவரும் சைவம்தான் – உணவுப் பழக்கத்தில்; என்றாலும் மதப் பிரிவில் அல்ல. விஷயம் எப்படியோ பரவி விட பெண்ணின் பெற்றோர் "கற்பூரம் அணைத்து, 'இனிமேல் அவனை சந்திக்க மாட்டேன்னு' சத்தியம் செய். அதற்குப் பிறகுதான் நாங்கள் சாப்பிடுவோம்" என்று எமோஷனலாக ப்ளாக்மெயில் செய்தார்கள். அந்தப் பெண் இவர்களை விட சாமர்த்தியமாக – அதே சமயம் நேர்மையாக – தன்

குழந்தைகள் பள்ளிக்குச் செல்லும் காலம். புதியதாக செருப்பு, ஷூ போன்றவை அணிந்து செல்வதால் பாதங்களில் புண் ஏற்படுவது தவிர்க்க முடியாதது. தென்னை மரத்திலேயே முற்றிய பச்சை ஓலையை நெருப்பில் சுட்டு அதன் சாம்பலை தேங்காய் எண்ணெயில் குழைத்துப் போட்டால் ஒருசில நாட்களில் புண்கள் ஆறிவிடும். - பூங்கோதை கிருஷ்ணராஜ்

காய்களை நகர்த்தினாள்.

"நீங்கள் சாப்பிடும் வரை நானும் சாப்பிட மாட்டேன்" என்றாள். "எப்படியும் நான் அவரைத்தான் திருமணம் செய்து கொள்வேன். அவர் எனக்கு ஏற்றவர் என்பதைக் காரணங்களோடு விளக்குகிறேன் கேளுங்கள்" என்றாள். வேறுவழியின்றி வேண்டாவெறுப்பாகக் கேட்டுக் கொண்டார்கள். நாளடைவில் தங்கள் மகளின் பிடிவாதத்தைப் புரிந்து கொண்டு "மகளின் காதலன் நிஜமாகவே நல்ல குணங்கள் உள்ளவனா?" என்பதை மறைமுகமாக சோதித்துப் பார்த்தார்கள். திருப்தி வரவே (நாம் சம்மதிக்கவேண்ணா இவங்க பாட்டுக்கு பதிவுத் திருமணம் செய்து கொண்டு விட்டால்? என்கிற பயம் வேறு) திருமணத்திற்கு நாள் குறித்தார்கள். காதல் திருமணம் செய்து கொண்ட அந்த ஜோடி இன்றளவும் வெகு ஆனந்தமாக வசித்து வருகிறார்கள். இந்த விஷயத்தில் சற்று காலம் கடந்தாவது "பிரச்னை"யை திறந்த மனதுடன் அணுகிய பெற்றோர்கள் பாராட்டுக்குரியவர்கள். அதைவிட முக்கியமாக தன் பெற்றோருக்குத் தெரியாமல் திருமணம் செய்து கொள்ள மறுத்து, தொடர்ந்து இரு வருடங்களுக்கு அவர்களுடன் பல விவாதங்களைச் செய்து, தான் நினைத்ததை சாதித்துக் கொண்ட அந்தப் பெண்ணுக்கும் சபாஷ் போட வேண்டும்.

பொதுவாக பெற்றோர்கள் காதலுக்கு முட்டுக்கட்டை போடுவது ஏன்? தங்கள் மகளுக்குப் போதிய அனுபவ அறிவு கிடையாது என்ற எண்ணம், இவ்வளவு பெரிய விஷயத்தில் அவளால் சரியாகத் தேர்வு செய்ய முடியாது என்ற எச்சரிக்கை உணர்வு, மகளின் கல்யாண விஷயத்தில் தனது உரிமை மறுக்கப்படுகிறதே என்கிற சுயபச்சாதாபம்.

"என்னை மீறி நீ அவனைத் திருமணம் செய்துகிட்டா என் பிணத்தின் மேல்தான் உன் கல்யாணம் நடக்கும்" காதல் வசப்பட்ட பெண்ணின் பெற்றோர் இப்படிப் பேசுவார்கள் என்பது சிறு குழந்தைக்குக் கூடத் தெரியும் (உபயம் - சினிமா, தொலைக்காட்சி). "அப்படிச் சொல்லுவாங்களே தவிர எந்த அப்பா அம்மாவாவது தன் மகள் காதல் திருமணம் செய்து கொண்டவுடன் உயிரை விட்டிருக் காங்களா?" என்று ஒரு காதலர் தன் காதலியிடம் பேசிக் கொண்டிருந்ததை பூங்கா ஒன்றில் கேட்க நேர்ந்தது. பெற்றோர் இறக்கிறார்களோ இல்லையோ அவர்கள் மனத்தின் மென்மையான ஒரு பகுதி இறந்து விடுகிறது என்பது உண்மை.

நமது நண்பர் ஒருவர் தனது டீனேஜ் மகளைப் பற்றி மிகவும் பெருமையாகப் பேசிக் கொண்டிருப்பார். திடீரென்று அவர் தொடர்ந்து பல நாட்கள் அலுவலகத்துக்கு வரக் காணோம். பிறகு ஒருநாள் அவரை கடைத்தெருவில் சந்தித்த போது திடீரென்று பதினைந்து வயது கூடிப் போனது போல காணப்பட்டார். விசாரித்தபோது பொலபொலவெனக் கண்ணீர் சிந்தினார். "என் மகள் தான் வேலை செய்து வந்த நிறுவனத்தின் எம்.டியை காதலிச்சு, திருமணம் செய்துக் கிட்டா" என்றார். சமாதானம் செய்யும் நோக்கோடு "நடந்தது நடந்து போச்சு. நல்ல இடத்திலேதான் வாழ்க்கைப்பட்டிருக்கான்னு மனசை தேத்திக்குங்க" என்றேன். "அந்த எம்.டி. ஏற்கெனவே கல்யாணமானவன், அது தெரிந்தும் இந்தப் பெண் இதுக்கு சம்மதிச்சிருக்கா" என்றார். அதிர்ச்சியாக இருந்தது. அடிப்படை சிந்திக்கும் திறன் கூட இந்தப் பெண்ணுக்கு ஏன் இல்லாது போயிற்று? பெற்றோரோடு சேர்த்து தன்னையும் அல்லவா

ஏமாற்றிக் கொண்டிருக்கிறான் இந்தப் பெண்!

தொடர்ந்து சில மாதங்கள் காதலில் சிக்கியிருந்த ஓர் இளம்பெண் சமீப காலமாக காதல் வலையிலிருந்து விடுபட்டு விட்டாள். "முதலில் பேசிப் பழகியபோது அவரது பளிச் சென்ற தோற்றமும் கனிவான பேச்சும்தான் என்னை ரொம்பக் கவர்ந்தது. ஆனால் நாளடைவில் நாங்கள் திருமணம் செய்து கொண்டால் பல சிக்கல்கள் வரும் என்பது புரிந்தது. ஒருநாள் பேச்சோடு பேச்சாக "சிக்கனும் மட்டனும் சாப்பிடு என்று உன்னை நான் வற்புறுத்த மாட்டேன். ஆனால் எனக்காக அவற்றை நீ சமைக்க மாட்டாயா என்ன?" என்று கேட்டார். "மதத்தைப் பொறுத்தவரை நாம் இதுவரை கடைப்பிடித்து வந்த அவரவர் மதநம்பிக்கைகளையே தொடருவோம்" என்றார் பரந்த மனப்பான்மையுடன். ஆனால் அவர் அம்மா தங்கள் மதத்தில் தீவிர பற்று மிக்கவர் என்பதும், திருமணத்துக்குப் பின் எனக்கும் அவருக்குமிடையே இது தொடர்பாக சிக்கல்கள் ஏற்படும் என்பதும் புரிந்து போயிற்று. தன் அம்மாவை மிகவும் நேசிக்கும் அவரிடம் "உங்கள் அம்மா, நான் இருவரில் ஒருவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்" என்று நான் கூற வேண்டிய நிலைமை வரும் என்று தோன்றியது. யோசித்துப் பார்த்ததில் நாங்கள் திருமணம் செய்து கொண்டால் மகிழ்ச்சியை விட மனச்சிக்கல்களே அதிகம் இருக்கும் என்று தோன்றவே பிரிந்துவிட முடிவு செய்தேன்" என்றாள்.

இது உண்மையான காதல் அல்ல என்று சிலர் எண்ணலாம். ஆனால் உணர்வுபூர்வமாக மட்டுமல்லாமல் சிந்தித்தும் முடிவெடுக்கப் படும் திருமணங்கள்தான் நிலைத்து நிற்கும்.

இந்த விதத்தில் பார்க்கும்போது டீனேஜைத் தாண்டிய பிறகு பக்குவத்தோடு காதலை அணுகுபவர்களின் எண்ணிக்கை பெருகி வருவதால் தாக்குப்பிடிக்கும் காதல் திருமணங்களின் வெற்றி விதமும் அதிகமாகிக் கொண்டு வருகிறது. சொல்லப் போனால் தானே சுயமாக எடுத்த முடிவு தவறி விடாமல் காக்க வேண்டிய கௌரவமும், இல்லறம் கேள்விக் குறியானால், ஆறுதலாகப் பேசவோ சமாதானப்படுத்தி வைக்கவோ கணிசமானவர்கள் இருக்க மாட்டார்கள் ("சொன்னதை மீறிக் கிட்டு கல்யாணம் செய்துக்கிட்ட இல்லே? நல்லா அவஸ்தைப்படு") என்ற உண்மையும் சேர்ந்து கொண்டு காதல் திருமணக் கோட்டைகளில் ஏற்படும் விரிசல்களை உடனடியாக அடைத்து விடுகிறது.

- அருண்

# நீ உன்னைக் காதலி!

உடன்கட்டை ஏறுவது தடையப் பட வேண்டிய, கண்மூடித்தனமான வழக்கம் என்பதை நாம் எல்லோருமே ஒத்துக் கொள்வோம். பால்ய விவாகம் என்பது - குறைந்தது படித்தவர்களுக்கிடையே - பழங்கதையாகி விட்டது. விதவை என்றால் தோற்றத்திலும் தெரியவேண்டும் என்பதெல்லாம் கூட நடைமுறையில் மாறிவிட்டது.

ஆனால் ஒரு பெண் மறுமணம் செய்து கொள்வதை எந்த அளவுக்கு சமூகம் அங்கீகரிக்கிறது? அப்படி மறுமணம் செய்து கொள்ளும் ஒரு பெண் சில முன்னெச்சரிக்கைகளையும், எதையும் தாங்கும் இதயத்தையும் வளர்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறதா? மறுமணம் வெற்றிகரமாக அமைய என்ன செய்யலாம்? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் விடைகாண, நமக்குத் தெரிந்த மறுமணம் செய்து கொண்ட ஒரு பெண்மணியை அணுகினோம். "பெயர், புகைப்படம் இவற்றை தவிர்த்தால்தான் சில அந்தரங்க சம்பவங்களையும் ஆலோசனைகளையும் உங்கள் வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ள முடியும்" என்ற நியாயமான நிபந்தனையுடன் அவர் கூறியவை இவை -

"திருமணமாகி இரண்டு வருடங்களான நிலையில் என் கணவர் விபத்தொன்றில் இறந்து போனார். சிறு சிறு வாக்குவாதங்களும் பிரச்னைகளும் எங்களுக்கிடையே உண்டு என்றாலும் அவரிடமிருந்த நேசம் உண்டு எனக்கு. "இனி வாழ்வில் அர்த்தமே இல்லை" என்று தோன்றியது. ஆனாலும் உயிராசை யாரை விட்டது? பிறந்த வீட்டுக்குச் சென்றேன்.

எனக்கு வாய்த்தது ஒரு சராசரிக் கணவனாக இருக்கலாம். ஆனால் என் மாமியார் சராசரி மாமியாரை விட பல மடங்கு உயர்வானவர். வாரம் இருமுறையாவது என்னை சந்தித்து ஆறுதல் கூறுவார். சொல்லப் போனால் இடிந்து போய்விட்ட என் அம்மாவை விட, வருங்காலத்தைப் பற்றி திடமாக யோசிக்க வழி கூறிய என் மாமியார்தான் எனக்கு அதிக ஆறுதலாக இருந்தார்.

இந்தக் காலகட்டத்தில் தான் நான் வேறொருன்றை மறந்து போனது சுரீரென்று பட்டது. மாதவிலக்கு தள்ளிப் போய்க் கொண்டிருந்தது. டாக்டரிடம் போனதில் நான் இரண்டு மாதக் கருவை சுமந்து

கொண்டிருக்கிறேன் என்பது தெரியவந்தது. மகிழ்ச்சியடைவதா வேதனைப்படுவதா என்றே தெரியவில்லை. இந்தப் "பிரச்னை" உருவாகாமல் இருந்திருந்தால் ஓரிரு வருடங்கள் கழித்து என் மறுமணம் பற்றி ஆலோசனை கூறத் தொடங்கியிருப்பார்களோ என்னவோ, இப் போது உடனடியாக அதைப் பற்றி விவாதிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது அவர்களுக்கு.

"இன்றைய சமுதாயத்தில் ஒரு விதவையோ, விவாகரத்து பெற்றவளோ மறுமணம் செய்து கொள்வது ஒன்றும் ஆச்சர்யமான அல்லது அருவருப்பான விஷயம் இல்லை. ஆனால் குழந்தையோடு ஒரு பெண் மறுமணம் செய்து கொள்வது கஷ்டம். அவளுக்கும் அந்தக் குழந்தைக்கும் நாளைக்கு நிறைய மனச்சிக்கல்கள் தோன்றும்" என்றனர் பெற்றோர்.

என் அண்ணனும் தன் பங்குக்கு இதையே கூறினான். "என் குழந்தையும், உன் குழந்தையும் நம் குழந்தையோடு சேர்ந்து விளையாடுகிறார்கள்" என்று கூறுவதெல்லாம் மேலை நாட்டில் வேண்டுமானால் சாத்தியமானதாக இருக்கலாம். இங்கே இதெல்லாம் வீணான பிரச்னைகளைக் கிளப்பும்" என்றான்.

விஷயம் அறிந்ததும் என் மாமியார் திகைத்துப் போனார். "ஒரு உயிரைக் கொல்லச் சொல்ல என்னாலே முடியல்லே. அதுவும் எங்கள் வம்ச வித்தை அழிக்கச் சொல்லி நானே சொல்லலாமா? அதே சமயம் எனது இன்னொரு மகன் மூலமாக பேரனும் பேத்தியும் ஏற்கெனவே இருக்கிறார்கள். உன் வருங்கால நலனை யோசித்து நீ எந்த முடிவெடுத்தாலும் எனக்கு சம்மதம்" என்றார்.

என்னால் முடிவெடுக்க முடியவில்லை. இதை உணர்ந்தோ என்னவோ கடவுளே ஒரு முடிவெடுத்து விட்டார். சிறிய விபத்தொன்றில், இயற்கையாகவே எனக்குக் கருகலைப்பு நேர்ந்து விட்டது.

"வீட்டிலேயே இருந்தால் மனம் பேதலித்து விடும்" என்று என் அண்ணன் தனக்குத் தெரிந்த நிறுவனம் ஒன்றில் என்னை வேலைக்குச் சேர்த்தார். ஸ்டிக்கர் பொட்டு, வெளிர் நிறச் சேலை, லேசான ஒப்பனை இப்படிப் பட்ட தோற்றத்துடன் நான் வேலைக்குச் செல்வதில் யாருக்குமே உறுத்தல் ஏற்படவில்லை.

கணவர் இறந்து சுமார் ஒன்றரை வருடங்கள் ஆகி விட்டிருந்தன. எனக்கு மறுமணம் செய்து வைக்க எண்ணி பெற்றோர்கள் என் முடிவைக் கேட்டார்கள். முதலில் மறுத்தாலும் பிறகு குழப்பமாக இருந்தது. "மறைந்த என் கணவருக்கு துரோகம் செய்கிறேனோ? தவிர மறுமணம் செய்து கொண்டால் ஒருவித அலட்சியத்துடன் நடத்தப்படுவேனா?" என்றெல்லாம் எண்ணங்கள்.

என் மாமியாரும் என்னை மறுமணம் செய்துகொள்ளுமாறு வற்புறுத்தினார். "நான் உங்க பிள்ளைமேல் ஆழமான அன்பு வைத்திருந்தேன். அதே போன்ற அன்பை இன்னொருவரிடம் எப்படி காட்ட முடியும்? அப்படிக் காட்டினால் ஒருவருக்கு துரோகம் செய்வதாகவும், காட்டாவிட்டால் இன்னொருவருக்கு துரோகம் செய்வதாகவும் மனசாட்சி குத்திக்காட்டுமே" என்று மனம் உடைந்த நிலையில் நான் அழுதேன். சமாதானம் செய்துவிட்டு மாமியார் சென்று விட்டார்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த என் அண்ணன் "அவரைக் காதலிப்பதா? இவரை நினைத்து மருகுவதா? என்றெல்லாம் யோசிக்காதே. நீ உன்னைக் காதலி. உன் வருங்காலத்தை நேசி. அதுதான் நல்ல பாதையைக் காட்டும்" என்றான். எனக்குத் தெளிவு பிறந்துவிட்டதாக உணர்ந்தேன். எனக்குப் பொருத்தமான வரன்களை வீட்டில் தேடிய போது, "அவரும் திருமணமாகி மனைவியை இழந்தவராக இருந்தால் நல்லது. குழந்தை இல்லாதவர் என்றால் மேலும் நல்லது. விவாகரத்து பெற்றவர் என்றால் தீர விசாரிக்கணும்" என்றெல்லாம் பேசிக் கொண்டார்கள். அலுவலக தோழியொருத்தி, "நீங்க விவாகரத்து செய்தவர்னா மறுமணம் கொஞ்சம் கஷ்டமாக இருக்கும். கணவர் இறந்துட்டார் என்பதால் உங்களை மறுமணம் செய்துக்க கனிசமானவர்கள் முன்வருவார்கள்" என்றாள். மறுமணம் பற்றிய

**வெண்ணெய் காய்ச்சி இறக்கும்போது முருங்கை இலை இல்லாவிட்டால் ஓரிரு கல் உப்புடன், சிறிது கருவேப்பிலை, பெருங்காயம் போட்டால் சீக்கிரம் முறியும். வாசனையுடனும் இருக்கும்.**

**— உஷா நாராயண்**



இன்றைய சமுதாயத்தின் டிமாண்ட் - சிந்தனை போக்கை ஓரளவு கணிக்க முடிந்தது.

மருத்துவமனை ஒன்றில் பணிபுரியும் ஒருவர் என்னைத் திருமணம் செய்து கொள்ள முன்வந்தார். திருமணத்துக்கு முன் தனியே கொஞ்ச நேரம் பேசினோம். "உன் அழகு எனக்கு ரொம்பப் பிடிச்சுப் போச்சு" என்றார் பளிச்சென்று. மேலும் பேசிப் பார்த்ததில் இயல்பானவராகப்பட்டது. முதல் கணவரோடு இவரை ஒப்பிட்டுப் பார்ப்பதை கஷ்டப்பட்டுதான் தவிர்க்க முடிந்தது. அவரும் இப்படித்தானே என்னைத் தன் முதல் மனைவியோடு ஒப்பிட்டுப் பார்த்திருப்பார் என்ற குறுகுறுப்பு வேறு.

என் மாமியார் எங்கள் திருமணத்திற்கு வரவில்லை. "அங்கே என்னை அறிமுகப்படுத்தி வைப்பதில் சங்கடம் வரலாம்" என்றார் ஞானியாக. திருமணமான பிறகு அவரிடம் தம்பதியாகச் சென்று ஆசீர்வாதம் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று நினைத்தேன். அவரை யாரென்று என் தற்போதைய கணவரிடம் குறிப்பிட? சற்றே தயக்கத்துடன், "என் மாமியார் வீட்டுக்குப் போய் நமஸ்காரம் செய்துட்டு வரலாமா?" என்றேன். ஒரு நிமிடம் புரியாமல் பார்த்தவர் பிறகு "ஓ உன் முதல் கணவரின் அம்மாவா?" என்றபடி ஒத்துக் கொண்டார். அந்தக் குரலில் கசப்பு என்று சொல்ல முடியா விட்டாலும் ஏதோ ஒரு லேசான வித்தியாசம் தெரிந்தது. மறுமணம் செய்து கொள்ளும் பெண்கள் இதுபோன்ற நிலைகளில் மனம் உடைந்து போகாமல் இருக்க தங்களைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும். சில சமயம் அவர் சாதாரணமாகப் பேசுவது கூட நம் மனநிலையில் தவறாகப்படலாம். எனவே வார்த்தைகளைக் கொட்டாமல் இருப்பது நல்லது.

ஒருமுறை கணவரோடு மார்க்கெட் சென்றிருந்தபோது, என் மறுமணத்தைப் பற்றி அறியாத மிக தூரத்து உறவினர் (வட இந்தியாவிலிருந்து அப்போதுதான் சென்னை வந்திருந்தார்) என்னைப் பார்த்து, "என்னம்மா, உன் கணவன் இவ்வளவு சின்ன வயசிலே போய்ச் சேர்ந்துட்டானே?" என்று கண்ணீரோடு என் கையைப் பிடித்து ஆறுதல் கூறினார். இதுபோன்ற நேரங்களில் மறுமணம் செய்து கொண்ட பெண்ணின் மனத்தில் குற்ற உணர்ச்சி தோன்றக் கூடாது.

இன்று நான் நான்கு வயது குழந்தைக்குத் தாய். "நாம் இவரை திருமணம் (மறுமணம் அல்ல) செய்து கொண்டிருக்கிறோம் என்ற எண்ணத்தை அழுத்தமாக விதைத்துக் கொண்டதிலேயே பாதி வெற்றி கிடைத்து விட்டது. வழக்கமான திருமண வாழ்வில் கூட உரசல்களுக்கு நிறைய வாய்ப்பு உண்டு. எனவே இரண்டாவது மனைவி என்பதால்தான் சில கருத்து வேறுபாடுகள் என்று நினைக்கக் கூடாது. இப்படி முடிவெடுத்ததில் மீதி பிரச்னைகளும் விலகின.

கணவனை இழந்த மற்றும் விவாகரத்து செய்த இளம் பெண்களுக்கு என் ஆலோசனை இதுதான். யாரை மறுமணம் செய்து கொள்கிறீர்கள் என்பதை பலமுறை யோசித்து பேசிப் பார்த்து முடிவெடுங்கள். ஆனால் மறுமணம் செய்து கொள்ளத் தயங்க வேண்டாம்."

- சரண்யா

விசேஷ நாட்களில், பண்டிகை நாட்களில் நாம் கோலம் இட்டு செம்மண் சுற்றி இட்டபின் (இது வெள்ளை மாவு கோலத்திற்கு மட்டுமே பொருந்தும்) நடுவில் சிறிது மஞ்சள் குங்குமம் மற்றும் சிறிது உதிர்த்த பூக்களை வையுங்களேன். கோலத்தின் கோலம் கொள்ளை கொள்ளும்!

- லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்

பக்கமும் இருக்கட்டும். எங்கள் குடும்பத்திற்கு பிரதிநிதியாக நான் வந்திருக்கிறேன். வேறு வீட்டிற்குச் சென்றவளானாலும் நானும் இந்த வீட்டின் ஒரு பாகமே" என்று சொல்லாமல் சொல்கிறாள்.

அதேபோல் மணப் பெண்ணின் சகோதரன் பொரியை எடுத்து சகோதரியின் கையில் கொடுக்க, அதை அவள் ஹோமத்தில் போடுகிறாள். உன் கணவன் நீண்ட ஆயுளோடு, சகல செளபாக்கியங்களோடு இருக்க, குடும்பம் தழைத்தோங்க நான் (என் குடும்பத்தின் சார்பில்) கடவுளை வேண்டிக் கொள்கிறேன்'' என்கிற இந்த ஹோமம் இரு குடும்பங்களும் ஒருவருக்காக ஒருவர் என்கிற பந்தத்தை உறுதிப்படுத்துகிறது. அதுமட்டுமல்ல, கல்யாண பட்சண வகையில் முறுக்கு என்பது நிச்சயம் உண்டு. அன்றிலிருந்து ஒவ்வொரு விசேஷத்திற்கும் (சீர்வகையில்) முறுக்கு உண்டு. "சுற்றும் சூழலுமாக" அதாவது என்றும் சுற்ற பற்றத்தார் சூழ உறவு முறையை பலப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதாக ஐதீகம். உறவு இல்லாவிட்டால் உலகம் ஏது?"

**ஃபெபி ஃபிராங்க்ளின்:** ''திருமணம் என்பது "ஜாய் பெல்ஸ்" முழங்க மணமகன் போடும் திருமண முடிச்சு என்றாலும், தாலி முடியும் சமயத்தில் இரு வீட்டினரைச் சார்ந்தவர்களில் குறைச்சலாக அரை டஜன் பேர்கள் தாலி முடிய உதவி செய்வார்கள். திருமணத்திற்கு முதல் நாள் 'நலங்கிடுதல்' உண்டு. அன்று மணப்பெண்ணிற்கு மணப்பையனின் வீட்டினரும், மணப்பையனுக்கு மணப்பெண் வீட்டினரும் நலங்கு வைப்பார்கள்.

அதே போல் திருமணத்தன்று ரிசப்ஷன் இருக்கும். அன்று உறவினரின் முதிர்ந்த ஒருவரோ அல்லது மிக முக்கியமான நண்பரோ அவரை 'Master of ceremonies' அல்லது 'Toast Master' என்று கூறுவோம். முன்னின்று தலைமை வகித்து, இரு வீட்டினரின் உறவினர்களையும் அறிமுகப்படுத்துவார். இப்பொழுது இருப்பவர்கள் மட்டுமல்லாமல் இதற்கு முன் இருந்த இரு தலைமுறையினர் வரையில் தெரியப் படுத்துவார். திருமணத்திற்குப் பிறகு மணமக்கள் எப்படி இருக்க வேண்டும், உறவு முறைக்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும், ஒரு வீட்டார், மற்றொரு வீட்டாரிடம் எப்படி விட்டுக் கொடுத்துப் பழக வேண்டும், பிற நலனில் அக்கறை காட்ட வேண்டும் என்பதை எடுத்துக் கூறுவார். பிறகு ரிசப்ஷன் கேக் வெட்டும் சமயத்திலும் முக்கிய நண்பர் ஒருவர் முன்னின்று கேக் வெட்ட உதவி செய்து இரு வீட்டு உறவினர்களையும் உபசரிப்பார். இவையெல்லாம் இரு வீட்டு உறவையும் பலப்படுத்தத்தான் என்பது நன்கு புரிகிறது."

சரி பணச் சிக்கனம், நேரச் சிக்கனம் இவற்றைக் கடைபிடித்து நிகழும் சம்பிரதாயங்கள் இல்லாத வேறு வகைத் திருமணங்களைப் பற்றிக் கேட்டபொழுது, "சுற்றத்தார், உற்றார் இல்லாமல் சம்பிரதாயங்கள் இல்லாமல் நிகழும் ரிஜிஸ்டர் கல்யாணம் சட்டபூர்வமாக சரியாக இருக்கலாம். ஆனால் சம்பிரதாயமும், சுற்றமும் இல்லாமல் திருமணம் எப்படி சந்தோஷமாக அமையும்?" என்கிறார்கள் ஒரே குரலில்.

**- மாலதி சந்திரசேகரன்**

**திருமணத்திற்குப் பின் ஒருநாள் பிள்ளை வீட்டார் பெண் வீட்டாருக்கு "சம்பந்தி விருந்து" வைக்கிறார்கள். பெண் வீட்டார் அந்த விருந்தைச் சுவைப்பதற்காக பிள்ளை வீட்டார் இருக்கும் இடத்திற்கு செலவழித்துக் கொண்டு நெருங்கிய உறவினர்களுடன் போக வேண்டியிருக்கிறது.**

**திருமணத்திற்கு மறுநாள் கட்டுச் சாதக் கூடைகளுடன், விருந்து போட்டு பிள்ளை வீட்டாரை அனுப்புவது என்ற பழக்கம் இருக்கிறது. அன்றைய விருந்தின் செலவை ஏன் பிள்ளை வீட்டுக்காரர்கள் ஏற்றுக் கொள்ளக் கூடாது? அந்த விருந்தை "சமபந்தி விருந்து" என அறிவித்து பெண் வீட்டாரை தகுந்த மரியாதையுடன் கூப்பிட்டு சாப்பாடு போட்டால் பெண் வீட்டாருக்கு பிரயாணச் செலவும் மீதமாகும்; பிள்ளை வீட்டாருக்குத் தங்கள் ஊருக்குச் சென்று சமையல்காரர்களை ஏற்பாடு செய்து வேறு பல ஏற்பாடுகளைச் செய்யும் வேலையும் மிச்சமாகும்.**

**- என். பங்கஜம்**

